ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணே நம :

# பரமார்த்த தரிசனமென்னும்

# பகவத்கீதை வசனம்.

## இஷ்டதெய்வ நமஸ்கார வடிவ மங்கலம்.

ஐவகைப் பொருளு நான்கு கரணமுங் குணங்கள் மூன்றும்
ப்வினை யிரண்டு மொன்றி யாவருந் திகைப்ப நின்ற
ரய்யிரு ளகல ஞானப் பொருட்கதிர் விரித்த புத்தேள்
வள ராழிச் செங்கட் கண்ணனைக் கருத்துள் வைப்பாம்."

நூற்சிறப்பு.

டத் ர்த்த தரிசனமென்பதன் பொருள் உண்மைப்பொருள்
தம் ன்பதாம். பகவத்கீதை யென்பதன் பொருள்-பகவா
தரு (-சுனனுக்கு) அருளிச செய்யப்பட்ட தத்துவமென்
-ற பகவானென்பதன் பொருள்-ஆறு குணங்களை யுடையவ
ர்ன் ; அக்குணங்கள்-ஐசுவரியம, வீரியம், கீர்த்தி, திரு,
வராக்கிய மென்பனவாம். பகவானென்றது இங்குக்
யனர்த்தியை. கிருஷ்ணனென்னும் பதத்தின் பகுதி கிருஷ்
பக்க அதன் பொருள் (முக்காலத்திலும் பொய்யென்று
றும் ல்லாத) சத்து என்பதாம ; ண (அல்லது ணன்) என்
தவ தியின் பொருள்-(மிகு பிரியத்திற்கு விஷயமான)
ந ன்பதாம். இதனால், கிருஷ்ணனென்பதன் பொருள்
வடிவினனென்பது பெறப்பட்டது; படவே, கிருஷ்ண
ம் பதம் சதாநந்த வடிவப் பிரஹமத்தைக் குறிப்பிப்ப

கார்த்தங்களை யறிவதற்கேற்ற புத்தி சாமர்த்தியமில்லாத
ளுக்கு அறம், பொருள், இன்பம், வீடென்னும் புரு

ஷார்த்தங்களின் சாதன முண்டாம் பொருட்டு, வியாச ப
திருவாய் மலர்ந்தருளிய பாரதமென்னும் நூலின் மத்தியி
சத்திர மண்டலங்களின் மத்தியில் சந்திரமண்டல மிரு
போன் றிருப்பதாகிய பகவத்கீதை 18-அத்தியாய மு
தாம். அது, வேதம்-கர்ம காண்டம், உபாசனு காண்டம்,
காண்டமென மூன்று காண்ட வடிவினதா யிருப்பதுபே
மூன்று ஷட்க வடிவினதா யிருக்கின்றது. பகவத்கீதை
முதலாவ தாறத்தியாயம் கர்ம நிஷ்டையையும், இரண்ட
றத்தியாயம் பகவத் பக்தி நிஷ்டையையும், மூன்ருவ த
யாயம் ஞான நிஷ்டையையும் கூறுதலின், இது வேதம் பே
தாம்; இன்னுமது முதலாவ தாறத்தியாயத்தில் துவம்ப
நிரூபணத்தையும், இரண்டாவ தாறத்தியாயத்தில் தத்ப
நிரூபணத்தையும், மூன்ருவ தாறத்தியாயத்தில் அசிப
நிரூபணத்தையும் செய்தலின், தத்துவ மசியென்னும் மகா
யத்தின் பொருளேயும் போதிப்பதா யிருக்கின்றது. இக்
தால் இது சர்வ வேதாந்தசார சங்கிரகமா யிருக்கின்றத
ஞல், பகவத்கீதை அதிகாரி புருஷர் யாவரும் வாசித்த
யிருக்கின்ற தென்க.

கிருஷ்ண பரமாத்மா பரமார்த்தத்தைச் சர்வ மு
க்கும் அருச்சுனனுக் குபதேசஞ் செய்வது வாயிலாக
செய்தன ரென்பதிங் குணாதற்பாலதாம்.

## நூல் வரலாறு.

வேதவியாச மகா முனிவரது கருணையால் ஆங்க
பெறுவனவற்றை யறியு மாற்றலேப் பெற்ற சஞ்சய
பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் ஏற்பட்டுள்ள யுத்
நடப்பனவற்றை யெமக்குத் தெரிவித்தல் வேண்டுமெ
ராஷ்டிரர் கேட்டுக் கொண்டதற் கிணங்கி, யுத்தட
வதற் கேற்படுத்தப்பட்ட குருக்ஷேத்திரத்திற்கு வந்து,
தக்கதோ ரிடத்தின்கண் நின்று, அங்கு நிகழ்வனவற்றை
சென்று திருதராஷ்டிரர்க்குத் தெரிவித்துக்கொண்டு வந்
ஆங்கு அருச்சுனனுக்கும் ஸ்ரீ கிருஷ்ண பகவானுக்கும்
செய்வதுபற்றி யுத்த ஆரம்ப காலத்தில் நடைபெற்ற வினு
யையுங் கூறினர். அவ் வினுவிடையே பகவத்கீதையாம்.

நூல்.

# 1-அருச்சுனன் சோக வத்தியாயம்.

யுத்- திருதராஷ்டிரர் பாண்டவரது விஜயப் பிரதாபத்தைப் மூலமாகக் கேட்டிருந்தலால், தமது புத்திரராய கௌர தோல்வி யடைந்து விடுவரோ வென்று மச்சத்தால் தமது புத் ஜயத்தை விரும்பி, சஞ்சயரை நோக்கி வினவுதல்.

திருதராஷ்டிரர்-சஞ்சயரே! பிரமாண நூல்கள் புண்ணிய மியென்று புகழ்ந்து கூறுகின்ற குருக்ஷேத்திரத்தின் கண் நட கைவராகிய பாண்டவரும நமது புத்திரராகிய கௌரவ போர செய்யுங் கருத்துடையவராய் வந்து ஒருமிக்கக் கூடி பின்னர், அவ்விடத்தின் கண் யாது செய்தனரென்று கேட் அதற்குச சஞ்சயர் மிக விரிய சொற்களால் ஆங்கு நிகழ்ந் வற்றைக் கூறுவாராயினர். *

சஞ்சயரது விடை

(திருதராஷ்டிரரே! யுத்த வாரம்ப காலத்தில்) பெ சனையும் சர்ப்பக்கொடியு முடையவனுகிய துரியோதனன் (

---

* நெல் முதலிய பயிர்களி னுற்பத்திக்கும அவற்றின விர்த்திக உத்தமமான விளைநிலம் காரணமா யிருப்பதுபோல, தருமத்தினுற்பத் கும் அதன் விர்த்திக்கும் காரணமா யிருப்பது புண்ணிய பூமியாம்; குருதேசத்தின்க ணிருத்தலால், புண்ணிய பூமி குருக்ஷேத்திரமெ -றப்படுகின்றது. சஞ்சயரென்பதன் பொருள் (காமம, வெகுளி முத ற்றை) நன்ருக வென்றவ ரென்பதாம்.

திருதராஷ்டிரர் யுத்தஞ் செயதறபொருட்டுத் தர்ம க்ஷேத்திரத் யடைந்த பாண்டவர் முன்னரே தரும சொரூபியரா யிருத்தலின், த பக்கத்திலும் தமது பகைவர் பக்கத்திலு முண்டாகும் இம்சையாற் சே றும் பாவத்திற்குப் பயந்து யுத்தஞ் செய்யாதொழிவராயின், நமது புத் தவருது ராஜ்ஜியத்தைப் பெறுவர்; சுபாவத்தில் பாவ சொரூபியராயு நமது புத்திரர் அந்தத் தர்ம க்ஷேத்திரத்தின் மகிமையாலே, அந்தக்க சுத்தி யுடையவ ராவாராயின், அதனுல் தாம் வஞ்சகமாகப் பாண் ரிடத்தினின்றும் அபகரித்த ராஜ்ஜியத்தை மீண்டும் அவர்க்குக் கொடு விடுவர்; அதனாலே அவர்கள் யுத்தமின்றி நாசமுறுவரென்னுங் கருத்த 'நமது பகைவராகிய பாண்டவரும், நமது புத்திரராகிய கௌரவரும்... விடத்தின்கண் யாது செய்தனர்' என்று சஞ்சயரை நோக்கி வின ரென்பதாம்.

னாத திருஷ்டத்தியும்நன் முதலிய சூரவீர புருஷரால் அ வகுத்து நிறுத்தப்பட்டுள்ள தனது பகைவராகிய பாண்டவர சேனைகளைப் பார்த்து, பின்னர் வில்லாசிரியராய துரோணாசா ரருகே சென்று, அவ்வாசிரியரை நோக்கி, பெருந் தேரையுடை எனதாசிரியரே! நீர் வீமனையும் அருச்சுனனையுமொத்த வில் ராகிய யுயுதானன், விராடன், துருபதன், திருஷ்டகேது, சே தானன், காசிராஜன், புருஜித்து, குந்திபோஜன், சைப்பிய முதலிய வேந்தரும், வில் வீரருள் சிறந்தவனாகிய அபிம முதலிய மகாரதராய பல அரசரும, தலைவர்களாகப் பொருந் திரண்டு வந்துள்ள பாண்டவரது பெருஞ் சேனையைப் பார்ப்பீர வென்று மேக முழக்கம்போலக் கர்ச்சித்துக் கூறி, பின்னு கூறுவானானான். $

(பாண்டவரது சேனையிலுள்ள சூரவீர புருஷர்களைக்கண் இவர்தம்மை வெல்வதெவ்வாறென்று தனக்குண்டாய பயத் யடக்கிக்கொண்டு, எனக்குப் பாண்டவர் சேனையைக் கண் பயமுண்டாகவில்லை யென்பதை மேக முழக்கம்போலக் கர் துப் பேசுவதால், துரோணாசாரியர்க்குத் தெரிவித்து நி துரியோதனன் எனது சேனையிலும் சூர வீர புருஷ ரி கின்றனரென்று அவர்தம்மை யவர்க்குக் குறிப்பிட்டுக்கூறக்கரு எனதாசிரியரே! கங்கா புத்திரராகிய பீஷ்மாசாரியரும், அங்

---

$ பிறரது உதவியின்றிப் பதினாயிரம் போர்வீரரோடெதிர்த்துப் போ செய்யுந் திறமையும் படைக்கலப் பயிற்சியில் மிகு தேர்ச்சியு முடையவ மகா ரதனென்றும், அளவிறந்த தேர்வீரரோ டெதிர்த்துப் போர் செய்யு திறமையும் படைக்கலப் பயிற்சியில் மிகு தேர்ச்சியுமுடையவன் அதிர னென்றும, தானொரு தேரி லிருந்துகொண்டு தன்னை யொத்த மற்றொ தேரி லிருக்கின்றவனோடு போர்செய்யுந் திறமையுடையவன் ரதனென்று அவனிலுங் குறைந்தவன் அர்த்தரதனென்றும் கூறப்படுகின்றனரென்க.

சூரவீர புருஷருள் மிக அப்பிரசித்தனாயுள்ள துருபதன் புத்திரனா திருஷ்டத்தியும்நன் தலைமையாக விருநது அணிவகுதது நிறுத்தியுள் பாண்டவரது சேனையை நம்மனோருள் ஒரு சாதாரண சூரவீர புருஷ வென்று விடுவான்; அங்ஙனமாக, எதன் பொருட்டு, நீ பாண்டவ சேனையைக கண்டு பயமடைகின்றாயென்று துரோணாசாரியர் தன் கேளாதிருததறபொருட்டு, துரியோதனன், அவர்க்குப் பாண்டவர சேனையிலுள்ள சூரவீர புருஷரது பெயர்களைக் குறிப்பிட்டுக் கூறினனெ பதாம்.

அரசர்க் கரசனும் எனதுயிர்த்தோழனுமாய கர்ணனும், எமது செல்வத்துணைவனுய அசுவத்தாமனும், சயத்திரதனும், கிருபாசாரியரும் எனது சேனையிலிருக்கின்றனர்; தேவரீரும் இருக்கின்றீர்; முன்மற் குறிப்பிட்டவரே யன்றி அநேக வாசரு மிருக்கின்றனர். இவர் சூர வீர புருஷர்கள் எனக்கு வெற்றியுண்டாதலையே தமக்குச் செல்வமாக விரும்புவதல்லாமல் வேறெதனையும் விரும்பாதவர்; இன்னு மவர்கள் (கௌரவராகிய) எங்களுக்கொரு குற்றமுண்டாவதாமாயின், அதனைத் தமதுயிரை விட்டேனும் நீக்குதலை மேற்கொண்டிருப்பவர்.

சேனாதிபதியாக வந்துள்ள எங்களது பாட்டனாராகிய பீஷ்மாசாரியர் தமது கட்டளையால் அணிவகுத்து நிறுத்திக் காத்துள்ள பதினோரக்குரோணி யளவினதாகவுள்ள எனது சேனா சமுத்திரம், ஆலோசித்து நோக்குமிடத்து, வீமசேனன் சூர வீர புருஷர் கண்டு வியந்து பேசுமாறு அணிவகுத்து நிறுத்திக் காத்திருக்கின்ற பாண்டவரது ஏழக்குரோணி யளவினதாகவுள்ள சேனைக்கொத்த வல்லமை யுடையதாகுமோ? ஆதலால், தேவரீர் ஏனைய சூர வீர புருஷருடன், பகைவர் சேனைவந்து வெற்றி பெறுதலையே பயனாகக் கருதிப் போர்முகத்தில் நிற்கின்ற பீஷ்மாசாரியரிடத்து நெருங்காதவாறு நமது சேனைகளைத் தக்கவாறு இனி யணிவகுத்து நிறுத்தி, விரைவாகப் பீஷ்மாசாரியரை எல்லாப் பக்கத்திலுமிருந்து காத்தருளல் வேண்டுமென்று கூறினன்.

## கௌரவ சேனையின் கிளர்ச்சி.

அவ்வா றவன் கூறிய சமயத்தில், யாதவப்படை வீரரும் மற்றப்படை வீரரும் அரணாகச் சூழ்ந்துள்ள சேனா சமுத்திரத்தின்கண்ணுள்ள பீஷ்மாசாரியர், அறிவுடையோர் யாவரும் வஞ்சகக்குணமுடைய கௌரவர் பாண்டவர்க்குச் செய்த தீவினையே அவருயிர் யமனுக் குணவாகுமாறு கொடும் போரை யுண்டாக்கியதென்று கூறவும், அரசர்க் கரசனாகிய துரியோதனனது உள்ளம் தற்கால சந்தோஷ மடையவும், பகைவர் அஞ்சி நடுக்கமுறவும், சிங்கம்போலக் கர்ச்சித்துத் தமது சங்கை வாயில் வைத்தூரக்க வூதினர். இவரிங்ஙனம் தமது சங்கை யூதிய வளவில், துரியோதனனது சேனையின்கண் எவ்விடத்தும் அநேக சங்கங்கள் முழங்கின; அநேக வாத்தியங்கள் ஒலித்தன; அவற்றால் பதி

ஷோரக்குரோணி யளவினவாகப் போர் செய்யத் திரண்டுள்ள
துரியோதனனது சேனைகள் போர்செய்யு முயற்சியோடு ஆரவாரஞ் செய்தன. ¶

## பாண்டவ சேனையின் கிளர்ச்சி.

கௌரவ சேனையில் இவ்வாறுய கிளர்ச்சி யுண்டாயவளவில், பதினன் குலகங்களையும் பெற்றவராய ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா, தமது ‡ பாஞ்ச ஜந்யமென்னுஞ் சங்கைத் தமது திருக்கரத்தா லெடுத்து, சப்த மேகமுந் திரண்டு முழங்குவதுபோலவும், சப்த சமுத்திரமும் பொங்கிச் சப்திப்பது போலவும், பதினன் குலகத்தையும் சங்கார காலத்தில் எடுத்துண்ட மிகச் சிவந்த பவளம் போன்றுள்ள தமது வாயில்வைத் தூதினர். அச்சங்கினெலி கௌரவரே! அவரைச் சேர்ந்தவரே! பாண்டவர் (கண்ணனுகிய) எனக் குயிரை யொத்திருப்பதனுல், இந்தப்போரில் உங்களுக்குப் தப்பிப் பிழைத்த லுண்டாவதில்லை யென்று கூறுவதை யொத்திருந்தது.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் சங்கத்தொனி செய்த பின்னர் தருமன், வீமன், அருச்சுனன், நகுலன், சகாதேவனென்பவர்கள் முறையே அநந்த விஜயம், பௌண்டரம், தேவதத்தம், சுகோ

---

¶ ராஜ நீதியும் தாமமுமுடைய அரசரன்றி, அவையில்லாத அரசர் போரில் வெற்றிபெறுவதில்லை யென்பது பிரசித்தமாமாகலின், பீஷ்மாசாரியர் துரியோதனனது உள்ளம் தற்கால சந்தோஷமடையத் தமது சங்கை யூதினரெனக.

துரியோதனன் தனக்குத் துணையாகப் பதினோக்குரோணி சேனையிருக்கவும், பாண்டவரது ஏழக்குரோணி சேனைக்கொத்த வல்லமை யுடையதாகுமோ எனது சேனையென் றையுற்றமைக்குக் காரணம், தனது சேனையில் பாண்டவ சேனையை வெல்லத்தக்க சூர வீர புருஷ ரில்லாமையைக் கருதியேயா மெனக. உத்தர குமாரனைச் சாரதியாகக்கொண்டு, ஒருவனுக வந்த அருச்சுனனை நாம் விராடபுரச் சண்டையில் வெல்லாது தோல்வி யடைந்தோமே! அவன் ஏழக்குரோணி சேனையுடனிருக்கும் போது அவனையும், அவனுக் குதவியாகவுள்ள சேனையையும் வெல்வ தெப்படி யென்றும் துரியோதனன் ஐயுற்றுனெனக.

‡ பஞ்சஜன னென்னும் அசுரனது வயிற்றைக் கிழித்து அவனுடைய எலும்பினின்றும் எடுக்கப்பட்டமையால், விஷ்ணுவினது சங்கு பாஞ்ச ஜந்யமென்று கூறப்படுகின்றது.

டும், மணிபுட்பக மென்னும் தமது சங்குகளை இடியையொத்த தொனி பகைவரது செவியிற்படுமாறு ஊதினார்கள். இவர்க ளிவ்வாறு சங்குகளை யூதியவுடன் காசி ராஜன், சிகண்டி, திருஷ்டத்தியும்நன், விராடன், சாத்யகி, துருபதன், திரௌபதியின் புத்திரரைவர், அபிமந்யு ஆகிய சூரவீரர் பலரும் தத்தம் சங்கங்களைத் தனித் தனியாக வெடுத் தூதினார்கள். அவர்க ளூதுகின்ற சங்குகளின் ஓசை (தனது பிரதித்தொனி சப்தத்தால்) சென்று போர்முகத்து நின்றுள்ள கௌரவர்களது இருதயங்களைப் பேதித்து, அவர்களைச் சேர்ந்துள்ளார் யாவரும் அஞ்சி நடுங்குமாறு பூமியின் கண்ணே யன்றி ஆகாயத்தினும் வியாபித்து விட்டது. அதனால் இருதிறத்துச்சேனைகளும் போர்தொடங்கும் நிலைமையிலிருந்தன. அப்போது சுவேதாசுவங்களைப் பூட்டிச் செலுத்துந் தேரின்மீது காண்டீபமென்னும் வில்லுடன் போர்க்கோலமாகவுள்ள அருச்சுனன் ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்து மனத்தளர்ச்சியோடு ஒரு வசனங் கூறுவானானான். (சுவேதாசுவம்—வெள்ளைக் குதிரை.)

அருச்சுனனது ஆரம்ப வசனம்.

உலக மனைத்தையும் படைத்துக் காத் தழிக்கும் ஸ்ரீ கண்ணபிரானே! பீஷ்மர், துரோணர் முதலிய சூர வீர புருஷருள் யாவர் எம்மோடு போர் செய்தற் பொருட்டு இந்த யுத்த பூமியின்கண் வந்தனர்; போர் செய்ய வந்துள்ள இவர்தம்முள் யாவரோடு யாம் போர்செய்யத் தொடங்கலா மென்று எவ்வளவு காலவளவில் யான் செவ்வையாக அறிந்து கொள்ளுதல் கூடுமோ அவ்வளவு காலவளவும், விருப்பமாகத் தேவரீர் செலுத்தும் எனது தேரை இவ்விரண்டு சேனையின் நடுவே செலுத்தி நிறுத்தக் கடவீரென்று கூறினான் அர்ச்சுனன்.

பின் யாது நிகழ்ந்ததென்று திருதராஷ்டிரர் வினவியதற்குச் சஞ்சயர் விடை கூறல்.

அருச்சுனன் இங்ஙனம் தம்மை நோக்கிப் பிரார்த்தித்த வளவில், ஸ்ரீ கண்ணபிரான் தாம் செலுத்தும் அருச்சுனனது தேரை

---

**எம்மைப் பாதுகாக்குமாறு எனக்குச் சாரதியாக வெழுந்தருளியுள்ள பகவானே! யானெனது தேரைச் செலுத்த வேண்டுமென்று தேவரீரை நோக்கிக் கூறுவதற்குத் தேவரீர் சினங்கொள்ளா திருத்தல் வேண்டுமென்பான் 'விருப்பமாகத் தேவரீர் செலுத்தும் எனது தேரை' என்று கூறினானென்க.**

யுத்த பூமியினகண நிறைய வநது நிறகும இரண்டு சேனையிறா நடுவே செலுததி, பீஷ்மா துரோணா முதலிய சூரவீர புருஷாக கெதிரே நிறுததி, ஒருமிததுத திரணடுளள இககௌரவ சேனையை அருசசுனு! நீ காணக கடவாயென றருளிச செயதனா அவா கூறியவாறே அருசசுனன பீஷமா முதலாகவுளள அரசரையும மறறவரையும தனனெதிரே நனறுகக கணடு, கருணை நிரம்பின வனுயத தழுகழுதக சொலலோடும கலஙகுகினற மனததோடும ஸ்ரீ கணணபிரானை நோககிச தன ததியளவாகச சிலசொலலத தொடஙகி, சுவாமி! பூரிசிரவசு முதலிய தநதைமாரும, பீஷமா சோமதததா முதலிய பாடடனமாரும, துரியோதனன முதலிய சகோதரரும, துரோணா கிருபா முதலிய குருமாரும, அசுவததா மன ஜயததிரதன முதலிய தோழாகளும, கிருதவாமா, பகதத தன முதலிய மிததிராகளும, இநத யுதத பூமியில இராசசியததை விருமபிப போாபுரிய வநத எமபொருடடு, தமது உயிரைவிடத தொடஙகி யிருககினறனரெனறு கூறி, பின துரியோதனுடியா மக களான லடசமணன முதலிய புததிரரும, அவாதம புததிரரும, சலலியன சகுனி முதலிய அமமானமாரும இநத யுததத்தி லிறநது படுவரே யெனறு அவா மீது கிருபை செயது, அதனு லுணடாய சோகததால மனசகலசக மடைநது, வருதத முற்றவ னுயினுன அஙஙனமாய அருசசுனன மணடும ஸ்ரீ கணணபிரானை நோககி எஙகளைத சேவீர காததருளலவேணடு மெனனும குறிபபினுககுச சில சொலலுவாஞனை

எமககுத தாயை யொததுளள சுவாமியே! யுதத பூமியி னிடதது எமமோடு போாபுரிய வநது நிறகினற பீஷமா முத லியவரைக காணுநதோறும எனது வாயானது செவவையாகப பேச வாராததுந தவிர முகமும மலாசசியடையாது வாடுகினறது, மனமோ ஒனறையும ஆராயநதறிய மாடடாது சுழலுகினறது, உடமபோ தீயேயெனறு கூறுமாறு வெபபமுறறு வாடுகினறது, யானே செவவையாக நிறகச சமாததனுகா திருககினறேன, காணடீப மென்னும விலலோ என கையினினறும நழுவி விழு கினறது, சமீப காலததில துனப முணடாதலைக குறிபபிககும துாநிமிததம பல (இடததோள துடிததல முதலியனவாகத) தோன்றுகினறன யான் எனதனபிறகுரியவராய பீஷ்மா முதலிய வரைககொன்று, அதனாலடையும பயனையோ சிறிது மறியாதிருக

ன்றேன்; எனக்குப் பீஷ்மர் முதலாயினோரைக் கொல்வதால் ரும் பயன் சிறிதுங் காணப்படாமையால், யான் யுத்த பூமியில் வற்றி பெறுவதன்கண் விருப்ப மில்லாதவனு யிருக்கின்றேன். தனல், இப் பகைவரை வெல்லுதலுடனே அரசாட்சியை யுத்தங் காரணமாக நீ யடைதல் கூடுமென்று என் சோகத்தை நோக்கித் தேவரீர் குறிப்பாக வுணர்த்துகின்றது யாது காரணம் பற்றியோ? (பகைவரை வெல்லுதல், அதனுல் ராஜ்யத்தைப் பெறுதல், அதனுல் விஷய சுகத்தையனுபவித்த லென்பனவற்றை விரும்பாதுள்ள எனக்கு) அதனைத் தேவரீர் அருளிச்செய்தல் வேண்டும். *

அருச்சுனன் எனக்குப் போர் செய்வதன்கண் விருப்ப முண்டாகவில்லை யென்று கூறல்.

(தனது விருத்தராய மாதா பிதா முதலாயினோரைப் பாதுகாத்தற் பொருட்டு, ஒருவன் அறமல்லாத வற்றையுஞ் செய்யலாம்; அஃதவனுக்குத் தோஷமாகா தென்று அறநூல் கூறுதலின், அருச்சுன! உனக்கு ராஜ்யத்தின்கண் விருப்ப மின்றாயினும், உனது சம்பந்திகளுக்கு ராஜ்ய போகங் கிடைத்தற் பொருட்டு, நீ யுத்தத்தின்கண் பிரவிர்த்தித்தல் வேண்டுமென்று பகவான் வினவுவா ரென்னும் ஆசங்கையை மேற்கொண்டு, மீண்டும்) மலையை யொத்த தோள்களையுடைய பகவானே! ராஜ்யம், அவ் விராஜ்யத்தால் வரும் போக வேதுவான விஷயம், அவ்விஷயத்தா லடையும் சுகமென்று கூறப்படுவனவற்றை யெச்சிலர் பொருட்டு உலகத்தார் முயற்சி செய் தடைவரோ, அவர்கள் தமது பொருள்களிலும் தமது வாழ்நாளிலுமுள்ள விருப்பத்தை நீக்கி வந்து, வரிசையாக ஒருவர் முன் மற்றொருவராக இந்த யுத்த களத்தின்கண் நிற்கின்றனர். இவர்களுள் சிலர் எமது ஆசிரியராவர்; சிலர் தந்தையராவர்; சிலர் புத்திரராவர், சிலர் மூதாதையராவர்; சிலர் மாதுலராவர்; சிலர் அம்மான்மாராவர்; சிலர் பௌத்திரராவர்; சிலர் மைத்துனராவர்; சிலர் சம்பந்திகளாவர். இவர்களோடு போர்செய்வதா லுண்டாகும் பயன் ராஜ்யம் விஷயம் போகம் என்னும் இவையேயாம். யானோ

*தேவரீர் உறவினர் முதலாயினோரைக் கண்டு சோக மோக மடையா திருத்தல்போல, உம்முடைய அடியவனுய என்னையும் சோகமோகமில்லாத வாறு செய்யவேண்டுமென்னுங் குறிப்பினனுய், அருச்சுனன் இங்ஙனங் கூறினனென்க.

அவற்றை விரும்பா திருக்கின்றேன். அதனால் யாங்கள் கருணை யில்லாது அந்தப் பீஷ்மர் முதலாயினோரைக் கொன்றால், எங்க ளுக்குப் பாவ முண்டாதலே யன்றி யொரு சுகமும் எவ்விடத் துமுண்டாவதில்லையாம். (தேவரீர், நீ கருணையால் இப்பீஷ்மர் முத லாயினோரைக் கொல்லா தொழியின், அவர்கள் ராஜ்யத்தின் மீதுள்ள விருப்பத்தால் உன்னை நிச்சயமாகக் கொன்றுவிடுவார் கள், அதனால், நீ அவர்களைக் கொன்று ராஜ்யத்தைப் பெறுதல் வேண்டுமென்று கூறுவீராயின், எனக்கு ராஜ்யத்தின்கண் விருப்ப மின்மையின், யான் அவர்களோடு போர் செய்யமாட்டேன்,) அவர்கள் தமது வில் திறத்தால் என்னைக் கொல்வதா யிருப்பி னும், யான் அவர்களைச் சுவர்க்க மத்திய பாதாள மென்னு மூவுல கும் எனக்குக் கிடைப்பதா யிருப்பினும் கொல்ல மாட்டேன், அத்தன்மையனான நான் இம் மண்ணுலகத்தைப் பெறுதற் பொருட்டு, அவர்களைக் கொல்வேனோ? கொல்லவே மாட்டேன்.

(அருச்சுனா! நீ பீஷ்மர் முதலாயினோரைக் கொல்வது பாவ ஹேதுவா மென்று கருதுவாயாயின், அவர்களைக் கொல்வ தொழிந்து, அரக்குமாளிகையில் தீ மூட்டல் முதலிய கொடுஞ் செய்கைகளை உங்கள் பொருட்டுச் செய்த துரியோதனன் முத லாயினோரைக் கொல்லக் கடவாய், அதனா லுங்களுக்குப் பாவ முண்டாகாதென்று பகவான் கூறுவாரெனினும் ஆசங்கையை மேற்கொண்டு மீண்டும் பகவானே!) அரசராயினோர் தமது குலத்தை நாசமாமாறு செய்தலா லுண்டாகின்ற தோஷத்தை யும், உண்மையாய நட்பின ரிடத்துத் துரோகஞ் செய்வதா லுண்டாகின்ற தோஷத்தையும், ஆததாயிகளான துரியோதனன் முதலாயினோர் விசாரித் தறியாது மறந்தாலும் மறக்கக் கடவர், குலத்தைக் கெடுத்தலும், நட்பினர்க்குத் துரோகஞ் செய்தலும் பெரும் பாதகச் செயலா மென்பதை விசாரித்தறிந்த நான் அவற் றைக் கருதா தொழிவேனோ? †

---

† தீக் கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல்வார், கள்வர், ஆறலைப்பார், சூறைகொள்வார், பிறனில் விழைவா ரென்றிவர் முதலாயி னோர் ஆததாயிகளென்று கூறப்படுவர், இவர்களை யரசர் கண்ட மாத்திரத் தில் கொல்லவேண்டு மென்று அர்த்த சாஸ்திரங் கூறுகின்றது; அதனால், ஆததாயிகளாகிய துரியோதனன் முதலாயினோரை அருச்சுனா! நீ கொல்ல லாம்; அதனா லுனக்குப் பாவ முண்டாகாதென்று பகவான் கூறுவரென அருச்சுனன் கருதி, தரும சாஸ்திரம் எந்தப் பிராணிக்கும் மக்கள் இம்சை செய்தல் கூடா தென்று கூறுகின்றது, அஃது அர்த்த சாஸ்திரத்திலும் மேலாயது; அத் தரும சாஸ்திரத்தை மேற்கொண்டுள்ள எனக்கு ஆததாயி களாய துரியோதனன் முதலாயினோரைக் கொல்வது அருவருப்பாகத் தோன் றுகின்றது; அதனால், அக்கொலைத் தொழிலை மேற்கொள்ள யான் விரும்பா திருக்கின்றே னென்பது மேலே அருச்சுனன் கூறியதன் கருத்தாம்.

அருசசுனன் யுததததால வருங கேடடினைக் கூறல்

ஒருவனது குலம நாசமாகவே, அதனால அககுலததார பரமபரையாக அனுஷடிதது வருகினற குலததின சாவ தாமஙகளும நாசமடைவனவாம அததாமஙகள நாசமாகவே, நனமாாககததி லொழுகச செயயும புருஷரிலலாமையால எஞசியுளள குலததை அதாமந தன வசபடாககிச சொளளுவதாம, அநாசார வடிவமாய அதாமம வாது அசகுலததினரைத தனது வசஞ செயது கொளளவே, அககுலததிலுளள குலமாசா யாவரும தமது சனமாாககததினினறும பிறழாது வியபிசாரிகளாய விடுவா, அவாகள வியபிசாரிகளாகவே, உலகததினகணுளள குல முறறும நெறி தவறிக கெடடுபபோம போகவே, அநத ஸதிரீகளிடதது ஜாதிக கலபபாய புததிராக ளுணடாவாாகள, ஜாதிக கலபபானது அககுலசதிலிருபபவாககும அக குலககோடு கூடாமல அது கெடுதறகுரிய செபலைக கருகிச செயதவாககும மீளா நரகததைக தருவதாம அசாாதிக கலபபால உணடாகுந துனபஙகளை யெவவளவெனறு வரையறுககுக கூறுவேன? கூறுதல முடியாது முனனே பிறநது சுவாககததை யடைநதுளள ஜாதிக கலபபானவரது பிதிரரும தமமைக குறிததுச சானதருமஞ செயயும புததிரரைபபினனே பெறுமையால தமககுப பொருநதுவதாய பிணடக கிரியை ஜலககிரியைகளைச காம பெறுதலிலலாது சுவாககததினினறும பிறழநது, இருள வடிவ நரகஙகளில வீழாகிறபா பரமபரையாக வருகினற குல ததை மபாகச செயதவாககும ஜாதிக கலபபுடைய குலததிலிருபபவாககும அறவினை செயதறகணவிருபபந தோனறுவதிலலையாம அதனால, அவாகளிடதது ஜாதி தருமமும குல தருமமும குறைநது கெடுகினறன, ஜாதி தருமமும குலதருமமும குறைநது கெடவே, அதனால அவாககுமீளாத நரக முணடாகினற தெனறு பெரியாா கூறுகினறனா

அருசசுனன தான குண தோஷஙகளை யறிநதிருநதும்,
பநது மிததிரா முதலாயினோரைககோல்ல யுதத பூமியின்கண்
வநதமைபறறி, தனனையே பழிததுக கூறல

யான மினனலை யொதத விரைவிலழியுந தனமையதாய ராஜய சுகததை விருமபித தம முடமபினகணுளள உயிரை வீணாகவே போகக யுதத பூமியினசண வநது நிறகினற துரியோதனன முதலாயினோரைக கொலலத துணிநத தீவினை யுடையவ

ஞயினேன் இஃதென்ன வியப்பு! மிகக கொடிய பெரும் பாவத்தை யடையுமாறு யான கருதி விட்டனன் யான் ஆயுத பாணிகளாயுள்ள துரியோதனன முதலாயினோ முன்னே ஆயுத களை யெடாது போா செயவதொழிநது நினறல, இததுரியோத னன் முதலாயினோ என்னைக கோபிததுக கொலவரோ? கொலல மாட்டாா அவாசள என்னைக கொலவதாயினும, குணதோஷங களை யறிநதுள்ள எனககு இககொலையைப பொறுததுக கொளளு தலே க்ஷேமந தருவதாமெனறு கூறினன அருசசுனன அங்ஙனங கூறிய அருசசுனன பின யாது செயதனனெனறு திருதராஷ்டி ரா வினவுவாரெனறு கருதிய சஞசயா திருதராஷ்டிரரே! மலையை யொதத தோளையுடைய அருசசுனன தனதபிபபிராயததை ஸ்ரீ கிருஷ்ண பகவானிடததுக கூறி, விலலுடனே அமபு நழுவி விழ வும, கணகளில நீா ஆறுபப பெருகவும கேரினம்து செயவ தறி யாது செயலற்றிருநதன னெனறு கூறினா

1 அருசசுனன சோக வததியாயம முறறிறறு

---

## 2-சாங்கியயோக வத்தியாயம்

---

பகவான் அருசசுனனது சோகம் நிவிாத்தியாமாறு அவனுககுச சாங்கிய யோகததை யுபதேசிததல்

அருசசுனன எநதப பிராணியையும கொலலாமையும, பிட சானன போஜனமுமாமெனனு மிரணடுமே எனககு மேலாய தாமமா மெனனும புததியோடு யுததஞ செயவதனகண பராமுக மாயினனெனறு சஞசயா கூறியதைக கேட்டு நமது புததிராககே இராசசியம நிசசயமாகக கிடைததுவிடுமெனறு ரநதோஷமுறறு, அதனபின யாது நிகழநதது எனறு வினவிய திருதராட்டிரரை நோககி, சஞசயா அவரது துபாசையை நிவிாததி செயதற பொருட்டுப பினனா நிகழநததைச கூறததொடஙகி, திருதராஷ் டிரரே!

இவவாறு செயயததககது இது, செயயததகாதது இதுவெனனும விவேகம விலகுமாறு பீஷமா துரோணா முதலாயினோரைக கொலவது பாவகாரியமாமே யெனறு உண்டாகின்ற சிநேகவடி வக கிருபையால தான செயதறகுரிய காரியததை யறியாது,

றுனது தேரின்மீது கணணீா ஆருயப பெருகச சோகததை யுடைநதிருநத அருசசனன சோகததினினறும நீஙகிக கடைத தேறுதறகுரிய சாதனஙகளை யாராயநது, அவனுககு அவறறை ஒருவிதமாக, உயாநதோா சசிதாநநத வியாபக வடிவினனெனறு சிறபபிததுக கூறுகினற சிருஷணபகவா னுபதேசிககததொடஙகி, அருசசுன! இசசோகமானது அவிவேகிகடகும பேடிகடகும கிடைததற குரியதாம, நீஙகாத அபகீாததியைத தருவதாம, செயயததககது இது, செயயததகாதது இது வெனனும உனது பூரண விவேகததைக குறைபபதாம, துனபந தருவதற குரியனவறறுள மிகவுந துனபந தருவதாம, மீளாத நரகததிற றளளுவதாம, உனனை யொதத க்ஷததிரியாககுத தகுதியறறதாம இஃது இநத யுதத பூமியினகண உனனை யெநத வழியால வநதடைநத தென பதை யானறியா திருசகினறேன பரமேசுவரனோடு மெதிாததுப போா செயத அருசசுன! உனககு இசசோகம தகுதியுடைய தாகாது, நீ இசசோகததை நீககிப பகைவரோடு போா செயய முயலவாயாக எனறு கூறினா $

அதற கருசசுனன் விடை கூறல

பகவானவவாறு கூறியதைக கேடட அருசசுனன பகவானே! புஷபம, சநதனம, அடசதை முதலியவறறால, மனம வாககுக காயமெனனுந திரிகரண சுததியோடு மிகவும பூசை செயதறகுரியவராகிய பீஷமா துரோணா முதலாயினோரை யானெவவாறு இநத யுதத பூமியினகண கொடிய அமபுகளால கொலலுதற குரியவனேவன? அவாகளைக சொலல வுடனபட மாடடேன (அஙஙனமாயின, அருசசுன! நீயெவவாறுயதல கூடு மெனறு தேவரீா வினவுதல கூடும பகவானே!) பகைவரெனறு கருதி, கலவி கேளவி முதலியவறறால மிகப பெரியவராயுளள இநதப பீஷமா துரோணா முதலாயினோரைக கொனறு பெறும

---

**$ மோட்சததில விருபபுடையானுககும, சுவாககததில விருபபுடையானுககும, கீாததியில் விருப்புடையானுககும, சுவதாமததினினறும விலாததி யடைதல தகுதியற்றதாம, அஙஙனமாக, மோடசம, சுவாககம், கீாததி யென்னுமிம மூன்றனிடததும விருபபுடைய நீ இசசோகததை யடைதல் எவ்வாற்றானும தகுதியறறதாம, அதனால், இசசோகம இநத யுதத பூமியின்கண் உன்னை யெந்த வழியால வநதடைநத தெனபதை யானறியா திருக்கின்றே னென்று பகவான கூறினரெனக.**

பெரிய ராஜ்ய போகத்தினும் இவர்களது மகிமையைக் கூறி, பிற ரிடத் திரந் துணவுண்டல் மேன்மையானதா மன்றோ? இவ்வாறு செய்யாது, இந்த யுத்த பூமியின்கண் இந்தப் பீஷ்மர் துரோணர் முதலாயினோரது உயிரை யமனுண்ணுமாறு செய்வேனாயின், யான் பின்னனுபவிக்கும் போக மனைத்தும் அவர்களது உதிரத் தாற் சமைத்த சோற்றை யுண்பது போலவாம். (அருச்சுனா! க்ஷத்திரியர் பிச்சை யன்ன முண்பது கூடாது; யுத்தஞ் செய்வது அவர்கட்குச் சுவதர்மமா மென்று சாஸ்திரங் கூறுதலின், சுவதர்ம மாயுள்ள யுத்தமே உனக்கு மேன்மை தருவதா மென்று பகவான் கூறுதல் கூடுமென்று கருதி, யான் எனக்குச் சுவதர்ம மாவதால்) வில்லிற்றொடுத்துள்ள அம்பைப்பிரயோகித்து, பீஷ்மர் துரோணர் முதலாயினாரோடு போர் செய்வதோ? அதனை யொழித்துப் பிச்சையெடுத் துணவுண்டலோ? எனக்கு மேன்மை தருவது? அதனை யானறியா திருக்கின்றேன். தேவரீர் அருளியவாறு யான் போர் செய்யத் தொடங்கினாலும், அவர்களென்னை வெல்வாரோ? யானவர்களை வெல்வேனோ? அதனையும யானறியா திருக்கின் றேன். இந்த யுத்த பூமியின்கண் போர்செய்ய வந்துள்ள பீஷ்மர் துரோணர் முதலாயினோருள் சில ரிறப்பாராயின், அதனாலே என் னுயிர் என்னுடலை விட்டு நீங்கிப் போவதாம். அவர்களே எங்க ளோடு நீங்கள் போர் செய்யக் கடவீராகவென் றறைகூவி, வெற்றி பெறுதலை முன்னிட்டு நிற்கின்றனர். உற்பத்தி நாச மில்லாத தனி முதற்பொருளா யிருக்கும் பகவானே! அக்காரணத் தால் எனது ஞான நேத்திரத்தைப் பீஷ்மர் துரோணர் முதலாயி னோரிடத்து யான் வைத்துள்ள காதலென்னுமிருள் மறைத்து விட்டது; அஃதங்ஙனம் மறைக்கவே, யான் கடைத்தேறு மார்க் கத்தை யெவ்விடத்துங் காணாதிருக்கின்றேன்; அவ்வாறிருத்த லால், எனக்குப் பொருந்துதற்குரிய மேன்மையை யறியா திருக் கின்றேன். எனக்கு அம்மேன்மையைத் தேவரீ ருரைத்தருளல் வேண்டு மென்று கூறினான்: அங்ஙனங் கூறினவன் பின்னும்,

### அருச்சுனன் பகவானை நோக்கி என் சோகம் நீங்குதற்குரிய சாதனத்தைத் தேவரீர் கூறல் வேண்டுமெனல்.

(புத்திர னல்லாதவனுக்கும், மாணாக்க னல்லாதவனுக் கும் பிரஹ்ம வித்தையை யுபதேசஞ் செய்தல் கூடாதென்று சாஸ்திரங் கூறுகின்றது; அருச்சுனா! நீ அவ்விருவருள் எவனு

ன்றும்; ஆனால், சிநேகிதனானவை; அதனால் யான் உனக்கெவ்வாறு பிரஹ்ம வித்தையை யுபதேசிப்பேனென்று பகவான் கூறுதல் கூடுமென்றுட்கொண்டு) செந்தாமரை மலர்போலுந்திருக் கண்களையும் மேகம்போலும் திருமேனியையு முடைய சுவாமி! சோகத்தினின்றுங் கடக்கு மார்க்கத்தை நீ மாணாக்கனாய்க் கேளாதுள்ளவளவும் யான் உனக்கு உபதேசிப்பனோ வென்று கருதுவீராயின், அங்ஙனம் தேவரீர் கருதுதல் கூடாது. இப்போதடியேன் எனக்குத் தேவரீரே துணை யென்று கருதி, உம்மைச் சரணாகதியாக வடைகின்றேன்; தேவரீரைத் தண்டம்போலப் பூமியின்மீது விழுந்து நமஸ்காரஞ் செய்கின்றேன்; நான் உம்முடைய மாணாக்கனாய் உம்முடைய பாத தாமரையை யென் சிரசிற் றரிக்கின்றேன். அதனால், தேவரீர், அருச்சுனா! நீ அஞ்சவேண்டாமென்று கூறி, இந்த யுத்த பூமியின்கண் யான் செய்தற்குரிய காரியத்தில் என்னைச் செலுத்தி, எனக்கு அனுக்கிரகஞ் செய்வீராக.

(அருச்சுனா! நீ சர்வ சாஸ்திர பண்டிதனா யிருத்தலின், நீயே விசாரஞ்செய்து, செய்தற்குரிய காரியத்தைச் செய்யக்கடவாய்; எனக்கெதன் பொருட்டு நீ மாணாக்கனாதல் வேண்டுமென்று பகவான் கருதுதல் கூடுமென் றுட்கொண்டு பின்னும்) பகவானே! பகையின்றிப் பூலோகத்தை யாளும் பெருஞ் செல்வத்தையே யன்றி, சுவற்ப காலத்திற் கெடுவதாகாத சுவர்க்க லோகத்தை யாளும் மாட்சிமையைப் பெறுவதா யிருப்பினும், என்னுடைய சரீரத்தையும் இந்திரியங்களையும் வருத்துகின்ற இச்சோகம் ஒரு போதும் அடையாமலும், அஃதொரு சமயம் வந்தாலும் வருத்தாமலும் அதனைக் காக்கத்தக்க வுபாயத்தை யிவ்வுலகத்தி லெவ்விடத்தும் யானறியா திருக்கின்றேனென்று கூறி யழுதுகொண்டு மௌனமாக விருந்தான்.

## பகவானது உபதேசம்.

இவ்வுலக போகமும், சுவர்க்கலோக போகமும் புண்ணிய கர்ம முடையவர்க்குக் கிடைப்பனவாம்; ஆனால், அப்போகங்கள் சில காலத்தில் அழிவனவாம்; அதனால், அப்போகங்கள் சோகத்தை நிவிர்த்திசெய்தற் குரியனவன்று மென்று கரு அவற்றை வெறுத்திருந்த அருச்சுனன் பின் யாது செய் னென்று திருதராஷ்டிரர் கேட்க, சஞ்சயர் பின்னிகழ்ந்ததை கூறத் தொடங்கி, திருதராஷ்டிரரே! செய்யாறு பெருகி யோ

வதுபோலத் தன் மார்பின்கண் கண்ணீராறு பெருகியோட அழுது கொண்டு மௌனமாக விருந்த அருச்சுனன், பீஷ்மர் துரோணர் முதலாயினோர் மீது தான் கொண்டுள்ள காதலென்னுங் கொடிய அக்கினியால் வெந்தழியாவாறு, பிரதியுபகாரத்தை விரும்பாது பிராணிகளைக் காப்பதையே தமக்குக் கடமையாகக் கொண்டுள்ள கிருஷ்ணமூர்த்தி தமது உபதேச மென்னும் கிருபா வருஷத்தால் அச் சோகாக்கினியை யவிக்கத் திருவுளங் கொண்டார்; அங்ஙனங் கொண்டவர் அவ்விரண்டு சேனைகளின் நடுவே சோகத்தை யடைந்து, அழுதுகொண்டு மௌனமாக விருந்த அருச்சுனனைக் கருணையோடு நோக்கி, மேகத்திற்றோன்றும் சிறு மின்னல் போலச் சிறிது புன்னகைசெய்து, அருச்சுனனுக்கு நீங்காதுள்ள சோகம் நீங்குதற்குரிய சாதனத்தை யாராய்ந் தறிந்து, கிர்த்தோஷமாய் அநாதியாயுள்ள வேதங்களெடுத்துக் கூறி முடியும் பொருளாய், சர்வத்திற்கு முதற் பொருளாய்ப் பரமாத்மாவாயுள்ள தம்மை (சிதாநந்த வடிவப் பிரஹ்மத்தை) யுள்ளவாறு அவ்வருச்சுனனுக்குத் தாமே உபதேசிக்கத் தொடங்கி, அருச்சுனா! ஆத்மா சித்தாயும் உடம்பு சடமாயு மிருத்தலினாலும், சித்து நித்தியமாயும் சடம் அநித்தியமாயு மிருத்தலினாலும், நானென்பதன் பொருள் எவ்வகையாலும் உடம்பாகா திருத்தலினாலும், எவரும் எவராலும் எதனாலும் சாவதே யிலராவர்; அஃதிருக்கட்டும்; மற்றொன்று கூறுகின்றேன்; கேட்கக் கடவாய். இந்த யுத்த பூமியின்கண் மரணமாய் விடுவாரென்று நீ யெண்ணுகின்ற பீஷ்மர் துரோணர் முதலிய மகாரதா யாவரும், கெடுதற்கரிய தீவினைகளைச் செய்யாது, நல்வினைகளைச் செய்து வந்தமையாலே இந்த யுத்த பூமியின்கண் மரண மடைதற்கு முன்னரே சுவர்க்க லோகத்தை மிக மேலாக அடைவதற்குரியவரா யிருக்கின்றனர்.

அருச்சுனா! நீ சோகித்தற் குரியவராகாத பீஷ்மர் துரோணர் முதலாயினோரைக் குறித்துச் சோகித் தழுதலாலும், சொல்லற் கரிய நற்குணங்களை யுடைய பண்டிதர்கள் பேசுவது போலக் கிரமமாகப் பேசுவதாலும், பிராந்தி மிக்கு மனமயங்கி யிருக்கின்றனைபோலும்! இம்மயக்க புத்தி பண்டிதனைய வுனக்குத் தகுதியுடையதாகாது; அதனால், இச்சோகத்தை யொழிக்கக் கடவாய்; இனி யாம் கூறும் இவ் வசனங்களையும் கவனமாய்க் கேட்கக் கடவாய். ஆத்மா இத்தன்மையது; அநாத்மா இத்தன்மைய தென்

பனவற்றைச் செவ்வனே ஆராய்ந் தறிந்துள்ள பண்டிதர்கள் இறந்தொழிந்த வுறவினரைப் பற்றியும், இறவாது வாழும் உறவினரைப் பற்றியும் சோகமடைதலிலராவர்; அவர் சோகமடையாதிருத்தலை அருச்சுனா! நீ அறியாய் போலும்! அருச்சுனா! நீ இத்தேகத்தையே ஆத்மாவென்று கருதி, பீஷ்மர் துரோணர் முதலியோரைப்பற்றிச் சோக மடைந்திருக்கின்றனை. இங்ஙனம் சோகமுறுகின்ற நீயும் பீஷ்மர் துரோணர் முதலிய இந்த வீரர்களும், உனக்கிப்போது குருவாகவிளங்குகின்ற யானும், சுருதி யுக்தி யநுபவ வாயிலாக ஆராயுமிடத்துச் சேதனமாக இருக்குந் தன்மையால், உலகத்தில் இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் * எக்காலத்திலும் இருக்கின்றோம்.

(அருச்சுனா! நீ உடம்புண்டாம்போது உயிருண்டாகின்றது, அது நாசமாம்போது உயிரும் நாசமாகின்றதென்று கருதுதல் கூடும்; அவ்வாறு கருதுதல் தவறுடையதாம்.) இறப்பதென்பது உடம்பேயாம்; அவ்வுடம்பினு ளிருக்கின்ற ஆத்மா இறவாது எப்போதும் ஒரு தன்மையதாக நிர்விகாரமா யிருப்பதாம்; அது தேகத்தின்க ணிருக்குந் தன்மையைக் கூறுகின்றேன், கருத்தாய்க் கேட்கக் கடவாய். இவ்வுடம்பு முன் தானடைந்துள்ள பாலப் பருவத்தை விட்டு யௌவனப் பருவத்தை யடைந்து, அதன்பின் வயோதிகப் பருவத்தை யடைவதாம்; அஃதங்ஙன மடையினும், அதற்கு எவ்வகையாலும் வேறாயுள்ள ஆத்மாவிற்கு அவை சம்பவிப்ப தில்லையாம். †

ஆத்மாவிற்கு அநித்தியத்துவம் எவ்வகையாலும் சம்பவியாதெனல்.

அருச்சுனா! உடம்பினிடத்துப் பாலப்பருவத்திற்குப் பின் யௌவனப்பருவமும், அதன்பின் வயோதிகப்பருவமும் வருதல்

---

* எக்காலத்திலும் இருக்கின்றோ மென்று பகவான் கூறினமையால், ஆத்மாவிற்கு உற்பத்தி நாச மில்லை யென்பதும், பலவா யிருப்பன பரிச்சின்னமாய் அநித்தியமா யிருத்தல் நியமமாகலின், ஆத்மா உபாதியால் பலபோல விருக்கின்ற தென்பதும், நான் நான் என்னும் வியவகாரம் நிகழாதவிடம் யாண்டு மின்மையின், அஃதெத்தேசத்திலும் வியாபகமா யிருக்கின்ற தென்பதும் பெறப்பட்டன வென்க.

† பகவா னிங்ஙனம் கூறினமையால், பாலப்பருவம் யௌவனப்பருவம் வயோதிகப்பருவ மென்னும் அவஸ்தைகள் உடம்பின் தருமமன்றி, ஆத்மாவின் தரும மன்றென்பது பெறப்பட்டதென்க.

போல ஆன்மாவினிடத்து முன்னுடம்பு நீங்க அதன்பின் மற்றோ ருடம்பு (சூக்குமவுடம்பு வாயிலாக) வருகின்றது; அவை யங்ஙனம் வருமிடத்து எனது வடிவமாய ஆன்மாவோ செத்துப்பிறப்பதில்லை; செத்துப் பிறப்பது உடம்பேயாம்; அதனால், ஆத்மா நித்தியமா மென்பதைச் சுருதி யுக்தி அனுபவ வாயிலாக வறிந்த தீர புருஷன், அங்ஙன மறிந்தபின் யானெனதென்னு மபிமானம் சிறிது மில்லாதவனா யிருப்பன்; அதனால், அவன் தன்னுடம்பு அழிந்தொழியுங் காலத்திலும் எதனையும் என்னுடையதென்று கருதான்; அதனால் ஒரு சிறு துன்பத்தையும் அடையான். இதனை நீ சிந்தித்து நோக்கித் துன்பமடையா திருப்பாயாக.

இங்ஙனமாயின், உஷ்ணம்—சீதம், துக்கம்—சுகமென்றற் றொடக்கத்துத் துவந்துவங்களை நிஷ்கிரியமாயுள்ள ஆத்மா யான் சுகி, யான் துக்கியென் றடைவது யாது காரணத்தாலென்று அருச்சுனா! நீ வினவுவாயாயின், அதற்கு விடை கூறுகின்றேன்; கேட்கக் கடவாய். உண்மையாக ஆராய்ந்து நோக்குமிடத்து ஐந்து கூறுபா டுடையனவாயுள்ள செவி முதலிய இந்திரியங்களும், ஓசை முதலிய விஷயங்களும், முறையே அறிவன அறியப் படுவன வென்னும் சம்பந்த முடையனவாய்த் தம்முட் கூடித் தம்மோடு சம்பந்தமாயுள்ள அந்தக்கரணத்திற்கு அத் துவந்துவங்களை யுண்டாக்குகின்றன; அதனால், அந்தக்கரண தர்மங்களாய அத் துவந்துவங்கள் அவ் வந்தக்கரணத்தின்கண் பிரதிபிம்ப ரூபமாயுள்ள ஆத்மாவினிடத்துத் தோன்றுகின்றன; உண்மை நோக்கில் ஆத்மாவினிடத்துத் துவந்துவங்கள் சம்பவிப்பதே யில்லையாம்.

சீதம் உஷ்ணம், சுகம் துக்கம் என்றற் றொடக்கத்துத் துவந்துவங்களின் தன்மையைக் கூறுகின்றேன்; கேட்கக் கடவாய். அத் துவந்துவங்கள் அஸ்திரமாய் நாசோற்பத்தி யுடையனவா யிருக்கும். அதனால், அருச்சுனா! நீ அத் துவந்துவங்களை அந்தக்கரண தருமமென் றுணர்ந்து பொறுத்துக்கொள்ளக் கடவாய். அருச்சுனா! நீ அத் துவந்துவங்களைப் பொறுத்துக்கொள்வதனால் வரும் பயன் யாதென்று வினவுவாயாயின், அதற்கு விடை கூறுகின்றேன்; கேட்கக் கடவாய். அத் துவந்துவங்களைத் தனது அந்தக்கரண தருமமாகச் சந்தேகவிபரீதமில்லா துணர்ந்து பொறுத்துக்கொண்டிருக்கிற தீர புருஷனை அத் துவந்துவங்கள் தனது நிலையினின்றும் கலங்கச் செய்வதில்லையாம்; அதனால், அவன் சர்வதுக்க

ர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோட்சத்தை யடைதற் குரியவனாகின்றான். துவந்துவங்களைப் பொறுத்துக் கொள்வதன் முக்கியப் பயன் மோட்சமாம்.

[ஆத்மா அநாத்மா (தேகாதிப் பிரபஞ்சம்) போலத் தோன்றுதலின், அது சத்தா அசத்தா என்றருச்சுனன் சங்கித்தல் கூடுமென்று பகவானுட்கொண்டு] மண்ணின் காரியமாய கடம் கலச முதலிய வனைத்தும் காரணமாய அம்மண் மாத்திரமாகவே யிருப்பனவாம்; காரணமாய அந்த மண்ணை யொழித்துக் கடம் கலச முதலியவற்றைச் செய்தா ரெவருமில்லை; மண்ணினின்றும் செய்யப்பட்ட கடம் கலச முதலியவற்றை யெல்லாம் சிந்தித்து நோக்குமிடத்து அவை யுண்டாவதற்கு முன்னும், அழிந்த பின்னும், இவ்விரண்டிற்கும் நடுவே தோன்றுங் காலத்திலும் தமது காரணமாய மண்ணைத் தவிர வில்லையாம். அவற்றைப் புத்தியால் நன்றாக வாராய்ந்து நோக்கி மண்ணைத்தவிரக் கண்டவ ரிருக்கின்றனரோ? இதற்கு விடை நீ சிந்தனை செய்து கூறக்கடவாய்.

அருச்சுனா! நீ அவ்வுவமானத்தின்படி உவமேயததின் தன்மையைக் கேட்கக் கடவாய். சத்துப பொருள் எவ்விடத்தும் எக்காலத்தும் நாசமாவ (அசத்தாவ) தில்லையாம். இதற்கு வேறாயதென்றுள்ள அசத்துபபொருள் எவ்விடத்தும், எக்காலத்தும் சத்துப் பொருளாவ தில்லையாம். இவவிரண்டும் தத்துவ சாஸ்திர விசாரத்திற்கு விஷயமாயுள்ள பொருளாம். பரமாத்மாவாகிய என்னை யுள்ளவா றறிந்தவர் சத்து அசத்து என்னு மிவற்றை யறிதற்குரியவராவார்; மற்றவ ரறிதற்குரியராகார்.

(கடம் கலச முதலியன தமது காரணமாய மண்ணைத் தவிர வில்லாமைபோல உலகமும் தன் காரணமாய ஆத்மாவைத் தவிர வில்லையாம்; இருப்பதென்பது ஆத்மாவேயாம்.) இவ்வாத்மாவின் சத்துத் தன்மையை யின்னுங் கூறுகின்றேன், அதனை நீ கவனமாய்க் கேட்கக்கடவாய். (கானலின்கண் நீர்போலக் கற்பிதமாய்த் தோன்றுகின்ற) சப்த பரிச ரூப ரச கந்தங்களும், ஆகாசாதிக் கிரமமாகத் தோன்றுகின்ற பஞ்ச பூதங்களும், உற்பத்தியாங் காலத்தில் அவை யுற்பத்தியாவதற் கிடமாயும், சப்தபரிச முதலியவற்றை விடாதுபற்றித் தொடர்ந் தெழுகின்ற அந்தக்கரண விருத்தி யனைத்தையும் அறியா நிற்கும் ஸ்புரணரூப காரணமாயும், இறந்த காலமும் எதிர்காலமு முடைய தாகாது எக்காலத்

திலு மிருப்பதாயு முள்ள ஒப்பற்ற பொருளே ஆன்மாவாம். அருச்சுன ! நீ தேசத்தாலும் காலத்தாலும் வஸ்துவாலும் கண்டமா யழியாதுள்ள சத்துப் பொருளாயிருப்பது யாது? அதனைத் தேவரீர் விளக்கமாகக் கூறல்வேண்டு மென்பா யாயின், கூறுகின்றேன்; கேட்கக்கடவாய். அது பிறத்தல் முதலிய விகாரமற்ற ஞானவடிவமாய்க் கடகலச முதலியவற்றில் மண் நீங்காது நிறைந்திருப்பது போலச் சர்வப்பிரபஞ்சத்திலும் நீங்காது நிறைந்து வியாபகமா யிருப்பதாம்; இப்பொருளே யானெனதென்று உடம்பு முதலியவற்றைக் கருதாத நெறியமைந்த ஞான சுபாவத்தால் யான் கூறியதற்குச் சிலமாறுபாடாக அறிவுடையார் கூறார். நாச ரகிதமாயுள்ள இப்பொருளைத் தமது முயற்சியாற் கொல்ல வல்லவர் எவர் ! ஒருவருமிலர்.

அநாத்மாவிற்கு நித்தியத்துவம் எவ்வகையாலும் சம்பவியா தெனல்.

அருச்சுன ! சீதோஷ்ணம், சுக துக்க முதலிய துவந்துவமுடைய தேகாதிப் பிரபஞ்சத்தின் அசத்துந் தன்மையைக் கூறுகின்றேன், நீ கேட்கக் கடவாய். அது சூரியனது உஷ்ண கிரணத்தால் கானல் நிலத்தின்கண் சத்துமசத்து மாகாது விரைந்து தோன்றுகின்ற நீர்போலச் செவ்வையாக வறியு மிடத்துப் பொய்யா யொழிவதாம்; அதனால், சர்வப் பிரகாரத்தாலும் நாசமாவது இவ்வுடம்பே யாம். ஆகவே, பீஷ்மர் முதலாயினோரை யான் எவ்வாறு கொல்வேனென்று நீ கருதாதே. ஆத்மாவோ ஒன்றைக் கொல்வதில்லையாம்; ஒன்றாற் கொல்லப்படுவதற்கு முரியதாகாது. இன்னுமதன் றன்மையைக் கூறுகின்றேன்; கேட்கக் கடவாய்.

சட்பாவ விகாரம் உடம்பிற் கன்றி ஆத்மாவிற் கின்றெனல்.

பல வகையாய இடையூறுகளுண்டாக ஒன்றினிடத்தே பிறத்தல், பிறந் திருத்தல், முன்னுக்குப் பின் மாறாக வளர்தல், அங்ஙனம் வளர்ந்து வந்து மற்றொரு பிரகாரமாகத் திரிதல், அதற்கு மாறாக இளைத்தல், தன் வடிவங் கெட நாசமாதலென்று வருகின்ற இச் சட்பாவ விகாரமும் உடம்பை யடைவதல்லாமல், ஆத்மாவை யடையாவாம்; அதனால், ஆத்மா நிர்விகார வடிவமாகி; ஆகவே, சாசுவதமா யிருப்பதாம். அவ்வாத்மா மேகத்திற் றோன்றும் மின்னல் போல நிலைபெறுதலில்லாத உடம்பினிடத்தே யிருப்பதாயினும், சர்வ வியாபகமா யிருப்பதாம்;

எவ்வகையாலும் பொய்யென்று நிச்சயித்தற் குரியதாகா திருப்ப தாம்; அதனால், மித்தையாய பிறப் பிறப்புக்களுள் ஒன்றையும் அறியாததாம். அத்தன்மைய தாய ஆத்மாவைத் தேசிகனால் சொல்வழியே சென்று சமாதி கூடி நிலைத்துள்ளவா றுணர்ந்தவர் எவரேனு மொருவரைக் கொல்கின்ற இயற்றுதற் கருத்தாவும், கொல்லுவிக்கின்ற ஏவுதற் கருத்தாவு மாகார். அங்ஙனமாயின், யுத்த முதலிய கர்மங்களை விதிக்கும் சுருதிகளின் தாற்பர்யம் யாதெனை வினவுவாயாயின், அதற்கு விடை கூறுகின்றேன்; கேட்கக்கடவாய். மக்கள்தம் சாதிக்கேற்றவாறு, அவர்தமக்குக் கர்மங்களை விதிக்கும் சுருதி யனைத்தும் அவர்தமக்கு விதித்த கர்மங்களையும், அவர் தம் சாதியின்மீது வைத்துக் கூறின வல்லாமல், ஆன்மாவின்மீது வைத்துக் கூறவில்லையென்பதை நீ தெளிந்துணரக் கடவாய். ‡

## ஆத்மாவிற்குச் சரீரம் வருதலையும் போதலையும் உவமான வாயிலாகக் கூறல்.

அருச்சுனா! முன்னர்க் கிழிந்ததொரு வஸ்திரத்தை நீக்கி விட்டுப் பின்னர் மற்றொரு புது வஸ்திரத்தை யுடனே விரும்பித் தரிப்பவர்போல, மலம் மூத்திர முதலியன வூறித் ததும்பும் உடம்பினிடத்து அதற் கெவ்வகையாலும் வேறாய் விளங்குகின்ற ஆத்மாவும் சீரணமாய அவ்வுடம்பினை நீக்கிவிட்டு மற்றொரு புது உடம்பினை யடைகின்றது; அதனால் அவ்வாத்மா விகாரமற் றேக வடிவமா யிருப்பதாம். $

---

‡ பகவான் இங்ஙனங் கூறினமையால், சுருதிகள் கர்மங்களை விதித்தல் அஞ்ஞானிக் கன்றி ஞானிக்கன் றென்பது பெறப்பட்டது. அதனால் சுருதி கூறிய கர்மங்களை விசுவாசத்தோடு பயன் கருதாது செய்பவர் அதனால் சித்த சுத்தி யுடையவராய், பெரியாரை யடுத்து, ஆத்மாவை யறிதற்குரிய அதிகாரி புருஷராவர். ஆத்மாவை யறிந்தவர் ஒருவரைக் கொல்லுவதும் கொல்விப்பது முடையவராகாது, சர்வ சாட்சியாக விளங்குவரென்பது பெறப்பட்ட தென்க.

$ பகவா னிங்ஙனங் கூறினமையால், அர்ச்சுனா! நீ போர் புரிந்து பீஷ்மர் முதலாயினோரைக் கொல்வாயாயின், புண்ணிய சாலிகளாய அவர்கள் தம் பழைய வுடம்பொழியப் பெற்றுத் தேவ சரீரங்களைப் பெற்றுச் சுகபோகங்களை யனுபவித்தற் குரியவராவார்; அதனால், நீ இப்போரின்கண் முயற்சி யுடை யவனாதல் வேண்டுமென்று கூறினரென்பது பெறப்பட்டதென்க.

(அருச்சுனா! தீயால் வீடுவெந்தழியும் போது அதனுளிருக்கும் புருஷனும் வெந்தழிவதுபோல, நோய் முதலியவற்றால் இவ்வுடம்பு சிதைந் தழியும்போது அதனுளிருக்கும் ஆத்மாவும் சிதைந் தழிதல் கூடுமென்று நீ சங்கித்தல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன்; கேட்கக் கடவாய்.) இவ்வுடம்பினிடத்து, எவ்வகையாலும் அதற்கு வேறு யறிவு வடிவமா யிருக்கின்ற ஆத்மாவிற்குக் கைகால் முதலிய அவயங்கள் ஒரு காலத்திலு மில்லையாம்; அதனால், அதனை யுத்த பூமியின்கண் வாள் முதலிய படைக்கலங்கள் மர முதலியவற்றை வெட்டுவதுபோல வெட்டுவதில்லையாம். மர முதலியவற்றைப் போல அவ்வாத்மா தீயால்வெந்தழிவதில்லையாம்; கடலைமா முதலியனபோல அவ்வாத்மா நீரால் நனைந்து கரைவதில்லையாம். ஈர வஸ்திர முதலியனபோல அவ்வாத்மா காற்றாலும் உலர்வ தில்லையாம். ** இன்னும் அவ்வாத்மாவின் றன்மையைக் கூறுகின்றேன்; அருச்சுனா! நீ கேட்பாயாக.

சர்வ பதார்த்தங்கட்கு மூல காரணமா யிருப்பதை, அதனால் எவ்விடத்தும் தான் மாத்திரமாய் (வியாபகமாய்) இருப்பதை, அதனால் ஸ்திரசுபாவ முடையதை, அதனால் நித்தியமா யிருப பதை, அதனால் நிச்சலமா யிருப்பதை, அதனால் ஞானேந்திரிய பஞ்சகம், கன்மேந்திரிய பஞ்சகம், அந்தக்கரண சதுஷ்டய மென்னும் சட வடிவ இந்திரியங்கள் பதினான்கும் பற்றுவ தில்லாத. ஞான சொரூபத்தை அருச்சுனா! நீ யுள்ளவா றுணராமல், அது கட முதலிய அநித்தியப் பொருள்களைப் போல அழிந்துபோமென்று கருதி வருத்த முறுகின்றது யாது காரணம் பற்றியோ? அதனையா னறியா திருக்கின்றேன். †

## இறப்பவர்களைப் பற்றிச் சோகமுறுதல் கூடாதெனல்.

அருச்சுனா! நீ பீஷ்மர் முதலாயினோர் தேக முண்டாம்போ துற்பத்தியாய் அது நாசமாம்போது நாசமாவரென்று தவறாகக்

** இங்ஙனம் பகவான் கூறினமையால், ஆத்மா பிருதிவியாலும், அப்புவாலும், தேயுவாலும், வாயுவாலும் நாச முறுவதில்லை யென்பது பெறப்பட்ட தென்க. ஆகாயம் வெட்டுதல், நனைத்தல், தகித்தல், உலர்த்தலென்னும் தொழிலால் எதனையும் நாச மாக்குவ தின்மையின், அஃதிங்குக் கூறப்படவில்லை யென்க.

† பகவா னிங்ஙனங் கூறினமையால், ஆத்மாவின் தன்மையை யுள்ளவா றறிந்தவர் அஃதிறந்துபோ மென்று வருத்த முறுவதில்லை யென்பது பெறப்பட்ட தென்க.

கருதிக்கொண்டு, அதனால் சோகமடைந்திருக்கின்றாய் ; அவ்வாறு சோகமடைதல் உனக்குத் தகுதியன்றாம். எவர் பிறக்கின்றனரோ அவர் எத்தன்மையரா யிருப்பினும் அப்பிறப்பின் காரணமாய வினைமுடிந்தபோது நிச்சயமாக மரணமடைவர் ; மீண்டும் முன் செய்த வினைக் கேற்றவாறு பிறப்பர். தத்துவஞானத்தால் அஞ்ஞானம் கெடுமளவும் இப்பிறப்பிற்குப் பரிகார மில்லையாம். (இக்கிரமத்தை நன்குணர்ந்து இன்றியமையாது வரத்தக்க பிறப் பிறப்புப்பற்றி நீ சோகமடையா திருப்பாயாக.) ‡

(ஆத்மா பிறப் பிறப்பற்றதா யிருத்தலின், அதுபற்றிச் சோகமுறுதல் கூடாதென்பது நியாயமே யாயினும், இப்பீஷ்மர் முதலியோரது சரீரத்தைக் குறித்து யான் சோகமடைகின்றேனென்று நீ கூறுதல் கூடும்.) அருச்சுனா ! நீ இந்தப் பீஷ்மர் முதலாயினோர் தாம் பிறப்பதற்கு முன்னே இவ்வாறிருந்தன ரென்பதையும் அறியமாட்டாய் ; இவர்கள் தம் சரீரங்களினின்றும் பிரிந்து சென்றடையு மிடங்களையும் அறியமாட்டாய். பிறப்பிற்கும் இறப்பிற்கும் நடுவே இவர்களை நீ யறிந்துள்ள காலம் சிலவேயாம். அதனால், இந்த யுத்த பூமியின்கண் வந்துன்னோடு யுத்தஞ்செய்ய ஆயுத சகிதராயுள்ள இப்பீஷ்மர் முதலாயினோரிடத்து நீ யேன் வீணாகச் சோகங்கொண் டிருக்கின்றாய்? அதனை யொழித்து விடக் கடவாய்.

[அருச்சுனா ! நீ வித்வான்களும் சோகமுறுதற்குக் காரணம் யாதென வினவுதல் கூடும். அதற்கு விடை கூறுகின்றேன்; கேட்கக் கடவாய் அருச்சுனா ! நீ குறிப்பிட்ட வித்வான்கள் $

‡பகவா னிங்ஙனம் கூறினமையால், பிறப்பதற்கு முன்னும் , இறந்தற்குப் பின்னுமில்லாத தேகங்கள் தாமுள்ள காலத்திலும் வாஸ்தவத்தி லில்லாதனவாம் ; யாதிருப்பதோ அது முக்காலத்திலு மிருப்பதாம். யாதில்லாததோ அது முக்காலத்து மில்லாததேயாம் ; பீஷ்மர் முதலியோர் தேகங்கள் முன்னும் பின்னு மில்லாதனவா யிருத்தலின், அவை சத்துப் பொருளன்றாம்; அதனால், அவர்கள் சரீரங்களைப்பற்றி அருச்சுனா ! நீ சோகமடைதல் கூடாதென்று வற்புறுத்தினா ரென்பது பெறப்பட்ட தென்க.

$ பிரஹ்ம பாவனையை மூடிப் பேதங்காட்டுவ தஞ்ஞானமாம்; குரவன் வாக்கிய நம்பாமற் குழம்புவது சந்தேகமாம்; சகமெய்யென்றும், தேகம் நானென்றுங் கொண்டுள்ள மோகம் விபரீதமாம்; முன்னனுபவித்த வஸ்துக்களை யடிக்கடி நினைத்தல் பூதப் பிரதிபந்தமாம் ; இன்னும் சில பிறப்பு வந்தாற்றான் நமக்கு மோட்ச முண்டாமென்னுஞ் சிந்தனை பௌஷியப் பிரதிபந்தமாம்; விஷயத்திலாசை , மந்தபுத்தி, குதர்க்கம், அபிமானம், சஞ்சலத்தன்மை முதலியன வர்த்தமானப் பிரதிபந்தமாம்.

அஞ்ஞான—சந்தேக—விபரீதங்களால் நிகழும் பூத பௌஷிய வர்த்தமானப் பிரதிபந்தங்களால் ஆத்மாவின் தன்மையை யுள்ளவா றுணராது சோகமுறுகின்றனர்; அவர்களுள்] ஒருவன் நித்திய சித்தமாயுள்ள இந்த ஆத்மாவைச் சற்குருவாயிலாகத் தத்துவோபதேசம் பெற்றகாலத்தில் எப்போதுங் கண்டறியாததாகிய தொன்றனைக் கண்டாற்போல ஆச்சரியமாக வறிகின்றனன்; மற்றொருவன் எப்போதும் கூறியறியாததாகிய தொன்றனைப் பிறர்க்குக் கூறுவதுபோல ஆச்சரியமாக ஒருவனுக்குக் கூறுகின்றான்; இன்னொருவன் எப்போதுங் கேட்டறியாததாகிய தொன்றனைக் கேட்பதுபோல ஆச்சரியமாகக் கேட்டு மகிழ்ச்சி யடைகின்றான்; வேறொருவன் பிறர் சொல்ல எப்போதுங் கேட்டாலும் அறியாதவனாகவே யிருக்கின்றான். (அதனால் நீ கூறிய வித்வான்கள் சோகமுறுதற் குரியவரா யிருக்கின்றனர்; அருச்சுனா ! நீ அவர்களைப்போலச் சோகமுறல் வேண்டாம்.)

அருச்சுனா ! நீ சாவது உடம்பே யல்லாமல் ஆத்மா வன்றென்னும் உறுதியுடையவனாய், முற்கூறிய நால்வருள் எவரும் உள்ளவா றறியாத அவ்வாத்மாவைப் பூதப் பிரதிபந்த முதலிய தடைமூன்றனுள் எதுவுமில்லா துணர்ந்துகொண்டு, இவ்வாத்மானுபவத்தின் வல்லபத்தால், இந்தப் பீஷ்மர் முதலாயினோரை யான் கொன்றேனென்னும் விபரீத புத்தியை விடக்கடவாய்; இவ்விபரீத புத்தி நீங்குமாயின், உனக்குச் சோகமுண்டாவ தில்லையாம். நீ சோகமடையா திருத்தற்குரிய காரணங்களை யின்னுங் கூறுகின்றேன்; கேட்கக் கடவாய். இருக்கு, யசுர், சாமம், அதர்வணமென நான்கு வகையாயுள்ள வேதவாக்கியங்களும் க்ஷத்திரியரது சுதர்மம் அவர் வாட்படை முதலியவற்றைக் கொண்டு தம் பகைவரோடு நியாயமாகச் செய்யும் யுத்தமாமென்று கூறுகின்றன; அதனால், க்ஷத்திரியனாய நீ உன் க்ஷத்திரிய தர்மத்தை நோக்கியேனும் போர் செய்தல்வேண்டும்; அப்போரினின்றும் நீங்குவது உனக்குத் தகுதியாகாது. அருச்சுனா ! நீ யுத்தஞ் செய்தலே க்ஷத்திரியனான எனக்குச் சுதர்மமாமென்றுட் கொண்டு, இந்த யுத்தத்தினைத் தொடங்குவாயாக. இதுபற்றி நீ யாதும் ஐயுறல் வேண்டாம்.

(அருச்சுனா ! நீ யுத்தஞ் செய்தல் க்ஷத்திரியரின் சுதர்மமாயினும், பீஷ்மர் முதலாயினாரோடு யுத்தஞ் செய்வது எனக்குத்

த்குதியாகத் தோன்றவில்லை யென்று வினவுவாயாயின், அதற்கு விடை கூறுகின்றேன் ; கேட்கக்கடவாய்). இந்திரியத்தை யடக்குதல், மனத்தை யடக்குதல் முதலிய பிரயத்தன மில்லாமலே அத் தேவர்கள் வசிக்கும் சுவர்க்கலோகத்தை யடைதற்குச் சாதனமாயிருக்கின்ற இந்த யுத்தத்தைப் பெறுகின்றவர் யார்? அவர் வைதிக வொழுக்கந் தருகின்ற பெருந்தவத்தினை மேற்கொண்டு செய்து அதனால் தமதுண்மையை யுணர்ந்த அரசரல்லவோ? அதனால், அருச்சுனா! நீ உன் சுதர்மமான யுத்தத்தின்கண் முயற்சியுடையவனாகக் கடவாய். நீ பாக்கியசாலிகளாய அரசர் அடையத்தக்கதாய தர்ம ரூபமான இந்த யுத்தத்தைத் தொடங்காதொழிவாயாயின், உனது சுதர்மமும் கீர்த்தியும் நாசமாவனவாம்; அவையேயுமன்றி (மறுமைக்குரிய) பாவமும் உனக்குண்டாகும் ; பாவமே யுண்டாவதன்றி அருச்சுனன் பயந்து போர் செய்யாதொழிந்தானென்று பிறர் கூறும் (இம்மைக்குரிய) பழியு முண்டாகும் ; இப்பழியைப் பெற்றிருப்பதினும் போரில் இறப்பதே உனக்குத் தலைமையான தருமமன்றோ? அருச்சுனா! நீ இப்பழியோடிருப்ப தல்லாமலும் உன்னைத் துரியோதனன் முதலாயினோர் கர்ணன் முதலாயினோர்க்குப் பயந்து யுத்தத்தினின்றும் நீங்கினாயென்றுங் கூறுவர். அதற்கும் நீ பாத்திரனாதல் வேண்டும். நீ இவ்வுலகத்தின்கண் தருமம் பராக்கிரம முதலிய பல குணங்களோடு பொருந்தி நின்று முன்னே யடைந்த வெற்றியும், துரியோதனன் முதலாயினோர் பழித்தற்குரியதாய் நிற்கும். பகைவர் சொல்லுதற்குக் கூடாததாய வொரு வார்த்தையைக் கூறுவாராயின், இவ்வார்த்தையினும் அதிகமாகத் துன்பந்தருவது உனக்கு வேறு யாதிருக்கின்றது? இல்லையே! (இத்துன்பம் வாராதிருத்தற் பொருட்டு, நீ உன் சுதர்மமாய யுத்தத்தைச் செய்யக் கடவாய்).

(பகவானே! யான் இந்த யுத்தத்தின்கண் பீஷ்மர் துரோணர் முதலிய ஆசிரியரைக் கொல்வேனாயின், மத்தியஸ்த புருஷர் என்னைப் பழித்துக் கூறுவர் ; இந்த யுத்தத்தினின்றும் நீங்கி விடுவேனாயின், துரியோதனன் முதவாயினோர் என்னைப்பழித்துக் கூறுவர். அதனால், யான் இந்த யுத்தத்தைச் செய்யினும் செய்யாதொழியினும், அப்பழியா லுண்டாகும் துக்கம் எனக்கு வாராதிருப்பதன்றென் றருச்சுனா! நீ வினவுதல் கூடும் ; அதற்கு விடை

வாக வறியாதவரது புத்தியைப்பற்றிக் கூறுமிடத்து அது விருட்சங்களின் இலைகளைப்போலச் சுவர்க்கபோக முதலியவற்றை விரும்புவதால் பலவாயிருப்பதாம்; அக்காமியகர்மந் தரும் பயனை விரும்பியிருப்பதாம். (அருச்சுனா; நீ காமிய கருமத்தைச் செய்பவர் தம்மாசையை யொழித்து ஏகாகார புத்தியை யேனடையாதிருக்கின்றனரென்று வினவுதல் கூடும். அதற்கு விடை கூறுகின்றேன்; கேட்கக்கடவாய்). ‡ காமகாண்ட சுருதி வாக்கியங்களையே இவை மிக மேலாக வறியததக்க பொருள்களாமென்று கூறும விசாரவீன புருஷர் அவவேத வாக்கியங்களின் தாற்பரியத்தைத் தெளிந்தறியா திருக்கின்றனர்; ஈவாக்க முதலியவற்றின் பயன்களை யல்லாமல், பரம புருஷார்த்தமான மோட்ச சுகத்தைச் சிறிது மறியாதவராவர்.

சுவர்க்கத்தின்கண்ணுள்ள அமிர்தம, நந்தனவனம், ஊர்வசி முதலிய பொருள்களின் போகங்களை இவை மிக மேலாய புருஷார்த்தமா மென்று கருதுகின்றவரும், சுவர்க்கத்தின்கண்ணுள்ள போகங்களை யனுபவித்தபின் மண்ணுலகத்தின்கண் வந்து பிறப்பதற்குரிய மார்க்கத்தின்கண் நிற்பவரும, தாம் செய்த கருமங்களுக்குப்பயனை விரும்புகின்றவருமாய பகிர்முக புருஷர்க்கு அதிசூக்குமமாய ஆதமஞான முடைய பெரியார் சாங்கியயோகத்தை யுபதேசஞ் செய்யார்; செய்தாராயின், $ அஃதவர்க்குப் பயன் தருவதில்லையாம்.

(அருச்சுனா! நீ காமியகருமம் சுவாக்காதி போகத்திற்குச சாதனமா யிருத்தல்போல, நிஷ்காமிய கருமமும் அப்போகத்திற்குச் சாதனமா யிருத்தலின், அதுவும் காமிய கருமம்போல ஆத்மஞானத்தை யடைதற்குத் தடையாமென்று சங்கித்தல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன்; கேட்கக் கடவாய்). வேதத்தின்

---

‡ வாசனையில்லாத மலருடைய பலா விருக்ஷம் தூரத்திலிருப்பவர்க்கு மனோரம்மியமாகத் தோற்றுவதுபோலக் கர்மகாண்ட வாக்கியங்களும் ஆராய்ச்சி யில்லாதவர்க்கு மனோரம்மியமாகத் தோற்றுகின்றன. அவ்வாக்கியங்கள் ஸ்துதி அர்த்தவாத வாக்கியங்களாமென் றவற்றை யுணராதவர் காமிய கர்மங்களை விரும்பிச் செய்து, அவற்றின் பயனாக ஜனன மரண சம்சாரபயத்தை யடைந்து வருகின்றனரென்பதிங் குணர்தற்பாலதாம்.

$ கர்ம பலத்தை விரும்புகின்றவர்க்கு விவேகஞான முண்டாவதில்லையாமென்பதிங் குணர்தற்பாலதாம்.

கருமகாண்ட மார்க்கத்தை யாசிரயித்துச சுவார்க்காதி போகத்தையே விரும்பும இராசதகுணமுடையவா பலவகையாய குற்றங்களை யுண்டாக்கும் புண்ணிய காமம, பாவகருமம, (அவற்றின் கலப்பாய) மிசிர காமமென்னுங காம மூனறன சமபநதமாய சமசாரப் பயனை யடைகினறவரா யிருககினறனா சீதம உஷ்ணம, இலாபம நஷ்டம, சுசம துககம முதலிய துவா துவஙகளைக தருகினற இராசதகுண முடையவரது கருமததின் பயன இதுவேயாம இராசத குணததால பயனை விருமபிச செயயும அககருமஙகள தமமைச செயதவாகள துகக முறுமாறு தமபயனைததர வருகின்றனவா யிருககினறன அதனால, நீ † அககருமஙகளுக்கு அபபாறபட்டவனாகி, ‡ யோக க்ஷேமஙகளைக கருதாது, நிஷ்காம கருமத்தைச செயயு மறிவுடையவனெனறு யாவருமுனனைக் கூறுமபடி, யான கூறும நிஷ்காம காம மாாககததினகண்ணே நிலைபெற் றொழுகுவாயாக

(அருசசுனா! நீ யான சுவாககாதி போகஙகளைத தருங கருமமனைத்தையும விட்டு, பயனெனறையும விருமபாது கருமங்களைச செயவேனாயின, அசகருமஙகளின பயனாப சுகஙகளை யடையா தொழிவனே யெனறு வினவுதல கூடும, அதறகு விடை கூறுகின்றேன், கேட்கக கடவாய) அறப ஜலமுள்ள சேணி (சிறு குளம), கிணறு, தடாக முதலியவறறின்கண ஸநானம-ஆசமனம்-பான முதலியவற்றைச செயபவன், நாறபுறததும நிறைநத ஜலத்தையுடைய பெருநதடாகததினை யடைநதால, அநத ஸநானம-ஆசமனம-பான முதலியவறறைச செயதல அவனுககருமையாமோ? மிக வெளிதா மன்றோ? அஙஙனமே, நிலையாய சுகததைதத தருவதற்ற வேதோக்தமாய காமிய கருமஙகளா லுண்டாகும பிரமலோக பரியநதமுள்ள சுகமனைததும, எனஞானறும குறைத லிலலாது சாவப் பிராணிகளின் உள்ளமும தனது லேசததால களிபபடைதற்

† இதனால பகவான அருச்சுனா! நீ கருமததைப் பயனை விரும்பிச் செய்யாது, சீதோஷ்ண முதலிய துவந்துவங்களைப் பொறுத்துககொண்டு, சத்துவ குணத்தை மேற்கொண்டு, யோக க்ஷேமங்களைக் கருதாது, ஆன்ம ஞானமடைவதன்கண் கருத்துடையவனா யிருக்கக கடவா யென்று கூறினாரென்பது பெறப்பட்டதென்க.

‡ முன்படையாத பொருளை யடைவது யோகமாம் ; முன் படைந்துள்ள பொருளைப் பாதுகாத்தல க்ஷேமமாம்.

குக் காரணமாய பிரஹ்மாநந்தத்தி னிடத்தே யிருக்கின்றன. அவ் வாநந்தத்தைப் பிரஹ்ம நிஷ்டன் பெறுதல் அரியதன்றாம்; மிக வெளியதேயாம். *

(அருச்சுனா! நீ யான் பிரஹ்மாநந்தத்தை யடைதற்கு வெகு தூரமாயுள்ள நிஷ்காமிய கருமத்தைச் செய்வதன்கண் எனக்குக் கருத்துண்டாகவில்லை; அவ்வாநந்தத்தை யடைதற்குச் சமீப சாதனமா யிருப்பதன்கண் எனக்குக் கருத்துண்டா யிருக்கின்ற தென்று வினவுதல் கூடும்).

அருச்சுனா! உனக்குச சித்த சுத்தி யுண்டாகா திருக்கின்றது; அதனால், நீ, அஃதுண்டாதற் பொருட்டு நிஷ்காமிய கருமத்தை யே செய்தல் வேண்டும்; உனக்கிப்போது நிஷ்காம கருமத்திற் றான் அதிகார மிருக்கின்றது; அதனால், புத்தியோகமென்னும் நிஷ்காமகர்மத்தி னிலக்கணத்தைக் கூறுகின்றேன்; கேட்கக் கடவாய்.

சர்வ சம்சாரப் பயன்களும் உன்னை யடைந்து நீங்கும் காலத் தில் நீ மகிழ்ச்சி வாட்டமென்பவற்றில் எதனையு மடையாது சம புத்தி யுடையவனாய், பெரிதாய உனது கர்மத்தைச் செய்துவரக் கடவாயாக. இதுவே நிஷ்காம கர்மத்தி னிலக்கணமாம்.

(அருச்சுனா! நீ பயனைக் கருதாது பாமரனும் ஒரு காரியத் தைச் செய்வதில்லையாகலின், யான் பயன் கருதாது கருமத்தைச் செய்வ தெவ்வாறுமென வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறு கின்றேன்; கேட்கக் கடவாய்).

சமையலுக்கு நெருப்புப்போல மோட்ச சாதனமாயுள்ள ஆன்ம ஞானததைச் சித்த சுத்தி வாயிலாகத் தருகின்ற புத்தி யோகமென்னும் நிஷ்காம கர்மம் வெகு தூர மாம்படி, பயனை விரும்பிக் கருமத்தைச செய்து வருபவர் † கிருபணரே யாவர். நிஷ்காம கர்மத்தைச் செய்பவராய், பரமேசுவரனைய என்னை யாராய்ந்தறிபவரது செயலைக் கூறுகின்றேன்; நீ கேட்கக்கடவாய்.

* இதனால அருச்சுனா! நீ நிஷ்காம கருமத்தைச் செய்து, அதனால் சித்த சுத்தியுடையவனாய், பிரஹ்மாநந்தத்தை யடைதற் குரியவனாவாய்; பிரஹ் மாநந்தத்தைப் பெறுவாயாயின், காமிய கருமத்தின் பயனையும் பெற்றவனே யாவாயென்று பகவான் கூறினாரென்பது பெறப்பட்டதென்க.

† சுவர்க்காதி போகங்களை விரும்பிக் கருமங்களைச் செய்து, அதனால் ஜனன மரணவடிவத் துக்கத்தை யடைந்து வருகின்றவர் இங்குக் கிருபண ராவரென்க.

விடுவதற் கரியதாய கர்மத்தின் பயனைவிட்டு, தன் சாதிக் குரியதாகச் சாத்திரங்கள்கூறும் கர்மங்களைத் தடையில்லாதபடி செய்து சித்த சுத்தி பெறுதல் வாயிலாகச் சுகம் துக்கம், மானம் அவமானம், பகை உறவு என்றற்றொடக்கத்துத் துவந்துவங்களி னின்றும் நீங்கி, உடம்போடிவ் வுலகத்திலே யிருக்கின்றானென்று தன்னைப் பிறர் கூறுமாறு சீவித்திருந்து, ஜன்ம பந்தத்தை யொழித்திருப்பவன் என்னைத் தானாக வுள்ளவா றறிந்திருப்பவ னாவன். ஞானி யென்பவன் இத்தன்மையனே யாவன்.

பகவான் நிஷ்காம கர்மம் மோட்ச சாதனமாங் கிரமத்தைக் கூறல்.

ஒருவன் கர்மங்கள் கொடுக்கும் சுவர்க்காதி போகப் பயன் களிலுள்ள விருப்பத்தை யொழித்து, செய்தற்குரிய கர்மங்களை ஈசுவரார்ப்பணமாகச் செய்து வருவானாயின், ஒழித்தற்கரிய ஆசை கோப முதலிய தோஷங்கள் அவன் சித்தத்தினின்றும் ஒழியும். சித்த சுத்தி யென்ப திதுவே யாம். அவனுக்கு ஆசை கோப முதலிய தோஷங்க ளொழியுமாயின், இஃதழியாதது, இஃதழி வது என்னும் நித்தியா நித்திய வஸ்து விவேகமுண்டாவதாம்; அவ்விவேக முண்டாமாயின், புண்ணிய பாவ கர்மங்களைச் செய் வதன்கண் விருப்ப முண்டாவ தொழியும்; அவ்விருப்பமுண்டாவ தொழியுமாயின், பேறிழவென்னும் லாப நஷ்டங்களில் சமபுத்தி யுண்டாகும்; அச்சமபுத்தி யுண்டாமாயின், என்னைத் தானாக அறி தற்குரிய அறிவுண்டாகும்; அவ்வறி வுண்டாமாயின், அவி வேகத்தை யடைந்து அதனால் தானல்லாத வுடம்பை யானென் றும், தனதல்லாத பொருள்களை யெனதென்றும் அபிமானங் கொண்டுள்ள சித்த விருத்தி ஒழிவதாம். அவன் எப்போது இவ் வாறு குற்றமில்லாத சித்த சுத்தி யடைவானோ அப்போது உலக நூல்களைப் படிப்பதிலும் உலகத்தாரைப்பற்றிப் பேசுவதிலும் வைராக்கிய முடையவனாவன்; அவ்வாறு வைராக்கிய மடைந் திருத்தலால், பரமான்மாவாய என்னை யுள்ளவா றடைதற் குரியவ னாவன். அவன் என்னைத் தானாகவடையுங் கிரமத்தைக் கூறுகின்றேன்; அருச்சுனா! நீ அதனைக் கேட்கக்கடவாய்.

நிலைத்த சமாதி யுடையவனுக்கே தத்துவஞான முண்டாமெனல்.

(நிஷ்காம கரும அனுஷ்டானத்தால் சித்தசுத்தி பெற்று, அதனால் வைராக்கிய முண்டாயிருக்கின்றவனுக்குத் தத்துவஞான

முண்டாகும் காலத்தைக் கூறல்). புத்தியோக மென்னும் நிஷ்காம கருமத்தை மேற்கொண்டொழுகுகின்றவன் * மாயாப் பிரபஞ்ச மனைத்திற்கும் ஆதியாய் (அதிஷ்டானமாய்) இருக்கின்ற பரம் பொருளின் கண்ணே சந்தேகமில்லாமலும் விபர்யயமில்லாமலும் எப்போது நிலைத்து நிற்கின்றானோ, அப்போதே சாஸ்திரங்களின் முடிபொருளாயுள்ள மெய்ஞ்ஞான யோகத்தை யடைவான்; இதிற் சம்சயமில்லை. நீ இந்த யோகத்தை யான் கூறிய வழியே யொழுகி யடையக் கடவாய்.

(பகவான் அருளிச் செய்த புத்தியோகத்தி னிலக்கணத்தையும், அதனால் விளையும் பயனையும் கவனமாய்க் கேட்டுவந்த அருச்சுனன் சீவன் முக்தர்களின் இலக்கணத்தையே முமுட்சுக்களின் மோட்ச சாதன வடிவமாகக் கருதி,) பகவானே! தேவரீர் கூறியருளிய இந்த ஸ்திதப்பிரஞ்ஞனை மற்றவர் யாதிலக்கணமுடையவனென்று கூறுவர்? அந்த ஸ்திதப் பிரஞ்ஞன் சமாதியினின்றும் பகிர்முகமாயபோது எவ்வாறு பேசுவன்? சமாதியினின்றும் வெளியாய சித்தத்தை நிக்கிரகஞ் செய்தற் பொருட்டு, சுரோத்திர முதலிய இந்திரியங்களை யெவ்வாறு நிக்கிரகஞ் செய்வன்? சுரோத்திர முதலிய இந்திரியங்களை நிக்கிரகஞ் செய்துவிட்டால், விஷயங்களை யடைவதெப்படி? † இந் நாலவகை வினாக்களுக்கும் தேவரீர் உள்ளவாறு விடை யருளல்வேண்டு மென்றனன். ஆகாயத்தை முதலாகவுடைய பஞ்ச பூதங்களையும் படைத்த பகவான் அந்நான்கு வினாவிற்கும் விடை கூறத் தொடங்கி,

அருச்சுனா! நீ வினாவிய வினா நான்கிற்கும் விடை கூறுகின்றன்; அதனைக் கேட்கக்கடவாய்.

* பரம் பொருளில் சந்தேக விபர்யயமில்லாது நிலைத்து நிற்பவன் ஸ்திதப் பிரஞ்ஞனெனப்படுவான். மெய்ஞ்ஞானயோகம்-சீவப் பிரஹ்ம ஐக்கிய ஞானமாம்.

† இந்நான்கு வினாக்களுள் முதல் வினா சமாதியிலுள்ள புருஷனை நோக்கியதாம்; மற்ற வினாக்கள் சமாதியினின்றும்விழித்த புருஷனை நோக்கியனவாம். சமாதியினின்றும் விழித்த புருஷனது உரைத்தல், இருத்தல், சரித்தலென்பன எவ்வாறிருப்பனவாமென்பது மற்ற மூன்று வினாக்களின் கருத்தாம். சாதகபுருஷர் தத்துவ ஞானத்தை யடைதற் பொருட்டு, எவற்றைச் சாதகமாகக் கொண்டொழுகுகின்றனரோ அவை தத்துவஞானியிடத்துச் சுபாவ சித்தமாயிருக்கு மென்பதிங் குணர்தற் பாலதாம்.

சமாதியின்கண்ணுள்ள அப்புருஷன், தனது சித்தத்தின்கண்ணுள்ள எனக்கிது வேண்டுமென்னும் அவாவ
ஆத்மாவின்கண் ஆத்மாவாலேயே திருப்தி யடைந்து, மயக்கத்தைத் தருவனவாய குரோதம் இராகம் பயமென்பனவற்றை யொழித்து, சுகதுக்கங்களுண்டாய காலத்து அவற்றாலுண்டாகும் மகிழ்ச்சியையும் வாட்டத்தையும் கெடுத்து, பழவினை காரணமாக வருகின்ற ஸ்துதி நிந்தைகளாலுண்டாகின்ற விருப்பையும் வெறுப்பையும் ஒழித்து, ஆமை (தலையொன்று, கால் நான்கு என்னும்) தனது அவயவ மைந்தனையும் தன்னுடம்பினுள்ளே யடக்கிக் கொள்ளுந் தன்மையைப்போல, துன்பத்தைத் தருகின்ற சுரோத்திரம்-துவக்கு-சட்சு-ரசநம்-கிராணமென்னு மிந்திரிய மைந்தனையும் சப்த முதலிய விஷயங்களினின்றும் நீக்கித் தன்னுள்ளே யடங்குமாறு செய்து ஆன்மாவிலேயே விளங்கா நிற்பனென் றிவ்விலக்கணமுடையவனாக அறிஞரால் கூறப்படுவன். அவன் சமாதியினின்றும் விழித்த காலத்தில் அனுகூலப் பொருள், பிரதிகூலப் பொருளெல்லா வற்றினும் விருப்பு வெறுப்பின்றி, எப்போதும் அவற்றைப்பற்றி யுதாசீனமாகப் பேசுவன்; இவ்வாறு பேசுவதே அவனது பேச்சாம்.

(பகவானே! சப்த முதலிய விஷயங்களினின்றும் சுரோத்திர முதலிய இந்திரியங்களைத் திருப்புதல் ஸ்திதப் பிரஞ்ஞைக்குக் காரணமாமாயின், வியாதி உபவாச முதலிய நிமித்தங்களால் மூடர்களும் சுரோத்திர முதலிய இந்திரியங்களைச் சப்த முதலிய விஷயங்களி னின்றும் திருப்புகின்றனர். அவர்களும் ஸ்திதப் பிரஞ்ஞராதல் வேண்டுமென்று அருச்சுனா! நீ வினவுதல் கூடும். அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

ஆத்மாவின்கண் நிலைத்து நில்லாதவன் தான் ஞான சாதனமாகக் கொண்டுள்ள சுரோத்திர முதலிய இந்திரியங்களைத் தவம் விரதம் முதலிய காரணங்களால் அடங்குமாறு தடுத்தாலும், அளவற்ற அலைகளையுடைய கடல்போல அளவற்ற எண்ணங்களையுடைய தன் சித்தத்தின்கண்ணுள்ள ஆசை நீங்குதற்குரியவனல்லன்; ஆனால், ஆன்மாவின்கண் நிலைத்து நிற்பவனுக்கோ அந்த ஆத்மாவை யுள்ளவாறறிவதனால், அந்த ஆசையும் நீங்கிவிடுகின்றது. சற்குருவினிடத்து வேத வாக்கியம் பலவற்றையுங் கிரமமாகப் படித்து, தம்மை யடக்க முயலுகின்றவனது மனத்தை

யும் பலாத்காரமாக விழுத்து, அவனது தைரியமானது மாறு சுரோத்திர முதலிய இந்திரிய மைந்தும் சப்த முதலிய விஷயங்களிலே செல்லும்படி செய்வனவாம். *

அருச்சுன ! முற்கூறிய காரணத்தால் இந்திரிய மைந்தையும் (விஷயத்தில் தோஷங் காண்டல், நான் பரவாசுதேவனென் றுணர்தல் என்பவற்றாலன்றி) அடக்குதல் அரியதாம்.

மனோ நிக்கிரகஞ் செய்யாவிடின், இந்திரிய நிக்கிரகத்தால் பயனின்றெனல்.

(அருச்சுன ! நீ இந்திரிய நிக்கிரகஞ் செய்தவனுக்கு, மனோ நிக்கிரகந் தானே சித்தித்துவிடும்; அதனால் மனோ நிக்கிரகஞ் செய்தல் பயனற்றதாமென வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்) சுரோத்திர முதலிய இந்திரியங்கள் அடங்கினாலும், மனம் அடங்காதிருக்குமாயின், அம்மனம் துன்பத்தைத் தரும் சப்தாதி விஷயங்களிலே இவை சுக சாதனமென்று கருதிசசெல்லா நிற்கும்; அவ்வாறு செல்லுமாயின், அவ் விஷயங்கள் மீதுள்ள பிரீதியினால், அவற்றை யடைய் விரைந்து, பேராசை யுடையதாய், விரிந்து நிற்கும்; விரும்பிய விஷயம் கிட்டாதாயின், அது கிட்டாவாறு செய்தவர்மீது பெருங் கோப முடையதாய், அதனால் வதையா நிற்கும்; தீயையொத்த பெருங் கோப முண்டாகவே, இது செய்யத்தக்கது, இது செய்யத்தகாதது என்னும் விவேக மில்லாமையாகிய மோகமானது வந்து பொருந்தும்; அம்மோகம் வந்து பொருந்தவே, சற்குரு வாயிலாகவும் சற்சாஸ்திர வாயிலாகவும் அறிந்துள்ள அர்த்தாநுசந்தான வடிவ ஸ்மிருதிகள் கெடுவனவாம்; அவை கெட்டபோதே அநர்த்த நிவிர்த்தி—ஆநந்தப் பிராப்தி யென்னும் முத்தி யடைதற்குரிய பிரஹ்மைவாஹம் (பிரஹ்மமே நான்) என்னும் அகண்டாகார விருத்தி வடிவப் புத்தியானது கெடுவதாம்; அப்புத்தி

* இதனால் மனத்தை யடக்க முயலுகின்றவன் முன்னர் இந்திரியங்களை யடக்குதல் வேண்டும்; இந்திரியங்களை யடக்காவிடத்து மனத்தை யடக்குதல் முடியாது; இவ்விரண் டடக்கமு முடையவன் ஆத்மாவில் நிலைத்துநிற்றற் குரியவனாவன்; ஸ்திதப் பிரஞ்ஞனென்பா னிவனே யாவனென்பது பெறப்பட்டதென்க.

யானது கெட்டொழிநத வழியே அடைதற கரியனவென்று அறிஞா கூறுகின்ற புருஷாரதத மனைததும கெடடொழிவனவாம். †

## இநதிரிய நிககிரகஞ் செயயாது மனோ நிக்கிரக மாத்திரஞ் செயபவனுககுக காமம் வெகுளி முதலிய தோஷங்களுண்டாவதில்லை யெனல்

எதனிடததும விருபபும வெறுபபும இலலாமல, தனது வசமாக விருநது செலலும சுரோததிர முதலிய இநதிரியஙகளாலே சாஸதிர விகிதமான போகஙகளை யனுபவிபபவன தன வசமான மன முடையவனுவன, அவன அப போகாநுபவததால காமம வெகுளி முதலியவறறை யடைநது, மனங கலஙகுத லிலலாதவனுவன அமமனததினிடததுப பிரஹமானம சாடசாதகாரததிறகுத தகுதியாய மிகக தெளிவே யுணடாம, அது மிகத தெளிவடையவே, எலலை யிலலாது வநதுளள சாவ துககமும நாசமாம, அவை நாசமாகவே, சீவப பிரஹம ஐககிய விஷயமான புததி நிலைபெறறு நிறபதாம ‡

---

† இஙகு மனவடககமிலலாம லிநதிரிய வடகக மாததிர முடையவனுககு, மனம ஒரு முகமாய நிலலாது பல தலைபபடடு விரியும; அதனுல, அதனிடததுக காமம, கோபம், மோக மெனபன முறையே யுணடாகும, அவை யுணடாகவே, சாஸதிராாதத சிநதனை கெடும, அது கெடவே, நானே பிரஹமமெனனும அகணடாகார விருததி கெடும, அது கெட்டவிடதது, சாவ புருஷாாதத ரூபமான மோடச முணடாவதிலலைபா மெனபன கூறப்பட்டமை காணக.

மனோ நிககிரகஞ் செயயாது இநதிரிய நிககிரக மாததிரஞ் செயபவனுககுத துககம தொலைவதினறாயின, மனோ நிககிரகமும, இநதிரிய நிககிரகமுஞ் செயயாதவனுககு வரும துனபததிற களவிலலை யெனபது சொலலவேணடுவ திலலையாம, ஆகவே, அதிகாரி புருஷன பராமுகமின்றி மனோ நிககிரகஞ் செயதல வேணடும்; அதனுறறான, ஸதிதப பிரஞ்ஞை யுணடாகும, இநதிரிய நிககிரக மாததிரததா லஃதுணடாவதில்லையா மென்பதின குணாதற்பாலதாம.

‡ மனோ நிககிரகஞ் செயதுள்ளவன் இநதிரியஙகளின் வாயிலாக விஷயஙகளை யனுபவிததாலும, அவன் மனம் நிாமலமாகவே யிருக்கும்; மனம் நிாமலமா யிருப்பதால, அவனுககுச் சாவ துக்கமும படிப்படியாக நீஙகும்; அவன் புத்தி சீவப்பிரஹ்ம ஐககிய விஷயததில ஸதிரமாக விருக்கு மென்பது இஃதுணாதற்பாலதாம்.

### இந்திரிய நிக்கிரகஞ் செய்யாதவர்க்கு நல்லறிவு முதலியன உண்டாகாவென வற்புறுத்துதல்

சுரோத்திரம், துவக்கு, சட்சு, ரசநம், கிராணமென்னு மிந்திரிய மைந்தனையும் நிக்கிரகஞ் செய்யாதவர்க்குச் சற்குரு வாயிலாகவும் சற்சாஸ்திர வாயிலாகவும் ஆன்ம விஷயமான புத்தி யுண்டாவதில்லையாம், அப்புத்தி யுண்டாவதில்லை யாகவே, பொருளைத் தேடுதல் போகத்தை யனுபவித்த லென்னு முலகிய லெண்ண மொழிந்த ஆத்மரதியான முண்டாவ தில்லையாம், அவ்வாத்மரதியான மில்லையாமாயின், பின், தாம் பெற்ற தொடங்கிய ஆத்ம சாட்சாத்கார (பிரத்தியட்ச) வடிவச் சித்த சாந்தி யுண்டாகாது, அச்சாந்தி யுண்டாகாதாயின், அச்சாந்தியின் பயனாகிய மோட்சானந்த முண்டாவ தில்லையாம் $

(அருச்சுனா! நீ இந்திரிய நிச்கிரகத்தோடு கூடிய மனோ நிக்கிரகம் யாது காரணத்தா லுண்டாகாதிருக்கின்றது, அதனைக் கூறல் வேண்டுமென்று வினவுதல் கூடும், அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்) தத்தம் விஷயங்களை யனுபவித்தற்குரிய மார்க்கங்களில் தாம் விரும்பியவாறு செல்லுகின்ற சுரோத்திர முதலிய ஐந்திந்திரியங்களுக்கும் பின்னே, அவை சென்ற மார்க்கங்களைத் தொடர்ந்து செல்லுகின்ற மனமானது அந்தச் சாதக புருஷனது ஆன்ம விஷயமான புத்தியைக் கடலி லோடுகின்ற தோணியை அதற்கனுகூலமாக அதனோடு செல்கின்ற காற்றே பிரதிகூலமா யடித்துக் கெடுத்தழிப்பது போலக் கெடுத்து விடுகின்றது, அதனாலவன் உலகநோக்க முடையவனாய் விடுகின்றான். *

### ஸ்திதப்பிரஞ்ஞனிடத்து இந்திரிய மனத்தும் இயல்பாகவே அடக்க முடையனவா யிருக்கின்றன வெனல்

அருச்சுனா! எந்தச் † சாட்சாத்கார ஞானத்தை அஞ்ஞானிகள் யாவரும் இருளிலுள்ள பொருள்போ னறியா திருக்கின்ற

---

$ இந்திரிய வடக்கத்தோடு கூடிய மனவடக்க மில்லாதவனுக்கு ஆன்ம விஷயமான புத்தி யுண்டாகாது, அஃதுண்டாகா தாகவே, ஆத்மரதியூன முண்டாகாது, அஃதுண்டாகாதாகவே, சாந்தி யுண்டாகாது, அஃதுண்டாகாதாகவே, பரமானந்த முண்டாகா தென்பதிங் குணர்தற்பாலதாம்.

* இதனால், இந்திரிய நிக்ரகமுடையவனது ஆன்ம விஷயமான புத்தி ஸ்திரமா யிருக்குமென்பது பெறப்பட்டமைகாண்க.

† சாட்சாத்கார ஞானம்—யான் பிரஹ்மமாயிருக்கின்றே னென்னும் பிரத்தியட்ச ஞானம்.

ணரோ, அதனை இந்திரிய நிக்கிரகமுடைய ஞானி உள்ளங்கை நெல்லிக்கனி போலக் காண்பவனா யிருக்கின்றனன். எந்தச் சப்தாதி விஷயமான புத்தியை அஞ்ஞானிகள் யாவரும் எப்போதுங் கண்டுகொண் டிருக்கின்றனரோ, அதனை ஞானி தன் மனத்தால் காணு திருக்கின்றனன். ‡

ஸ்திதப் பிரஞ்ஞனுக்கு இந்திரியங்களே யன்றி மனமும் இயல்பாகவே அடக்கமுடையதா யிருக்குமெனல்.

நீரால் நிறைந்து தனதெல்லையைக் கடவா திருக்கின்ற சமுத்திரத்திலே நீரால் நிறைந்துள்ள கங்கை யமுனை முதலிய நதிகள் பல வழிகளால் வந்து பிரவேசித்தமையால், அந்தச் சமுத்திரம் சிறிதாகவேனும் பெருகி விகாரமடைவ தில்லையாம்; அங்ஙனமே, தமது நிஜ சொரூபத்தில் நிலைத்துள்ள ஸ்திதப் பிரஞ்ஞரது சந்நிதியை நாடிச் சப்தாதி விஷய முற்றும் அவர்தம் பிராரத்த கருமங் காரணமாக வந்தடையுமானால், அவற்றால் அவர்கள் சிறிதும் சித்தக் கலக்கமுறாது, தமது நிலையிலே யிருப்பர். அருச்சுனா! நீ இதனால், விஷய போகத்தில் விருப்ப மற்றவர் சாந்தி யடைவர்; மற்றவர் அதனை யடையாரென்ப தறியக் கடவாய். $

விஷயப் பற்றில்லாதவர் சாந்தியை யடைவர், பிறவியை யடையா ரேனல்.

அருச்சுனா! தானல்லாத வுடம்பின்கண் யானென்னும் அபிமானமும், தனதல்லாத பொருளின்கண் எனதென்னும் அபிமா

---

‡ இதனால் சாட்சாத்கார ஞானத்தை அஞ்ஞானிகள் இருளிலுள்ள பொருளை யறியாமைபோ லறியா திருக்கின்றனர்; ஞானி அதனை வெளிச்சத்திலுள்ள பொருளை யறிவதுபோ லறிந்துகொண் டிருக்கின்றனன். சப்தாதி விஷய புத்தியை அஞ்ஞானிகள் வெளிச்சத்திலுள்ள பொருளை யறிவதுபோ லறிந்துகொண்டிருக்கின்றனர்; ஞானி அதனை இருளிலுள்ள பொருளை யறியாமைபோ லறியா திருக்கின்றனனென்பது பெறப்பட்டதென்க.

இயல்பாகவே இந்திரிய வடக்கமுள்ள ஸ்திதப் பிரஞ்ஞன் எப்போதும் உலக நோக்க மில்லாது, தன்னோக்க முடையவனா யிருக்கின்றானென்பதுங் குணர்தற் பாலதாம்.

$ இதனால், சற்குரு சற்சாஸ்திர வுபதேச வாயிலாக ஆத்மாவை ஐயந்திரிபின்றி யுணர்ந்து, உணர்ந்தவா றிருப்பவர் தமது பிராரத்த கருமங் காரணமாக, சப்தாதி விஷயங்கள் தம்மைவந் தடைப்பினும், அவற்றால் கலக்கமுறா திருப்ப ரென்பது பெறப்பட்டவா றறிக.

ணமுமாகிய இவ்விரண் டபிமானமு மில்லாது, எத்தன்மையதாய பொருளையும் எனதென்று கருதுவது சொப்பனத்துமில்லா தொழித்து, தானான தன்மய மாகவே யிருந்து, தனது பிராரத்த கருமங் காரணமாக வரும் போகங்களைப் பற்றில்லா தனுபவித்து, தான் விரும்பியவா றொழுகுகின்றவ னெவனோ, ஸ்திதப் பிரஞ்ஞு ஞன அவனையே சர்வ சம்சார துக்க நிவிர்த்தி வடிவமான சாந்தி யானது வந்தடையா நிற்கும். இந்தச் சாந்தியை யடைந்தவர் மீண்டும் சம்சார துக்கத்தை யடையார். தாம் மரணமடையு மக் காலத்திலேனும் இச் சாந்திக் கேதுவாய பிரஹ்ம ஞானத்தை யடைந்தவர் * பிரஹ்ம நிருவாண வடிவமான என்னையே யடை வர்; பிறவியை யடைய மாட்டார்.

கீதாசாரியனை வியந்து துதித்தல்.

அருச்சுனனுக்கு "பின்னை யோவிவ் வுலகமெ லாம்பெற்ற
அன்னை யோதிரு மார்பத் தணைத்தவன்
முன்னை யோர்புகழ் வேத முடிவையோ
தன்னை யோவுள்ள வாறெலாஞ் சாற்றினான்" என்க.

[பின்னை - இலக்குமி; இவ்வுலகமெலாம் பெற்ற அன்னை - பூமிதேவி.]

2—சாங்கியயோக வத்தியாயம் முற்றிற்று.

---

* பிரஹ்ம நிருவாண மென்பது பிரஹ்மாநந்தமாம்.

மரண காலத்தில் பிரஹ்மஞான மடைந்தவரும் பிரஹ்ம நிருவா ணத்தை யடைவரென்று கூறினமையால், தம் முடம்பு செவ்வையாக விருக்கும்போதே விஷயப் பற்றின்றி வேதாந்த விசாரஞ் செய்து வருபவர் பிரஹ்ம நிருவாணத்தை யடைவ ரென்பது சொல்லவேண்டுவ தில்லையாயிற் றென்க.

இச் சாங்கியயோக வத்தியாயத்தில் பிரஹ்ம ஞானத்திற்குப் பரம்பரா சாதனமாயுள்ள நிஷ்காம கருமமும், நிஷ்காம கருமத்திற்குச் சித்த சுத்தி வடிவப்பயனும், அச்சித்த சுத்திக்கு ஞான நிஷ்டை வடிவப்பயனும் கூறப் பட்டவா றறிக.

## 3—கர்மயோக வத்தியாயம்.

### அர்ச்சுனன் சாங்கிய (ஞாந) யோகம், கர்மயோக மென்னும் இரண்டனுள், இன்னது முக்கியமா மேன்பது அடியேனுக்கு விளங்கவில்லை யெனல்.

வில்லைத் தரித்த தோளையுடைய அர்ச்சுனன் அலைகளை யுடைய திருப்பாற்கடலிலே அறிதுயி லமர்ந்திருந்தும், அறிதற் கரிய வேதங்களின் முடியிலே வீற்றிருக்கும் ஸ்ரீ கண்ணபிரான் தனது தேரின்மீது சாரதியாக வெழுந்தருளி யிருந்து, வேதார்த் தங்களைச் சுருங்கச் சொல்லலும் விளங்க வைத்தலுமாக வெடுத் துத் தனக் கறிவித்தும், அவ் வேதவசனங்களின் மெய்ப் பொரு ளைத் தனது சித்தக் கலக்கத்தா லறியாது, பகவானை நோக்கி, "அளக்க லாகா வளவும் பொருளும், துளக்க லாகா நிலையுந் தோற்றமும், வறப்பினும் வளந்தரும் வண்மையும்" என்பவற் ருல் மலையை யொத்துள்ள சுவாமி! தேவரீர் முன்னர் நிஷ்காம கர்மத்தைக் காட்டிலும் (ஆத்ம தத்துவ விஷயமான) ஞானயோக மானது சிரேட்டமாமென் றருளிச செய்தீர்; பின்னர்க் கரும யோகமானது* சிரேட்டமாமென் றருளிச் செய்தீர்; அதனல், யான் அவவிரண்டனுள் இன்னது முக்கியமாம், இன்னது அமுக் கியமா மென்றுணரா திருக்கின்றேன்; தேவரீரைச் சரணமடைந் துள்ள எனக்குப் பொருந்திய சோகத்தை யொழிக்குஞ் சாதன த்தை யொன்ருகவே நிச்சயித்துத் திருவாய்மலர்ந்தருளல் வேண்டு மென்று வினவினன். *

### பகவான் அர்ச்சுனனது வினவை யனுசரித்து விடை கூறல்.

யான் உலக சிருஷ்டியினரம்பத்திலே பிராணிகளைச் சிருஷ் டித்து, அப்போதே ஆன்ம அநான்ம விவேக முடையவர் பொருட்டும், மலின அந்தக்கரண முடையவர் பொருட்டும் முறையே கூறிய ஞானயோகம் கர்மயோக மென்னு மிவ்விரண்

---

* கரும யோகத்திலும் ஞானயோகம் சிரேட்டமாமாயின், தேவரீர் அடியேனுக்கு ஹிம்சைவடிவக் கருமத்தைச் செய்யுமாறேன் வற்புறுத்து கின்றீர்; அதனல் யான் கருமயோகம் ஞானயோக மென்னுமிரண்டனுள் இன்னது சிரேட்டமாமென்ப துணரா திருக்கின்றேன்; தேவரீர் எனக்கு அவ் விரண்டனுள் யாதாவ தொன்றனை யென் புத்தி ஸ்திரமாம் வண்ண மூப தேசித்தருளல் வேண்டுமென் றருச்சுனன் கண்ணபிரானை நோக்கி வினவி னனென்க.

டும் உண்மையானவையே யாம். யாகம், தானம், தவ முதலிய வடிவமாயுள்ள நித்திய நைமித்திக கருமங்களை நிஷ்காமமாய்ச் செய்யாதவன் துன்பந்தரும் ஆசை நீங்காது வருத்தமுறுவன்; மேன்மை பொருந்திய நிஷ்காம கருமத்தைச் செய்யாதவன் சந்நியாச மாத்திரத்தால் மோட்சமடைய மாட்டான். † .

ஞானி அஞ்ஞானி யென்பவருள் ஒருவரும் ஓரவஸ்தையிலும் ஒரு கணமாத்திரமும் நல்வினை தீவினை யென்னும் வினையிரண்டையுஞ் செய்யாதவராக விருப்பதில்லை. நீக்குதற்கரிய மோகத்தைத் தரும் ஆசை நீங்காத மனமுடையவனாய், (வாக்குப் பாணி பாத முதலிய) கர்மேந்திரிய நிக்கிரகஞ் செய்பவன் துன்பத்தோடு சப்தாதி விஷயங்களையே நினைத்துக்கொண்டிருப்பான். இவன் மித்தியாசாரனென்று சொல்லப்படுகின்றான். ‡ (மித்தியாசாரம்—பொய்யொழுக்கம்)

அருச்சுனா! நீ சுரோத்திர முதலிய ஞானேந்திரியங்கள் மனதுடன் கூடிச்சப்த முதலிய விஷயங்களிற் செல்வதைப் பிரயத்ன பூர்வகமாகத் தடுத்து, பயன் கருதாது நித்திய நைமித்திக கருமங்களைப் பரமேசுவரனான எனது பிரீதியின் பொருட்டுக் கர்மேந்திரியங்களால் செய்வாயாக; இங்ஙனஞ் செய்வாயாயின், சித்த சுத்தியில்லாத சந்நியாசியினும் சிரேட்டமுடையவனாவாய். நன்மை

---

† மண், தண்டம், சக்கரம், குலாலன் முதலிய காரணமில்லாவிடத்துக் கடவடிவக் காரிய முண்டாகாமைபோல, நிஷ்காம கர்மயோக வடிவக் காரணமில்லா விடத்து, ஞானயோக வடிவக் காரிய முண்டாவதில்லையாமென்பதும், நிஷ்காமகருமத்தால சித்த சுத்தியும், அதனால் ஞானமும், அதனால் மோட்சமுமுண்டா மென்பதும், சித்த சுத்தியில்லாதவன் சந்நியாசியாயிருப்பினும் அவன் மோட்சமடையா னென்பதும் இங்குணர்தற்பாலனவாம்.

‡ இதனால், ஞானி அஞ்ஞானி யென்பவருள், ஒவ்வொருவரும் பூர்வ கன்ம சம்ஸ்காரத்திற் கேற்றவாறு கருமங்களைச் செய்து வருகின்றனர்; அச்சம்ஸ்காரம் அவர்களைக் கர்மஞ் செய்யுமா றேவுவதா யிருக்கின்றது; கர்மங்களைப் பலனை விரும்பாது செய்வது கூடுமேயன்றி, அவற்றை முற்றும் விடுவது முடியாது; கர்மேந்திரியங்களை யடக்கிச் சப்தாதி விஷயங்களை நினைத்துக்கொண் டிருப்பவன் மித்தியாசார முடையவனாவன்; அவன் துன்பத்தை யனுபவித்தற் குரியவனா யிருக்கின்றானென்பன பெறப்படுமென்க.

பயக்கும் அந்த நித்திய நைமித்திக கருமங்கள் காமிய கருமங்கள் போல விரைவாக நாசமாகாது நிலைபெற்று, சித்த சுத்தியைத் தருவதன்றி, ஞானத்தையுந் தருவது வாயிலாக, விரைந்து கெடு மியல்பினையுடைய பிறப்பினையுங் கெடுக்கும். அக் கருமங்களின் தன்மையைக் கூறுகின்றேன், கேட்கக் கடவாய். *

பகவான் அதிகாரி புருஷன் கருமஞ்செய்வ தவசியமாமென்பதைப் பிரஜாபதி வசனத்தினால் நிரூபித்தல்.

சிருஷ்டியி னாரம்ப காலத்தில் ஜாதி—குலம்—தர்ம முதலிய வற்றை யாராய்ந்துணர்ந்து இந்திரன் முதலிய இமையவரைச் சந்தோஷிப்பிக்கும் வேள்வியோடு கூடவே, அதனைச் செய்தற்குரியவராய பிரஹ்ம க்ஷத்திரிய வைசியரென்னுமிம் மூத்திறத்தாரையும் படைத்த பிரஜாபதி, அவர்களை நோக்கிப் பொருந்துதற்குரிய தேவாராதனம் இவ் வேள்வியாம்; இவ் வேள்வி நீங்கள் விரும்பியவற்றையெல்லாம் தரும். †

(நீங்கள் வேள்வி வடிவக் கருமம் நாங்கள் விரும்பியவற்றை யெல்லாம் தருவ தெவ்வாறு மென்று கருதுதல் கூடும். இந்த வேள்வி தரும் பலனைக் கிரமமாகக் கூறுகின்றேன், கேட்பீராக.) வேள்வி செய்தற் கதிகாரி புருஷராயுள்ள நீங்கள் இந்த வேள்வி முதலிய கருமங்களால், அவ் விந்திரன் முதலிய விமையவரது சித்தங்களில் சந்தோஷமுண்டாமாறு செய்யுங்கள்; அவ்வாறு செய்வீராயின், அப்போதே அவ் விந்திரன் முதலிய இமையவர்களும் மேகத்தின் வாயிலாக மழை பொழியச் செய்து, அதனால் அன்னமுண்டாமாறு செய்து, அவ் வன்னத்தால், உங்களுடம்பினை விருத்தி யடையச்செய்து, அதனால் உங்கள் மனங்களில் சந்

* இதனால், மனோ விந்திரிய நிக்கிரகஞ் செய்து, பயன் கருதாமல் ஈசுவரப் பிரீதியாகக் கர்மங்களைச செய்பவன் சித்த சுத்தி பெறுவான்; அதனால், ஞானத்தைப் பெறுவான்; அதனால், பிறவியின்மையைப் பெறுவானென்பன பெறப்பட்டன வென்க.

† இமையவர்-தேவர்; வேள்வி-யாகம். வேள்வி யென்பதிங்கு நித்திய நைமித்திக கர்மங்களையு முணர்த்தி நின்றது. பிரஜாபதி-பிரமன். நித்திய நைமித்திக கருமங்களுள் எதனையும் செய்யாதிருப்பவர்க்குக் காமிய கர்மத்தைச் செய்வது உசிதமா மாகலின், அதுபற்றிக் காமியகருமம் சிறப்பித்துக் கூறப்பட்டதென்க. இதனால், நிஷ்காம கருமத்தைச சிறப்பித்துக் கூறு மிவ்விடத்திற் காமிய கருமத்தைச சிறப்பித்துக்கூறல் குற்றமுடையதன்று மென்பது பெறப்பட்டவா றறிக.

தோஷமுண்டாமாறு செய்வர். இவ்வாறு பரஸ்பரம் (ஒருவர்க்கொருவர்) சந்தோஷிப்பிக்குந் தன்மையானது தவறுதிருக்க வொழுகிவருவீராயின், தேவருடமக்களுமென் றிருவிதமாகவுள்ள நீவி ரிருவீரும இவவாறு முயலுங் கிரமததினல், நன்மையையடைவீர்களென்று கூறினர், மீணடுமப் பிரஜாபதி அவர்களை நோக்கி, வேள்வியினல் சநதோஷ மடைந்த இந்திரன் முதலிய இமையவா தமக்குத் தநத அன்னம, பசு, சுவாண முதலியவற்றைக் கொண்டு பின்னு மவாகளைப பூசியாது, அவறறைத தமக்கே யுபயோகமாக்கிக் கொள்பவர், தமககுக் கல்வி கறபிதத ஆசிரியரைப் பழித்துக கூறிய கள்வரினும் கொடியராவா, செய்நநன்றி கொன்றவருமாவர். தான் தேவர்கள் வாயிலாகபபெற்ற அன்ன முதலியவறறைக் கொண்டு, அவாகளைப பூசிததது, பின் எஞசிய அன்ன முதலியவற்றைத் தானேற்றுக்கொண் டுண்ணுது, தான பெற்றுள்ள அவ்வன்ன முதலியவற்றைத தன் பொருட்டாகவே யுபயோகமாக்கிக் கொளளுகின்றவன் பஞசசூனை முதலிய பாவஙகளையே யுண்பவனுவன் ‡

‡ ஏனககுக கிடைதத அனனதறைத தேவதைகளுக காபபணஞ செயயா துணபவனது நோககததிறகு அஃது அனனமாகத தோனறினும, சாஸதிர திருஷ்டிககும தேவதைகளின திருஷடிககும பாவரூபமாகவே தோனறு மெனபதாம

ரிஷி யகஞம, தேவ யகஞம, பூத யகஞம, மனுஷ்ய யகஞம், பிதிரு யகஞமெனனு மைம்பெரும் வேளவிகளையும் செயதற பொருட்டுத தான சமைதத அனனததை யுபயோகமாககி, எஞசினனற அனனததை யுண்பவன பஞ்ச சூனை முதலிய பாவஙகளினினறும, சோாவினுற செயத பாவததினினறும, நறகருமஙகளைச செயயாமையா லுண்டாகிய பாவததினின்றும நீஙகுவனெனப தீஙகுணர்தற பாலதாம

(1) வேதததைப படிததல, படிபபிததல, சநதியை யுபாசனை செயதல ரிஷி யகஞமாம (2) அககினிஹோததிர முதலியவறறைச செயதல தேவயகஞமாம், (3) பலி, வைசுவ தேவஙகளைச செயதல் பூதயகஞமாம, (4) தன் வீட்டின்கண் வநத அதிதி (விருநதினா)களை யன்ன முதலியவறறால் சநதோஷ முறசசெயதல மனுஷ்ய யகஞமாம, (5) சிராத்தம்-தாபபணஙகளைச செயதல பிதிரு யகஞமாம

பஞ்சசூனை யெனபன (1) நெல் முதலியவறறை உரல் முதலியவற்றிலிட்டுக் குததுதல் (2) யநதிரம—அமமிகளில அரிசி முதலியவறறைப் போட்டரைததல், (3) அடுப்பில் தீமூட்டல, (4) பாண்டஙகளில நீரூற்றி வைததல், (5) பெருககல் மெழுகுதல முதலிய செயல்களால் வரும் பாவஙகளாம். இப்பாவங்களும் மறறப் பாவஙகளும் ரிஷியகஞ முதலிய ஐம்பெரும் வேள்விகளையும் செய்பவர்கட்கு ஒழிநதுபோ மென்பது இங்குணர்தற் பாலதாம

## வேள்வி முதலிய கருமங்கள் சம்சார சக்கரத்தின் பிரவிர்த்திக்குக் காரணமாயிருத்தலினாலும், அவை செய்யத்தக்கனவாமெனல்.

கம்பீரமுடைய இளஞ்சிங்கத்தை யொத்த அருச்சுனா! போஜனஞ் செய்வது வாயிலாகப் புருஷஸ்திரீகளின் சரீரத்தின் கண்ணே பிரவேசித்துச் சுக்கில சோணித வடிவமாகப் பரிணாமத்தை யடையும் அன்னத்தினால் பிராணிகளின் சரீரங்க ளுண்டாவனவாம்; அவ்வன்னம் நெல் கோதுமை முதலிய வடிவமாக நல்ல மழை பெய்வதாலுண்டாவதாம்; வளப்பம் பொருந்திய அந்த நல்ல மழை மேன்மை பொருந்திய தேவர்களின் சந்தோஷத்தா லுண்டாவதாம்; அச்சந்தோஷமும் தகுதியமைந்த அக்கினிஹோத்திர முதலிய கருமங்களா லுண்டாவதாம்; இவ்வக்கினி ஹோத்திர முதலிய கருமங்கள் பெரும் பிரமாணமாயுள்ள வேதம் கூறுவதால் தோன்றுவனவாம்; பெருமை பொருந்திய அவ்வேதம் பரமான்மாவினின்றும் நிசுவாச முண்டாவது போலத்தோன்றி, அத் தருமவடிவ யக்ஞத்தின் கண்ணே நிலைபெற்றிருப்பதாம்.

(அருச்சுனா! நீ தேவரீர் இவ்வாறு கூறியதால் சித்தித்த பலன் யாது என்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

உணவால் உடம்பும், மழையால் உணவும், தேவர்களின் மகிழ்ச்சியால் மழையும், அக்கினி ஹோத்திராதி கருமங்களால் தேவர்களின் மகிழ்ச்சியு முண்டாமென் றிங்ஙனங் கூறியவாற்றால், கருமங்களிலிருந்தே காணப்படுவனவெல்லாம் தோன்றுகின்றனவென்பதறிவாயாக. இவ்வாறு நிலைபேறுடைய ஈசுரனால் நியமிக்கப் பட்டு வருகின்ற கர்மரூபமான சக்கரத்தின் வழியை யனுசரியா தொழுகுகின்றவர், தோன்றும்போது மாத்திரம் ரமணீயமாக விருக்கின்ற இந்திரியங்களின் விஷயங்களையே தாம் களிப்புறுதற் கிடமாகவு முடையவராவர்; அவ்வேதுவால் பாவஜீவனமுடைய

அவர் தம் வாழ்நாளை வீணுகவே கழிப்பவராவரென்பதை அருச்சுனு நீ அறியக்கடவாய். $

பகவான் பரமாநந்த வடிவமாக விளங்கும் ஜீவன் முக்தன் தான் செய்யவேண்டியவற்றை யெல்லாஞ்செய்து முடித்தவனுக லின், உலகவடிவச் சக்கரத்திற் கேதுவாகிய கர்மங்களைச் செய்யா திருப்பினும் பாவத்தை யடையான்; ஏனையோர் செய்யாதிருப் பின், பாவத்தை யடைவாரெனல்.

அருச்சுனு! அசுத்தமனத்தா லறிதற்கரிய ஆத்மாவைப் பிரஹ்ம சொரூபமாக அபரோக்ஷமாயறிந்து, அவ்வான்மாவி னிடத்திலேயே பூரணமாகத் தோன்றும் ரதி, திருப்தி, சந் தோஷங்களை யனுபவிக்கும் பிரஹ்ம நிஷ்டன் அளவற்ற கருமங் காரணமாக வுண்டாகின்ற பயன்களை யடையுமாறு விரும்பான்; அக்காரணத்தாலவன் நித்திய நைமித்திக கருமமனைத்தையும் செய்வதால் அடைவதாய வொருபய னிருக்கின்றதோ? இல்லை யாம்; அக்கருமக்களைச் செய்யாமையா லடைவதாகிய ஒரு பழி யிருக்கின்றதோ? இல்லையாம். இவ்வுலகத்திலே அறிஞர் இந்தப் பிரஹ்ம நிஷ்டன் இக்கருமங்களைச் செய்யாதிருக்கின்றுனென்று நினைக்கவுமாட்டார்; அவனுக்கு அக்கருமங்களைச் செய்யுமாறு விதிக்கவுமாட்டார். *

---

$ ஒவ்வொரு சிருஷ்டியினுரம்பத்திலும் பரமேசுவரனிடத்தினின்றும் வேதமுண்டாகின்றது; அதன்பின் அவ்வேதங்கூறும் கருமங்களின் ஞானம் மக்கட்குண்டாகின்றது; அதன்பின் அக்கருமானுஷ்டானத்தால் அபூர்வம் அல்லது அதிர்ஷ்டவடிவத் தருமமுண்டாகின்றது; அதனுல் மழை யுண்டாகின்றது; அதன்பின் நெல்—கோதுமை வடிவ அன்ன முண் டாகின்றது; அவ்வன்னத்திலிருந்து மனிதர் முதலிய சரீரங்களுண்டா கின்றன; அதன்பின் மனிதர்கட்குக் கருமஞ் செய்வதன்கண் மீண்டும் முயற்சி யுண்டாகின்ற தென்னும் சம்சார சக்கரத்தை யங்கீகரியாதவர் இந்திரியாராமராய்ப் பாவ கருமங்களையே செய்பவராய்த் தமது காலத்தை வீணுகவே கழித்துத் துன்பத்திற் காளாகின்றனரென்ப திங்குணர்தற் பாலதாம். இந்திரியங்களால் விஷயங்களை யோய்வின்றி யனுபவிப்பவர் இந்திரியா ராமரென்று கூறப்படுகின்றன ரென்க.

* அபரோக்ஷம்-பிரத்தியக்ஷம். ரதி, திருப்தி, சந்தோஷமென்பன- பிரியம், மோதம், பிரமோத மென்பன போல மனோவிருத்தி விசேஷங் களாம். பிரஹ்மநிஷ்டன் சர்வாநந்த சொரூபனுக விளங்குதலின், செய்யத் தக்கது மில்லையாம், பெறத்தக்கது மில்லையாம்; அதனுலவன் கருமகர்த்தா வாவதில்லையாம். இங்ஙனமுள்ள இவன் அறிஞர் பழித்தற் கிடமாகாதிருக் கின்றுனென்ப திங்குணர்தற் பாலதாம்.

அந்தக் காரணத்தால் அஞ்ஞானியாகிய நீயும், யான் தத்துவ ஞான மார்க்கத்தை மேற்கொண்டு கர்மங்களைச் செய்யாதிருப்பே னுக வென்று கருதுவ தொழிந்து, பலத்தின்மீ திச்சையற்று, வேத விகிதமான நித்திய, நைமித்திக கருமங்களைச் சிரத்தையோ டிடைவிடாது செய்வாயாக; அந்த நித்திய நைமித்திக கரு மங்களைச் செய்வதால், சித்த சுத்தி வாயிலாகத் தத்துவஞான மடைந்து, துக்கமென்பது சிறிதுமில்லாத மோட்சத்தையே யடைதல் கூடும். முற்காலத்தில் நித்திய நைமித்திக கர்மங்களைப் பயனை விரும்பாது செய்து முத்தி பெற்றவர் அநேகராவர். அவர் கள் யார் யாரென்று அருச்சுனு! நீ வினவுவாயாயின், அவரைக் கூறுகின்றேன், கேட்கக்கடவாய். அவர்கள் ஜனகன், அஜாத சத் துரு, அசுவபதி, பகீரதன் முதலிய அரசராவர். அவர்கள் சிரத்தை யோடு சுருதி ஸ்மிருதிகள் கூறும் கர்மங்களைப் பயன் விரும்பாது செய்து வந்தமையாலன்றோ அந்தக்கரணசுத்தி வாயிலாகத் தத் துவஞானிகளாகி அநர்த்த நிவிர்த்தி—ஆநந்தப் பிராப்தி வடிவ மோக்ஷ உலக மடைந்தனர் இவர்களது சதாசாரமும் பயனை விரும்பாது கருமஞ்செய்ய வேண்டுமென்பதற்குப் பிரமாணமாம். அருச்சுனு! நீ உன்னைத் தத்துவ ஞானியாக வெண்ணிக்கொண் டாலும், † இவ்வுலக சங்கிரகத்தின் பொருட்டாவது நித்திய நைமித்திக கருமங்களைச் செய்யக்கடவாயாக.

(அருச்சுனு! நீ யான் கருமஞ் செய்வது எவவாறு லோக சங் கிரகமாகுமென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின் றேன், கேட்கக்கடவாய்)

அரசர் முதலிய சிரேஷ்ட புருஷா செய்து வருகின்ற கருமங் களை அவரது கட்டளைக் கடங்கி நடப்பவா செய்வதல்லாமல் வேறு கர்மங்களைச் செய்யமாட்டார்களாகலின், எவ்வுலகத்திலும் மிகு பிரசித்தி பெற்றுள்ள நீயும உலகத்தாரைப் பாதுகாத்தற் பொருட்டுச சுப கருமங்களை யவசியமாகச் செய்தல்வேண்டும். இதற்குப் பகவானுகிய யானே உதாரணமாக விருக்கின்றேன். யானிங்ஙனங் கூறியது உண்மையல்லவாயின், யானேன் கருமஞ் செய்தல் வேண்டும்? எனக்குரிமையாயுள்ள சுவர்க்க மத்திய பாதாள மென்னு மிம்மூன்றுலகத்திலும் அவற்றிற்குச் சுவாமி யாகிய எனக்குச் செய்ய வேண்டுவதாகிய காரியம் சிறிது மில்லையாம். இம்மூன் றுலகத்திலும் கிடைத்தற்கரியனவாய்

---

† நீ உன்னைத் தத்துவஞானியாக நினைத்துக்கொண்டு, கருமங்களைச செய்யாதிருப்பாயாயின், உலகந் தடுமாற்ற முடையதாமென்று அருச்சுன னுக்குப் பகவான் கூறினுரென்ப திங்குணாதற்பாலதாம். உலக சங்கிரக மாவது உலகத்தாரைத் தத்தம கருமங்களைச செய்யுமாறு செய்து, அதரு மத்தினின் றுந் திருப்புதலாம்.

என்னாலடையத் தகாதனவும், அடையத் தக்கனவுமாயுள்ள பொருள்களெவை? ஒன்றுமில்லையே! அங்ஙனமாயினும், அருச்சுனு! இவ்வுலகத்தார் சிரத்தையோடு சுப கர்மங்களைச் செய்துய்தற்பொருட்டு, யான் சுப கர்மங்களைச் சிரத்தையோடு செய்து வருகின்றேன்; சுப கருமங்களைச் சிரத்தையோடு செய்து வருகின்ற என்னையும் நீ கருமஞ் செய்வதவசிய மென்பதற்குதாரணமாகப் பார்க்கக்கடவாய். அதனால், அருச்சுனு! நீயும் என்னைப் போலச சுப கருமஙகளைச சிரத்தையோடு செய்யக்கடவாய்.

## பகவான் தான் கருமஞ் செய்யாவிடின் உண்டாகுந் தோஷத்தைக் கூறல்.

அறமனைத்தையும் ஆதரிப்பவனுன யான் என தவதார சரீரத்திற்கேற்ற சுப கர்மங்களைச செய்யா தொழிவேனுயின், யான் செய்யாத சுபகர்மங்களைக் கர்மாதிகார புருஷர் யாவரும் எவ்வகையாலுஞ் செய்யமாட்டார்; அந்தக் காரணத்தாலே, அநாதியாக நிலை பெற்றுள்ள பிராஹ்ம—க்ஷத்திரிய முதலிய வருணங்கள் தடுமாற்றமுடையனவாம, ஆகவே, அந்தக் கருமாதிகார புருஷர் யாவரும் நாசமடைவர்; அங்ஙனம உலகம் வருண சங்கரத்தால் (கலப்பால்) கெடாதிருத்தற் பொருட்டு, யான் சுப கருமங்களைச் செய்து வருகின்றேன். பின்னருண்டாவதை யறியாது இப்பயனெனக்குண்டாதல் வேண்டுமென்னு மவாவோடு சுபகர்மங்களைச செய்கின்ற அஞ்ஞானியைப் போல, பிறருய்தற் பொருட்டு அருச்சுனு! உனது சுபகர்மங்களைச் செய்யக் கடவாயாக; அவற்றின் பயனைக் கருதாதிருக்கக் கடவாயாக; யானிக் கரும கர்த்தாவென்னும் அபிமானத்தோடு பயனை விரும்பிக் கருமங்களைச் செய்கின்றவரது புத்தியைத் தத்துவோபதேசவாயிலாகச் சலிக்குமாறு செய்தலையு மொழிவாயாக.

## பகவான் ஞானிக்கும் அஞ்ஞானிக்கு முள்ள வேறுபாட்டைக் கூறல்.

ஆத்மாவாய தனக்கும் அநாத்மாவாய கண் முதலிய இந்திரியங்கட்கும் யதார்த்தமாகவுள்ள வேறுபாட்டினைச் செவ்வையாக வுணர்ந்த ஞானியானவன், ஐவகையாக வுள்ள கண் முதலிய இந்திரியங்களே உருவ முதலிய விஷயங்களில் தம்மியல்பிற்கேற்றவாறு சென்று வருந்துகின்றன; அசங்கமாயும், சித்தாயுமுள்ள யான் எதனிடத்துஞ் சென்று வருந்துவதில்லை யென்பதுணர்ந்து,

கரும கர்த்தாவாகா திருக்கின்றான். இவ்வாறறியாத அஞ்ஞானி யானவன் லௌகிக கர்மம், வைதிக கர்மமென்னு மிருவகைக் கருமங்களையும் யானே செய்தேனென்று கருதி மனமெலிந்து வருந்துகின்றான். அருச்சுனா! நீ உய்தற் பொருட்டு யான் உபதேசித்த இந்த உபதேசத்தை யுணர்ந்து, உனக்குச் சுதர்மமாயுள்ள யுத்தத்தைப் பரமேசுவரனை வென்னிடத் தர்ப்பணஞ் செய்து, இச்சையற்று மமதை யற்றுச் சோக மற்றுச் செய்யக்கடவாய்.

## பகவான் கர்மாநுஷ்டானத்தால் வரும் நன்மையையும் அவ்வநுஷ்டான மில்லாமையால் வரும் தீமையையும் கூறல்.

எவர் பரமாசாரியனாகிய வென்னிடத்தில் இவர் நம்மைத் துக்கத்தைத் தரும் கர்மத்தைச் செய்யுமாறு பிரவிர்த்திக்கச் செய்கின்றாரென்னும் அசூயையை யொழித்து எனது பரம தாற்பரிய மாயுள்ள இச் சுப கர்மத்தைச் சிரத்தையோடு எப்போதுஞ் செய்து வருகின்றனரோ, அவர் புண்ணிய பாவரூபமான கரும மனைத்தையும் முற்றும் விடுதற் குரியவராவர்; எவர் என்னிடத்து அசூயையால் யான் கூறிய இச் சுபகர்மத்தை யங்கீகரித்துச செய்யாது நிந்திக்கின்றாரோ அவர் மிக வலிதாய பூமியினுண்டாகிய விருக்ஷம் போல விருத்தியாகாது கெட்டு ஓரறிவு மில்லாதவராவர். ‡

(அருச்சுனா! நீ அரசனது கட்டளையை யிகழுகின்றவர்க்குத் தவறாது தண்டனை யுண்டாதல்போல, பரமேசுவரராகிய உம்முடைய கட்டளையை யிகழுகின்றவர்க்குந் தண்டனை தவறா துண்டாகு மென்பதை யறிந்தவரும் எக்காரணத்தால் தங்களது பரம தாற்பரியமான சுப கருமத்தை மேற்கொள்ளாது சர்வ புருஷார்த்தத்தினின்றும் பிரஷ்டராய் விடுகின்றனரென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்)

அருச்சுனா! இது செய்யத் தக்கது, இது செய்யத் தகாதது என்று கருமத்தின் பாகு பாட்டைச் செவ்வையாக அறிந்தவரும் பூர்வ ஜன்மங்களிற் செய்த பிரகிருதியி னனுசாரமாகவே, புண்ணியரூப அல்லது பாவரூப கருமததை மேற்கொண்டு செய்து

---

‡ சுப கருமங்களைப் பயனை விரும்பாது செய்பவர் அந்தக்கரண சுத்தி வாயிலாகத் தத்துவ ஞானிகளாகி, அதனால, கருமங்க ளற்றவராவர். சுப கர்மங்களைச் செய்யாது அவற்றை நிந்தனை செய்து வருகின்றவர் சர்வ புருஷார்த்தத்தினின்றும் பிரஷ்டராய், சகுண நிர்க்குண விஷயமான ஞானங்களுள், ஒரு ஞானமுமில்லாதவராவர்; அதனாலவர் மூடரேயாவரென்பதிங் குணர்தற்பாலதாம். ஒருவனிடத்துள்ள குணத்தின்கண் மற்றொருவன் குற்றத்தைக் கற்பித்துக்கூறல் அசூயையாம்.

வருவாராயின், மற்றவர் சர்வஞ்ஞனுயுள்ள எனது தண்டனையால் உபகாரமுண்டென்ப துணர்தற் குரியவராவரோ? அவரிடத்து எனது கட்டளை யாது செய்யும்? $

(அருச்சுனு! நீ விவேகி, அவிவேகி யென்பார் யாவரும் பூர்வ ஜன்மங்களிற் செய்த பிரகிருதியி னனுசாரமாகவே ஒழுகுவாராயின், விதி நிஷேத சாஸ்திரம் வியர்த்தமாமே யென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.)

சுரோத்திரம், துவக்கு, சட்சு, ரசநம, கிராணம எனனும ஞானேந்திரிய மைந்தும் தொடர்ந்து செல்வனவாகிய சத்த, பரிச, ரூப, ரச, கந்த மென்னும் ஐந்து விஷயங்களாகிய கொடிய பாலை நிலத்தின்கண் தம் மனம் உலர்ந்து வெதும்பித் துன்பமுறுகின்ற அதிகாரி புருஷர் இப்பாலை நிலத்தினின்றும் பிழைத்துப் போதற்குக் காரணமாய ஒரு ஞானமார்க்கத்தைக் கள்ளரைப்போலத் தடுத்து, அவர்கட்குப் பலவாருய துன்பங்களைச் செய்ய, பகையிரண்டு நியமமாக விருக்கின்றன; அவற்றைக் கூறுகின்றேன், கேட்கக் கடவாய். அவை ஒவ்வொருநாளும் குறைதலில்லாது விருத்தி யடைந்து வருகின்ற ராகத் துவேஷங்களாம். அருச்சுனு! நீ அவற்றைப் பிரயத்தன பூர்வகமாக வொழிக்கக் கடவாய். *

---

$ பூர்வ ஜன்மங்களிலுள்ள தர்மம், அதர்மம், ஞானம, இச்சை முதலியவற்றின் சம்ஸ்காரம் இந்த ஜன்மத்தின்கண் அபிவியக்தமாகின்றது; அந்த அபிவியக்த சம்ஸ்காரமே இங்குப் பிரகிருதியாம். தீவினையால் துக்கமுண்டாமென்பதை யறிந்தவரும் துர்வாசனையின் நிகுதிப்பாட்டால், அதனைச் செய்து வருகின்றனர்; மூடர் தீவினை செய்வது பற்றிப் பேசுவதேன்? அவர் எனது கட்டளையை யிகழ்வது ஆச்சரியமன்று; துக்கத்தை யடைதற்குரிய அவரிடத்து எனது கட்டளை யாது செய்யும் என்று பகவான் கூறினரென்க. அபிவியக்தம்-வெளிப்படுதல்.

* மார்க்கத்தில் செல்லும் பிரயாணிகளுக்குக் கள்வர் பலவகையாய தடைகளைச செய்வதுபோல, தத்துவஞான மார்க்கத்தி லொழுகும் அதிகாரி புருஷர்க்கும் ராகத் துவேஷங்கள் பலவகையாய தடைகளைச செய்கின்றன; அதனுல், அதிகாரி புருஷர் ராகத் துவேஷங்களைப் பிரயத்ன பூர்வகமாகக் கெடுத்தல் வேண்டுமென்பதிங் குணர்தற்பாலதாம்.

பூர்வ ஜன்மங்களிற் செய்த பிரகிருதி தனது வலிமையால் சப்தாதி விஷயங்களை நினைப்பித்தல் வாயிலாக ராகத் துவேஷங்களுண்டாமாறு செய்கின்றது; அதனுல். புருஷன் தீவினைகளைச் செய்கிறுன். விதி நிஷேத சாஸ்திரமோ தீவினை செய்பவன் தவருது கெடுவானென்றும், ராகத் துவேஷங்கள் பகவானைப் பயனை விரும்பாது பூசித்தலால் கெடுமென்றும் கூறுகின்றது. அதனுல் விதி நிஷேத சாஸ்திரம் அதிகாரி புருஷனுக்கு வீணுகா தென்பதாம்.

(அருச்சுனா! நீ இந்த யுத்தம் சாஸ்திர விகித கருமமா யிருத்தல்போல, சந்நியாச பூர்வகமான பிட்சான்ன போஜனமும் சாஸ்திர விகித கர்மமா யிருக்கின்றது; இந்த யுத்தரூப கருமம் இம்சை வடிவமா யிருத்தலால், இதனை யொழித்து, இம்சையில்லாத சந்நியாச பூர்வகமான பிட்சான்ன போஜன கருமத்தை யானேற்றுக் கொள்ளுகின்றே னென்று கூறுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.) அருச்சுனா! ஒருவன் தனது ஆசிரமத்திற்குத் தகுதியல்லவென்று சாஸ்திரம் விலக்கிய கருமங்களைச் செய்வது, அவனுக் கொருவாற்றானுந் தகுதியுடையதன்றாம்; ஒருவன் தனது ஆசிரமத்திற்குத் தகுதியான யுத்த முதலிய கருமங்களைச் செய்து கெடுவானாயினும், அவன் அக் கருமங்களைச் செய்வது, அவனுக்கு மிக மேன்மையைத் தருவதாம். அந்தக் காரணத்தால், உன்னை யொத்த மேன்மைக் குணமுடையார் தமது ஆசிரமத்திற்குத் தகுதியன்றென்று சாஸ்திரம் விலக்கிய கருமங்களை மிகுதியாகச் செய்வதைப் பார்க்கினும், சாஸ்திரம் தமது ஆசிரமத்திற்குத் தகுதியாமென்று விதித்த கருமங்களை யற்பமாக வேனும் செய்தல் வேண்டும்; அங்ஙனஞ் செயதலே அவர்க்குரிய தருமமாம். *

## அருச்சுனன் வினா.

பகவான் இவ் வாக்கியங்களைத் தனது தேரின்மீதிருந்து கூற, அவற்றைக் கேட்ட அருச்சுனன், பின்னும் வினவக் கருதி, பகவானை நோக்கி, பகவானே! தமது வல்லமையாலே தமக்காக வேண்டிய காரியங்களைத் தமக்குப் பரதந்திரராயுள்ள சேவகரைக் கொண்டு செய்துகொள்ளும் அரசரைப்போல, அசுப கர்மம துக்கமனைத்திற்குங் காரணமா யிருத்தலால், அதனை நாம் செய்ய மாட்டோமென் றிருப்பவரையும் மயங்கச் செய்து, அவரதனைச் செய்யுமாறு செய்விக்கின்றவன் யார்? என்று வினவினன்; திருப்பாற்கடலைத் தாம் படுக்கும் பாயலாகக் கொண்ட பகவான்

---

* தரும சாஸ்திரம் பிராமணர் முதலிய நான்கு வருணத்தார்க்கும் அவரவர்க்குரிய ஆசிரமங்களைக் குறித்து எவ்வெக் கருமங்களை விதிக்கின்றதோ அவ்வக் கருமங்களே அவரவர்க்குச் சுவ தருமங்களாம். பிராமணர் முதலியோர் தத்தமது ஆசிரமங்களுக்குரிய கருமங்களை விட்டு, மற்றவர்க்குரிய கருமங்களைச் செய்வது அவர்க்குப் பர தருமமாம் சுவ தருமம் புண்ணிய வேதுவாம், பர தருமம் நரக வேதுவாம், அதனால், அருச்சுனா! நீ உனக்குரிய சுவ தருமமாகிய யுத்தத்தைச் செய்யக் கடவாயென்று பகவான் கூறினரென்க.

அதற்கு விடை இவ்வாறென்று கூறுபவராய்ச் சொல்லத் தொடங்கினார்

அருச்சுனன் வினவியதற்குப் பகவான் விடை கூறல்.

அருச்சுனா! நீ வினவிய காரணம் தீமையைத்தரும் இராசத குண வடிவ மனத்தினின்றும் தோன்றியுள்ள அந்தக் காமமேயாம், இந்தக் காமமே தனக்குப் பிரதிகூல முண்டாகும்போது துவேஷ வடிவமாகப் பரிணமத்தை யடைகின்றது, அதனால், அத்தியந்த முக்கிர வடிவத்தைக் கொண்டுள்ள அந்தக் காமத்தின் பெயர் குரோதமென்று சொல்லப்படுகின்றது அந்தக் காமத்தா லுண்டாகும் தீமையைக் கூறுகின்றேன், கேட்கக் கடவாய்

பகவான் காமத்தின் கொடுமையைக் கூறல்

காமமானது போகங்களால் திருப்தியடையாதிருத்தலால், எவ்வகைத்தாய போகத்தையும் அனுபவிக்கத்தக்க வல்லமையுடையதாம், அதனால், எவ்வகைத்தாய பெரும் பாவத்தையும் கொடுக்கத்தக்க வல்லமை யுடையதாம், அதனால், எவ்வகைத்தாய பிராணிக்கும் பகையா யிருப்பதாம் இன்னு மிக்காமம் இத்தன்மையதாமென்று யான் கூறுவதை அருச்சுனா! நீ கேட்கக் கடவாய் †

பகவான் காமத்தின் கொடுமையைத் திருஷ்டாந்த வாயிலாகக் கூறல்

நெருப்பை மிருதியாய்ப் புகையும், மிக்க பிரகாசமுள்ள கண்ணாடியை அழுக்கும் மறைத்திருத்தல்போல, தேகத்தை யடைந்துள்ள சீவர்களின் உள்ளுணர் வெல்லாவற்றையும் இது வேண்டும், அது வேண்டு மென்னும் விருப்பம் மாறாது பொருந்தியுள்ள கொடிய காமமானது மறைத்திருக்கின்றது ‡

---

† காமமுடையவன் தான் விரும்பிய பொருளை யடைதற்பொருட்டுப் பெரும்பாதகச் செயலையும் செய்தலின், காமம் தன்னை யுடையவனுக்குப் பெரும் பாதகத்தையுந் தருதற் குரியதா யிருக்கின்றது என்றும், காமம் எவ்வகைத்தாய போகத்தையும் தன்னை யுடையவன் அனுபவிக்கத்தக்க வல்லமை யுடையதாயும், அதனால் அவன் பெரும் பாதகச் செயலையுஞ் செய்தற்குத் தக்க வல்லமையுடையதாயு மிருக்கின்றமையின், அது பகைவரை வசமாக்குதற் குரிய சாம தான பேத-தண்டமென்னும் நால்வகை யுபாயங்களுள், தண்டோபாயத்தாலன்றி, ஏனைய உபாயங்களால் வசமாகா திருக்கின்ற தென்றும், இங்குணர்தற் பாலனவாம்

‡ உள்ளுணர் வென்றது நித்தியா நித்திய வஸ்து விவேக ஞானத்தை, காமமுடையவர் சித்தம் கலக்கமுடையதா யிருத்தலின், அச்சித்தத்தின்கண் ஒவ்வொரு சமயத்திற் றோன்றும் நித்தியாநித்திய வஸ்து விவேக ஞானம், தான் தோன்றியவுடனே காமத்தால் மறைந்து விடுகின்றதென்பதிங் குணர்தற் பாலதாம்

பகவான் காமமுண்டாதற்குக் காரணமா யிருப்பனவற்றைக் கூறல்;

இது வேண்டும், அது வேண்டுமென்னும் விருப்பம் மிக்குள்ள இக்காமமானது இந்திரியம் - மனம் - புத்தியென்னு மிம் மூன்றையுமே தனக்கு வழியாகக்கொண் டுள்ளே பிரவேசித்து, தேகாபிமானிகளை அவர்களின் நித்தியா நித்தியவஸ்து விவேக ஞானத்தை மறைத்து மயங்கச் செய்கின்றது ; அக்காரணத்தால், அருச்சுனா ! நீ முதலில் சுரோத்திரம் (காது) முதலிய ஞானேந்திரிய மைந்தனையும் காமமானது உன்னை மயக்குவதற்குமுன்னே அடக்கி, அதன்பின் மனத்தையும் புத்தியையு முன்வசமாகச் செய்து, பின்னர் உன்னோ டுண்மையில் சம்பந்த மில்லாததாகிய கொடிய காமத்தை நாசஞ்செய்யக் கடவாய். $

பகவான், ஆத்மா உடல் பொறி முதலியவற்றினும்
வேறு யிருப்பதாம், அதனைத் தரிசித்தால்
காமமுற்றுங் கெடுமேன்று கூறல்.

ஸ்தூல பூதங்களின் மயமாகப் பொருந்தியுள்ள இத்தூல தேகத்தினும் சுரோத்திர முதலிய இந்திரியு மைந்தும் பரமாம் ; அடக்குதற்குரிய அவ்விந்திரியத்தினும் மனம் பரமாம்; அம்மனத்தினும் பாதுகாத்தற்குரிய புத்தி பரமாம் , அப் புத்தியினும் நிருசியமா யுள்ள உடல் பொறி முதலியவற்றிற்கு வேறுயிருந்து, அவற்றை யறிகின்ற ஆத்மாவே பழமையான பரமாம். *

அருச்சுனா ! நீ முன்னர் இவ்வாறு புத்தியினும் பரமாயுள்ள ஆத்மாவைச் சந்தேக விபரீத மில்லா துள்ளவா றறிந்து, மித்தை

---

$ காம முடையவன் பாவ மனைத்தையும் செய்தற்குரியவனும், அஃதில்லாதவன் ஒரு பாவத்தையும் செய்தற் குரியனல்லனு மிருத்தலின், பாவஞ்செய்யா திருத்தல் வேண்டுமென்று விரும்புகின்றவா காமத்தை யவசியங் கெடுத்தல் வேண்டும், அக்காமந் தோன்றுதற் கிடம் முன்னர் இந்திரியமும், பின்னர் மனமும் புத்தியுமா யிருத்தலின், காமத்தைக் கெடுக்க விரும்புகின்றவா முன்னர் இந்திரியங்களை யடக்கப் பழகுதல் வேண்டும் ; அதன் பின்னர் மனத்தையும் புத்தியையும் அடக்கப் பழகுதல் வேண்டும் என்பன இங்கறிதற் பாலனவாம்.

* ஸ்தூல தேகம் இந்திரியங்களின் வயமாயும், இந்திரியங்கள் மனத்தின் வயமாயும், மனம் புத்தியின் வயமாயும், புத்தி ஆத்மாவின் வயமாயுமிருத்தலின், அவை தம்முள் வேறாய், ஒன்றற் கொன்று பரமா யிருக்கின்றன ; ஆத்மா சர்வ சாட்சியா யிருத்தலின், அதனினும் பரமாயிருப்பதொன்றில்லையா மென்பதிங் குணர்தற் பாலதாம். பரம்—மேல்.

யாய பிறப்பொழியுமாறு இந்திரியங்களையே யன்றிப் பலவகை ஆசைகளுடையதாய்க் கலங்கி யிருக்கின்ற மனத்தையும் ஆத்மா புத்தியினும் பரமா மென்னும் நிச்சய புத்தியா லடக்கி, பின்னர் அந்த மனத்தைக் கலங்கச் செய்யும் மூல காரணமான காமரூப சத்துருவை நாசஞ்செய்யக் கடவா யென்று சேலா யுலக முறு புனலோர் செலுவின் புரையே செலுத்தினோனாகிய பகவான் கூறியருளினார். (சேல்-மீன் ; புனல்-கடல்.)

இம்மூன்றாவது அத்தியாயத்தில் ஞான நிஷ்டையின் சாதன மாய நிஷ்காம கர்ம நிஷ்டை பிரதானரூப மாகவும், பலரூப ஞான நிஷ்டை கௌணரூப மாகவும் கூறியிருப்ப துய்த்துணர்தற் பால தாம்.

3—கர்மயோக வத்தியாயம் முற்றிற்று.

---

## 4—சம்பிரதாய வத்தியாயம்.

பகவான் சர்வ வேதார்த்தங்களின் சாரமாயுள்ள கர்ம யோகம்—ஞானயோக மென்னு மிரண்டனையும் விரிவாகக் கூறக் கருதி, சம்பிரதாயக் கிரமமாக அவற்றைப் புகழ்ந்து கூறல்.

குற்றமென்பது சிறிதுமில்லாத சக்கரப் படையைத் தாங்கிய திருக்கரத்தையுடைய பகவான் அருச்சுனனைக் கருணையோடு நோக்கி, பெருந்தவத்தையுடைய அருச்சுனா! பிரவிர்த்தி நிவிர்த்தி அதிகாரிகளிடத்து முறையே நடைபெற்று வருவதற்குரிய கரும யோகத்தையும், ஞானயோகத்தையும், குற்றமான தொழிய நீ யறிந் தனுஷ்டிக்குமாறு உனக்கு விளக்கமாகக் கூறினேன் ; இனி அந்த யோகங்களின் குரு சிஷ்ய பாரம்பரிய வரலாற்றினையும் கூறுகின்றேன், கேட்கக் கடவாய். யான் இவ்விரண்டு யோகங் களையும் உலக சிருஷ்டியி னாதிகாலத்தில் சூரியனுக்கு அவனது துன்பமொழியக் கூறினேன் ; அச்சூரியன் அவற்றைத் தனது புத்திரனான வைவஸ்வதமனுவென்னும் அரசனுக்கு விளக்கமாகக் கூறினான்; அம்மனுவரசன் தானறிந்த அந்த யோகங்களைத் தனது புத்திரனான இட்சுவாகு வேந்தனுக்குச் சந்தோஷத்தோடு கூறி னான். இவ்வாறு பரம்பரையாக வந்த இந்த யோகங்களைக் குரு சிஷ்ய பரம்பரையாக நிமி, ஜனகன், அஜாத சத்துரு, கைகேயன் முதலிய ராஜ ரிஷிகள் அறிந் தனுஷ்டிக்குந் தன்மைய ராயினார்.

அவை அனுஷ்டிப்பா ரில்லாமையால் நீண்ட காலமாக நஷ்ட மடைந்து விட்டன.

இவ்வளவென்று வரை யறுத்து மதித்தறிதற் கருமையாக (பொருள்களின் புடை பெயர்ச்சி யேதுவாக) நிகழ்கின்ற காலம் சென்று விட்டமையால், மக்கள் அனுஷ்டிப்பதற் கருமையாய் நஷ்டமடைந்த அந்த யோகங்கள் பிறப்பிற் கேதுவாய இருவினைகளும் கெடுதற்குக் காரணமா யிருப்பனவாம். கால விசேஷத்தால் ஒருவரும் அறிதற் கருமையாய் இரகசியமாயுள்ள அந்த உண்மையான யோகங்களை அர்ச்சுன! நீ என்னிடத்துப் பேரன்பினைச் செய்கின்ற நண்பனுயும், சர்வ காரணனுயுள்ள வென்னை யல்லாமல், பொருள் புகழ் புண்ணிய முதலிய வெல்லாவற்றையும் அறியாத பக்தனுயு மிருக்கின்ருயாதலால், உனக்குக் கூறத் தொடங்கினேன்; நீ அவற்றைக் கவனமாகக் கேட்கக் கடவா யென்றனர். †

அருச்சுனன் வினு.

பகவானே! தேவரீர் கரும யோகத்தோடு கூடிய இந்த ஞான யோகத்தை வைவஸ்வதமனு முதலிய அரசர்கள் குரு சிஷ்ய பாரம்பரியமாகக் கேட்டனுஷ்டித்து வர, சென்ற சிருஷ்டியின் ஆதி காலத்திலும் யான் சூரியனுக்குக் கூறினேனென்று கூறினீர்; அங்ஙனம் கூறியிருப்பினும், தேவரீர்க்குரிய இவ்வுடம்பு, சிருஷ்டியின் ஆதி காலத்தில் சூரியனுக்கு அதனைக் கூறிய அவ்வுடம்பன்ரும்; அதனுல், அவ்வுடம்பிலிருந்து கூறிய அவ்வுபதேசத்தைப் பயனுமாறு எம்மனோர் போன்றுள்ள நீர் நினைத்தல் கூடுமோ? அதற்குத் தேவரீர் விடை கூறல்வேண்டும்.

பகவான் தம்மை மக்களுள் ஒருவராகக் கருதி, அருச்சுனன் வினவிய வினுவிற்கு விடை கூறல்.

துளப மாலையை யணிந்த முடியினையுடைய பகவான் சுவர்க்க மத்திய பாதாளமென்னு மூன்றுலகத்திலும் தனது புகழ் நிறைந்துள்ள அருச்சுனன் இவ்வாறு வினவவே, அதற்கு விடைகூறத் தொடங்கி, அருச்சுனனைக் குறிப்பிட்டு நோக்கி, அருச்சுன! வாசு

† இங்ஙனம் பகவான் கூறியதனுல் மோட்ச சாதனமாய ஞானயோகமும், அதன் சாதனமாய கர்மயோகமும், அரசர்களிடத்துக் குருசிஷ்ய பாரம்பரியமாகத் தொன்று தொட்டு நஷ்டபெற்று வந்தன வென்பது பெறப்பட்டவாறறிக.

தேவனுன எனக்கும் அருச்சுனனுன உனக்கும், உலக சிருஷ்டி காலத்திற்கும் இக்காலத்திற்கும் மத்தியில் முறையே லீலா மாத்திரமாகவும், இருவினைகளின் வசமாகவும் வந்தொழிந்த உடம்புகள் அநேகமாயிரமாம். ஈசுரனுயுள்ள நான் அவ்வுடம்பனைத்தையு மறிந்திருக்கின்றேன்; சீவனுயுள்ள நீயோ அவ்வுடம்புகளுள் எதனையு மறியாதிருக்கின்ருய். காண்டீபமென்னும் வில் பொருந்திய தோளையுடைய அருச்சுனு! எனக்கு முனக்கு முள்ள வேறுபாடு இதுவேயாம். ‡

பகவான் தாம் அவதாரஞ் செய்வதற் கேது கூறல்.

(அருச்சுனு! நீ தேவரீர்க்கு எக்காலத்தே எப்பயனுக்கிப் பிறப்புண்டாகின்றதென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.) இறவாதும் பிறவாதும் இருத்தலால் நித்தியனுய், பிரமன் முதல் ஸ்தம்ப மீருகவுள்ள சர்வப் பிராணிகட்கும் ஈசனுயிருக்கும் நான் தருமத்திற்குக் கேடும், அதருமத்திற்கு ஆக்கமு முண்டாக, அப்போது அவற்ருல் அந்தோ சாதுக்களடைகின்ற கொடுந் துன்பங்களைத் தீர்ப்பதற்காக, உண்மையில் பிறப்படையாதிருந்தே என்னிடத்துக் கற்பிதமா யிருக்கின்ற மாயையால் தேகமுடையவன்போல ஒழிவின்றி, யுகந்தோறும் யுகந்தோறும், பல்வேறு வகையினவாய அவதாரங்களைச் செய்கின்றேன்; நான் அவதாரஞ செய்வதற்குக் காரணம் மற்ருென்றன்ரும். §

பகவான் தமது ஜன்ம கர்மங்களை யுள்ளவா றுணர்பவர்க்கு வரும் பயனைக் கூறல்.

‡ எப்போதும் உதயாத்தமன மற்றிருக்கும் சூரியனுக்கு உலக வியவகாரத்தால் உதயாத்தமனம் தோன்றுவதுபோல, எப்போதும் பிறப்பிறப்பற்றிருக்கும் பகவானுக்கும் லீலா மாத்திரத்தால் பிறப்பிறப்புத் தோன்றுகின்றதென்பதிங் குணர்தற்பாலதாம். பற்றின்றிச் செய்யும் வியவகாரம் லீலையாம்.

§ தமதுயிர் நீங்குவதா யிருப்பினும், தமக்குரிய வொழுக்கத்தி னின்றும் நீங்காதவர் சாதுக்களெனப் படுவர். எப்போது தருமத்திற்குக் கேடும், அதருமத்திற்கு ஆக்கமு முண்டாகின்றனவோ அப்போது நான் சாதுக்களை யிரட்சித்தற் பொருட்டும், அசாதுக்களைச் சிட்சித்தற் பொருட்டும், தருமத்தை நிலைபெறச் செய்தற் பொருட்டும் அவதாரஞ் செய்கின்றேனென்று பகவான் கூறினரென்பதிங் குணர்தற் பாலதாம்.

இவ்வாறு பரமேசுவரனுகிய வெனது அவதாரங்களையும் கருமங்களையும் லோகானுக்கிரகார்த்தமாமென் றுள்ளவாறுணர்ந்து, அதனால் தாம் கடைத்தேறுவதற்குக் காரணமாயுள்ள ஞானவடிவத்தவத்தினையடைந்து, அதனால் துன்பந்தரும் ஆசை,பயம்,கோபம் முதலியவற்றினின்றும் நீங்கி, மோட்சமடைந்தவரை இவ்வளவென்று குறிப்பிட்டுரைத்தல் முடியாது. (அருச்சுன! நீ தேவரீர் *ஞானவடிவத் தவமுடையவரை மோட்சமுறுமாறு செய்து, மற்றவரை அஃதுறுவாறு செய்தலால், உம்மிடத்துப் பட்சபாத முண்டென்று வினவுதல் கூடும்; அதற்குவிடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய். தாம் விரும்பிய பயன்களை விரைவாக வடைதலால்) மெய்யாய தெய்வத்தன்மை யுடையது இத்தெய்வமே யென்று கருதி இந்திரன் முதலிய தெய்வங்களுள் ஒவ்வொரு தெய்வத்தை விரும்பித் தொழுகின்றவர் விரும்பிய பயன்களை அவர்களுக்கு அவ்வத் தெய்வரூபமுமா யிருந்து, கொடுப்பவனும் நானே யாவன்; அதனால், நான் எவரிடத்தும் பட்சபாத மில்லாதவனு யிருக்கின்றேன்; அருச்சுன! நீ இதனை யறியக்கடவாயாக. †

[அருச்சுன! நீ நான்கு வருணங்களின் கர்த்தாவும், அவ்வருணங்களுக் குசிதமாய கர்மங்களை யருளிச் செய்தவரும் தேவரீரே யாகலின், உம்மிடத்துப் பட்சபாதமில்லை யென்பது எவ்வாறு பொருந்துமெனன வினவுதல்கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.]

அருச்சுன! பரமேசுவரனுன நான் சிருஷ்டியி னுதிகாலத்திலே சீவர்களது சத்துவம்-இராசதம்-தாமதமென்னும் குணங்

* ஞானவடிவத் தவம்—ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தின் தொடர்ந்த சிந்தனையாம். பகவான் இவ்வாறு கூறியதால், பகவான் நிராசையுடையவர்க்கு ஞானவாயிலாக முத்தியையும் ஆசையுடையவர்க்கு அவரவர் உபாசனை செய்த தெய்வங்களின் வடிவமாக விருந்து காணி மனை முதலியவற்றையும் தருகின்றனர்; அவர்கு எவரிடத்தும் பட்சபாதமில்லை யென்பது பெறப்பட்டவாறறிக.

† ஆர்த்தன், அர்த்தார்த்தி, ஜிஞ்ஞாசு, ஞானி யென்னும் நால்வகைப் புருஷரிடத்தும் பகவான் பட்சபாதமின்றி யிருக்கின்றனர்: அவரவர் தம் பாவனைக்கேற்ற பயன்களையே பகவான் வாயிலாக அடைகின்றன ரென்பதிங் குணர்தற் பாலதாம்.

(1) துன்ப மடைந்தவன்—ஆர்த்தன்; பொருளை விரும்பியவன்—அர்த்தார்த்தி; தன்னை யறிய விரும்புகின்றவன் ஜிஞ்ஞாசு; தன்னை (ஆத்மாவை) யறிந்தவ'ன்—ஞானி.

களின் வேற்றுமையாலும், சமை-தமை-திதிட்சை-உபரதி சிரத்தை-சமாதானமென்னும் கருமங்களின் வேற்றுமையாலும், அவர்களைப் பிராமணாதி நான்கு வருணமாயொழுக என் மாயையினால் படைத்தனன். யான் இப்போதும் இனியும் அவர்களைக் காத்தற்குரியவனா யிருக்கின்றேன், இதனால், என்னிடத்துப் பட்சபாதமில்லையென்பதறியக் கடவாய் ‡

(அருச்சுனா! நீ தேவரீர் நான்கு வருணங்களுக்கும் கர்த்தாவாயின், கரும பலத்தை யனுபவிக்கும் எம்மனோருள் ஒருவராவீர், அதனால், நீவிர் ஈசுவரனாதலெவ்வாறு மென்று வினவுதல் கூடும், அதற்கு விடைகூறுகின்றேன், கேட்கக்கடவாய்) அருச்சுனா! யான் சர்வ பதார்த்தங்களையும் இயல்பாகவே யடைந்திருக்கின்றேனாகையின், யான் விரும்புதற்குரியது ஒன்று மின்றாம், அதனால், மயக்கத்திற் கேதுவாய கருமப் பயன்களில் இச்சை வையாதிருக்கின்றேன், அக்காரணத்தால், அசிருஷ்டி முதலிய கருமங்கள் தாமரையிலையின்கண் நீர் சம்பந்தியாமைபோல என்கண் சம்பந்தியாமல், எனக் கன்னியமாகவே யிருக்கின்றன. இவ்வாறிருத்தலால், யான் அவற்றிற்குக் கர்த்தாவா யிருப்பினும், உண்மையில் அகர்த்தாவாகவே யிருக்கின்றேன் இவ்வாறிருக்கும் என்னை யறிகின்றவர், என்னைப்போல அகர்த்தாவாக விளங்கிக் கரும பந்தத்தினின்றும் நீங்குவர்.

---

‡ சத்துவ குணத்தைப் பிரதானமாக வுடையவன் பிராமணனாவன், அவனுக்குரிய கருமம் சமை-தமை முதலியனவாம், இராசத குணத்தைப் பிரதானமாகவும், சத்துவ குணத்தை யப்பிரதானமாகவு முடையவன் க்ஷத்திரியனாவன், அவனுக்குரிய கருமம் சௌரியம் தேஜஸ் முதலியனவாம், இராசத குணத்தைப் பிரதானமாகவும் தாமத குணத்தை யப்பிரதானமாகவு முடையவன் வைசியனாவன், அவனுக்குரிய கருமம் வர்த்தகம் உழவு முதலியனவாம், தாமத குணத்தைப் பிரதானமாக வுடையவன் சூத்திரனாவன், அவனுக்குரிய கருமம் சேவகம் உழவு முதலியனவாம். இந்நால்வர்க்கும் பொதுவான கருமம், தானம், ஜபம், ஈசுவர பூசை, தியான முதலியனவாம்

பிராமணாதி வருணங்கட்குக் காரணம் குணபேதமும் கருமபேதமு மன்றி வேறுபேத மில்லையாமென்றிங்குணர்தற்பாலதாம்

சத்துவ குணத்தின் வடிவம் பிரகாசமாம் இராசத குணத்தின் வடிவம் - பிரவிர்த்தியாம். தாமதகுணத்தின் வடிவம் மோகமாம் சமை - மனவடக்கம் தமை இந்திரிய வடக்கம், திதிட்சை - துக்கத்தைப் பொறுத்துக்கொள்ளல், உபரதி - கரும பலனை விரும்பாமை, சிரத்தை - சுருதி குரு வாக்கிய விசுவாசம், சமாதானம் - குருவினுபதேசத்தை மறவாது சிந்தனை செய்தல்.

யான் கருத்தாவன்று, எனக்குக் கரும பலத்தி
லிச்சையு மின்றேன்னும் ஆத்மஞான முடையவர்
கருமபந்த முடையவராகார்; பூர்வம் அநேக மகாத்துமாக்கள்
ஆத்மாவை அகர்த்தாவாகவும் அபோக்தாவாகவு முணர்ந்து
கருமத்தைச் செய்து வந்தனர். அர்ச்சுனு! நீயும் அவ்வாறே
கருமத்தைச் செய்யக் கடவாயென்று பகவான் கூறல்.

*பூர்வகாலத்தில் தாம் கடைத் தேறுதற் பொருட்டு ஆத்மாவை அகர்த்தா வென்றுணர்ந்த அதிகாரி புருஷர்களாய ஜனகன் - யயாதி - யது முதலிய அரசர்கள் அகங்கார மின்றிச் செய்யும் கருமங்கள் பந்தத்திற்குக் காரணமாகா வென்பதுணர்ந் தனுஷ்டித்த கருமங்களை அருச்சுனு! நீ அஞ்ஞானியாயின் சித்த சுத்தியின் பொருட்டும், ஞானியாயின் லோக சங்கிரகத்தின் பொருட்டும், செய்ய ஒரே கருத்துடன் முயல்வாயாக.*

*(கருமத்தை ஞானிகளோடு கூடி யறிந்தே செய்ய வேண்டுமேயன்றி, உலக வழக்கத்தைக் கொண்டு மாத்திரம் செய்தல் கூடாது; கருமமென்பது யாது? அகருமமென்பது யாது? என்பவற்றை யறிதற்கண் விவேகிகளும் மோகத்தை யடைகின்றனர்; ஆகலின்,) கருமம் அகருமம் விகருமமென்னு மிவற்றின் மெய்யான சொரூபத்தையும் பொய்யான சொரூபத்தையும் பகுத்துணர்தல் மிக வருமையானதாம்; அதிகாரி புருஷர்கள் அறியத்தக்க விஷயமும் இக்கருமங்களின் பாகுபாடேயாம்; ஆதலால், அருச்சுனு! இக்கருமங்களின் தன்மையைக் கூறுகின்றேன், நீ கேட்கக்கடவாய்.* †

பகவான் விகருமம் நிஷித்த (விலக்கிய) கருமமாகலின்
அதனை யொழித்துக் கரும அகருமங்களின்
வாஸ்தவ சொரூபத்தைத் திருஷ்டாந்தவாயிலாகக் கூறல்.

*ஓடுகின்ற நீரையுடைய நதியில் ஓடத்தின் மீதேறிச் செல்லுகின்றவன் அந் நதியினது கரையின்கணிற்கும் மரங்கள் ஓட, தானோடாமல் நிற்கின்றாற்போலத் தோன்றுதலைக் கண்டும், நீண்டு நிற்கின்ற இம்மரங்கள் ஓடாமனிற்கு மியல்புடையனவா யிருக்கின்றன; இந்நதி*

---

*† மனு முதலிய அறநூல்கள் இது செய்யத் தக்கதென்று விதித்த கருமம் கருமமாம்; விலக்கிய கருமம் விகருமமாம்; அகருமம் - எக்கருமத்தையுஞ் செய்யாமையாம்.*

யின்கண் யானே ஓடத்தோடே ஓடுகின்றேனென்பதைத் தனது பகுத்தறிவா லறிந்தாற்போல, (யானிக்கருமத்தைச் செய்கின்றேனென்று தேகாத்மப் பிராந்தியால் கற்பிக்கும் தேகேந்திரிய முதலியவற்றின் வியாபாரமாகிய) கருமங்களினிடத்து நிற்கின்ற ஆத்மாவின்கண் வாஸ்தவமாகக் கருமங்க ளில்லாமையையும், அக்கருமங்களைச் செய்யாத தன்மை யுடையனவாக மயக்க புத்தியால் தோன்றும் தேகேந்திரிய முதலியவற்றின்கண் கருமமனைத்தும் பொருந்தி யிருப்பதையும்,மயக்கமில்லா தெவன் விசாரித் தறிந்தானோ அவனே கருமம் அகரும மனைத்தையு மறிந்த புத்திமானும், சர்வ சங்க பரித்தியாகத்தி லொழுகுகின்ற யோகியும், நற்கருமமனைத்தையும் செய்தவனு மாவன். ¶

பகவான் ஆத்மாவைக் கரும சாட்சியாக வுணர்ந்திருப்பவனுக்கு வரும் பயனைக் கூறல்.

எவரது கருமமனைத்தும் இக்கருமம் எம்மால் செய்யப்படுகின்றதென்னும் அபிமானவடிவ சங்கற்பமும், இக்கருமத்தா லெமக்கு இப்பயனுண்டாகு மென்னும் ஆசையும் அற்றனவாமோ, தத்துவஞான வடிவ அக்கினியால் ஒருமிக்க வெந்தனவாமோ, அக்கருமங்களை யுடையவரே சனன மரண மில்லாதவ ராவர். ‡

¶ மரத்தினது இருப்பு ஓடத்திலும், ஓடத்தினது ஓட்டம் மரத்திலும் தோன்றுவது போல, தேகேந்திரிய முதலியவற்றின் வியாபாரங்களாகிய கருமங்கள் ஆத்மாவிலும், ஆத்மாவின் வியாபார மின்மையாகிய அகருமம் தேகேந்திரிய முதலியவற்றிலும் தோன்றுகின்றன; இவற்றை யாராய்ந்தறிந்து, தான் கரும கர்த்தாவாகாது, தேகேந்திரிய முதலியவற்றின் வியாபாரங்களாகிய கருமங்களுக்குச் சாட்சி மாத்திரமாக விளங்குகின்றவன் விவேகியும் யோகியும் கிருதகிருத்தியனு மாவனென்பதாம்.

‡ இக்கருமத்தை யான் செய்கின்றே னென்னு மபிமானமும், இக்கருமத்தா லெனக்கிப் பயனுண்டாகுமென்னு மாசையு மின்றிக் கருமத்தைச் செய்கின்றவர் கரும சாட்சியாகவன்றி வேறாக விளங்குவ தில்லையாம்; அவர் செய்யும் கருமம் லோகானுக்கிரக மாத்திரமாக விருப்பதாம். ஆத்மா கருமத்தைச் செய்வதில்லை; அதனைத் தேகேந்திரிய முதலியனவே செய்கின்றன வென்பதுணர்ந் திருப்பவர்க்குக் கருமபந்தமின்மையின், அதன் பயனாய சனன மரணமு மில்லையாமென்பன இங்குணர்தற் பாலனவாம்.

அவிவேகிகள கருதுகின்ற இகபரபோகஙகளி லிசசையும, யாணிககருமததைச் செயகின்றேனென்னு மபிமானமு மில்லாது, இவன் இநத நிததிய நைமித்திக கருமஙகளைச செய்கின்றானென்று பெரியோரால சிறபபிததுக் கூறபபடுகின்ற இததன்மையுடைய பண்டிதன தான பின்னனுபவிததறகுரிய கருமஙகள தனககுண்டென்று மறநதும அறியமாட்டான; பிராரதத கருமங காரணமாக அவன் செயகின்ற கருமஙகள அவனை வருததுவதில்லையாம. $

பகவான சாவசஙக பரித்தியாகஞ் செயதவன்
தன சரீர ஸ்திதியின் பொருட்டுச செயயுங் கருமம்
அவனுககுப பநத வேதுவாகா தெனல்.

அாசுன ! சுவாககாதி போகஙகளில ஆசையிலலாது, அடஙகுகினற இநதிரியஙகளையும ஒடுஙகுகினற மனததையுமுடைய சந்நியாசி சாவசஙக பரிததியாகஞ் செயதிருததலால, உடமபு இககாரணத்தால் நிலைபெற்றிருககின்றதெனப துணாநது தன சரீர ஸ்திதியின் பொருட்டுச செய்கினற கருமஙகளால பநதமடைவ திலலையாம. ‡

பகவான் மேறகூறிய சநநியாசியின் கரும நியமததைக் கூறல்

தனது பிரயத்தனததா லன்றிக கிடைத்த அன்ன வஸ்திர முதலிய பதார்ததஙகளை யேற்றுககொண்டு சநதோஷித்து, இலாப

$ இகபர மெனபன - இவவுலகமும சுவாகக வுலகமுமாம. கரும சாட்சியாக விளஙகும ஞானி பிராரதத கருமததிற கேறறவாறு கருமஞ் செயவதன்றித தானே ஒரு கருமததையும செயதிலலையாம, அதனால, அவனபிறாககுக கருமகாததாவைபபோலத தோனறுகினறான, அவனுககுக கரும சமபநத மிலலாமையால அவன அதனால பின வருநதுதற குரியவனாகா திருககினறா னெனபதிங குணாததற பாலதாம. இஙகுச சைதனய வடிவமாயுள்ள பிரஹ்மததை மாததிரம விஷயஞ் செயயும (அறியும) அநதககரண விருததி (புததி அஃதாவது ஞானம) பண்டாவாம, அதனை யுடையவன பணடிதனெனறு கூறபபடுகினறா னெனக.

‡ சுவாககாதி போகஙகளில ஆசையறறும, இநதிரிய நிககிரகமும மன நிககிரகமுஞ் செயதும, சாவசஙக பரிததியாகஞ் செயதுமுளள சநநியாசி யானென தென்னு மபிமான மிலலாதவனாயிருததலின, அவன தன சரீர ஸ்திதியின் பொருட்டுச செயயும் ... கருமஙகளால பநதமடை வதிலலையாமெனபதிங குணாததற பாலதாம.

கஷ்டங்கள் சம்பவித்த காலத்தில் மகிழ்ச்சி வாட்டமடையாது அவற்றின்கண் சமபுத்தி செய்து, எவ்விடத்தும் எவ்வகையாலும் மற்சரம் சிறிதுமில்லாத சந்நியாசி செய்கின்ற பிச்சை யேற்றுண்டல் முதலிய கருமங்கள் அவனுக்குக் குற்றமாவனவன்றாம். அந்தக் கருமங்களின் தன்மையைக் கூறுகின்றேன், நீ கேட்கக்கடவாய். ¶

பகவான் இல்லற ஞானிகள் செய்யும் கருமங்கள்
அவர்களுக்குப் பந்தமாவதில்லை யெனல்.

(அர்ச்சுனா! நீ யான் துறவற ஞானிகள் தாம்செய்யும் பிச்சையேற்றுண்டல் முதலிய கருமங்களால் பந்தத்தை யடையாரென்று கூறியதால், இல்லற ஞானிகள் தாம் செய்யும் யாக முதலிய கருமங்களால் பந்தத்தை யடைதல் கூடுமேயென்று வினவுதல் கூடும், அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.)

அர்ச்சுனா! கருமமனைத்தையும் யான் செய்கின்றேனென்னு மபிமானத்தைவிட்டு, கருமப் பயன்களில விருப்பம் வையாது, ஞானாத்மாவினிடத்து(அகம்பிரஹ்மாஸ்மி யென்று)பரிணமித்தெழுகின்ற சித்தவிருத்தி நிலைபெற நிற்கின்ற ஞானி புருஷன் உலகத்தாருய்தற்

¶ சந்நியாசி தன் சரீர ஸ்திதியின் பொருட்டு, தன் பிரயத்தனத்தாலன்றிக் கிடைத்த அன்ன வஸ்திர முதலியவற்றை யேற்றுக்கொள்ளுதல் அவனுக்கு நியமமாமென்ப திங்குக் குறிப்பித்தவாறுணாக. சந்நியாசி உற்பாதம, நிமித்தம், நட்சத்திர வித்தை, அங்கவித்தை, அநுசாசனம், வாதமென்பனவற்றுள் எதனாலேனும் அன்ன முதலியவற்றைப் பெறுதல் அவனுககு விலக்காம்.

(1) உற்பாதம் - பூகம்ப முதலியவற்றின் சுபாசுபத்தைக் கூறலாம்; (2)நிமித்தம்-கண் முதலியவற்றினது அசைதலின் சுபாசுபங் கூறலாம;(3) நட்சத்திரவித்தை - நட்சத்திரங்களின் சுபாசுபங் கூறலாம; (4) அங்கவித்தை - கரரேகையின் சுபாசுபங் கூறலாம்; (5) அநுசாசனம் - இந்நீதிநெறி இவ்வாறாம், இந்நீதிநெறியில் இவ்வாறு நடத்தல் வேண்டுமெனக் கூறலாம்; (6) வாதம் - சாஸ்திரார்த்தங் கூறலாம்.

• சந்நியாசி வஸ்திரம், கௌபீனம், கம்பளி முதலிய சில கந்தைகள், பாதுகை என்பனவன்றி மற்ற பெற்பட்டவற்றை முந்நியமாக்கிக் கொள்ளல் கூடாதென்பது சாஸ்திர நியமமாம்.

பொருட்டுச் செய்யும் வேள்வி முதலிய கருமங்கள் தமது பயனோடு நாசத்தை யடைவனவாம். †

### பகவான்.ஞானியின் கருமங்கள் தம் பயனோடு நாசமடைகின்றன வென்பதற் கேது கூறல்.

(அர்ச்சுனா! நீ சுபாசுப கருமங்கள் தம் பயனை யநுபவியாத விடத்து நூறு கோடி கற்பகாலமாயினும் நாசமடைவ தில்லையென்று அறநூல் கூறுதலின், ஞானி செய்யும் கருமங்கள் தம் பயனைத் தாரா மலே நாசமடைவனவாமென்ப தெவ்வாறுமென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், நீ கேட்கக் கடவாய்.)

அருச்சுனா! பிரஹ்மமாகவே விளங்குகின்ற ஞானிகள் பிரஹ்ம ரூபமாகிய நெருப்பினிடத்துப் பிரஹ்ம ரூபமாகிய மந்திரத்தால் பிரஹ்மரூபமாகிய அன்னம் நெய்முதலிய அவிசைப் பிரஹ்மரூபமாகிய கர்த்தாவினால் ஆகுதி செய்தபின் (கடமுடைந்த பின் கடாகாசம் மகாகாசத்தை யடைவது போலப்)பிரஹ்ம கர்ம சமாதியால் பரமாநந்த வடிவப் பிரஹ்மத்தையே யடைவர்; பிறிதொன்றனையு மடையார். இவ்வாறன்றி *வேறு வகையாகவும் யாகஞ் செய்பவ ரிருக்கின்றனர்; அவர்களின் தன்மையையுங் கூறுகின்றேன், நீ கேட்கக்கடவாய். ¶

† சுவர்க்காதி போகங்களில் இச்சையும், யான் கருத்தா போக்தா வென்னு மபிமானமு மின்றிச் சீவப் பிரஹ்ம ஐக்கிய ஞான முடையவன் லோகோபகாரமா கச் செய்யும் வேள்வி முதலிய கருமங்கள் கரும சாட்சியாக விளங்கும் அவனுக் குப் பலன் தருவதாகாது நாசமடைகின்றன வென்ப திங் குணர்தற் பாலதாம்.

¶ பிரஹ்ம கர்ம சமாதியாவது பிரஹ்ம ரூபமான கருமத்தில் சித்தம் ஒரு முகப்பட்டிருத்தலாம். நெருப்பு, மந்திரம், அவிசு முதலியவற்றைப் பிரஹ்மரூப மாகக் கூறியதன் காரணம், கயிற்றின்கண் கற்பிதமாயுள்ள பாம்பு கயிற்றைத் தவிர இல்லாமைபோல, பிரஹ்மத்தின்கண் கற்பிதமாயுள்ள அவை பிரஹ்மத் தைத் தவிர வில்லாமை பற்றியாம். யாகாதி கிரியைகள் கர்த்தா, கருமம், கர ணம், சம்பிரதானம், அதிகரண மென்னு மிவ்வைவகையாய காரணங்களால் பெறப்படுவனவாம். அவற்றைப் பிரஹ்மஞானி கற்பிதமாக வறிந்திருத்தலின், அவை அவனுக்குப் பயனைத் தாராமலே நாசமடைகின்றன வென்பதிங் குணர் தற் பாலதாம்.

(1) யாகத்தைச் செய்பவன் கர்த்தாவாம்; (2) அக்கினியில் ஆகுதி செய்தற் குரிய நெய் முதலியவற்றை விடுதல் கருமமாம்; (3) மந்திர முதலியன கரண மாம்; (4) இந்திராதி தேவதைகள் சம்பிரதானமாம்; (5) ஆகவநீயாதி அக்கினி (அவிசினை ஆகுதி செய்தற்கு) அதிகரணமாம்

### பகவான் மேற்கூறிய ஞானயாகத்தைத் துதித்தற் பொருட்டு, அதற்குச் சாதனங்களாயுள்ள யாகங்களைக் கூறல்.

அருச்சுனா! தத்துவத்தை யறிந்த சிலர் தத்துவமசி மகாவாக்கியத்தின்கண்ணுள்ள (i) தத்பதார்த்தமாய பிரஹ்ம ரூப அக்கினியினிடத்து அபேதமாகத் த்வம்பதார்த்த ரூப ஆத்மாவையே ஓமஞ் செய்வர், (ii) யோகத்தை யறிந்த சிலர் தமது முயற்சியாற் பொருந்துவதாய சமரூபமாய அக்கினியினிடத்து அடக்கத் தக்கனவாய சுரோத்திராதி யிந்திரியங்களை ஓமஞ் செய்வர், ‡

சமாதியப்பியாசஞ் செய்யும் சிலர் தாம் செய்யுஞ் சமாதியினின்றும் விழித்த காலத்தில் சாஸ்திர விரோத மில்லாது கவர்தற்குரியனவாய (iii) சப்தாதி விஷய மைந்தனையும் இராகத்துவேஷ மில்லாமலே சுரோத்திராதி இந்திரிய ரூப அக்கினியினிடத்து ஓமஞ் செய்வர், ஆத்மானாத்ம விவேகமுடைய சிலர் (iv) சுரோத்திராதி ஞானேந்திரியங்களின் வியாபாரம், வாக்காதி கருமேந்திரியங்களின் வியாபாரம், பிராணாதி வாயுக்களின் வியாபார மனைத்தையும் சீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானமாகிய நெய்யைச் சொரிந்து, அதனால் விளங்குகின்ற ஆத்ம சம்யம ரூப அக்கினியினிடத்து ஓமஞ் செய்வர். ¶

‡ (i) தத்பதார்த்தப் பிரஹ்மத்தினிடத்துத் த்வம்பதார்த்த ஆத்மாவை ஓமஞ் செய்தலாவது சரீரத்திரய விலட்சணமாய் அவஸ்தாத்திரய சாட்சியாயுள்ள சச்சிதானந்த வடிவ ஆத்மாவைச் சத்திய ஞான அநந்த ஆநந்த வடிவமாய யாதொரு விசேஷணமு மில்லாதுள்ள பிரஹ்ம ரூபமாகக் காண்டலாம். (ii) சமரூப அக்கினியினிடத்துச் சுரோத்திராதி யிந்திரியங்களை ஓமஞ் செய்தலாவது சப்தாதி விஷயங்களிற் சஞ்சரிக்கும் சுரோத்திராதி யிந்திரியங்களைக் கிரமமாகத் திருப்புதலாம். இங்ஙனஞ் செய்வது பிரத்தியாகார மெனப்படும். இங்குச் சமமென்பது பிரத்தியாகாரமாம். இஃது இயமம் நியம முதலிய யோகாங்க மெட்டனுள் ஐந்தாவதாம்.

¶ யோகாங்கங்களுள் 6-7 8-வதுமாய தாரணை, தியானம், சமாதி யென்னும் மூன்றும் சம்யமமாம். (1) ஆத்மாவின்கண் இந்திரியங்களோடு மனத்தைச் சேர்த்தல் தாரணையாம், (2) நானே பிரஹ்மமென இடைவிடாது பாவனை செய்தல் தியானமாம், (3) தியானஞ் செய்த வஸ்துமாத்திரமாக விளங்குதல் சமாதியாம். (iii) சப்தாதி விஷய மைந்தனையும் சுரோத்திராதி இந்திரிய ரூப அக்கினியினிடத்து ஓமஞ் செய்தலாவது இராகத் துவேஷமில்லாது சுரோத்திராதி முதலிய இந்திரியங்களால் சாஸ்திர விரோதமில்லாத சப்தாதி விஷயங்களை கிரகித்தலாம். (iv) சுரோத்திர முதலியவற்றின் வியாபார மனைத்தையும் ஞான நெய்யைச் சொரிந்து,

ஞானயாகத்திற்குச் சாதனமாயுள்ள நானகு யாகங்களைத்
திருவாய் மலர்ந்தருளிய பகவான் வேறு சில யாகங்களைக் கூறல்

அருச்சுனு! யாம் மோட்சமடைய வேண்டுமென்னும் கருத்துடைய பலருள் சிலர் தாம் சம்பாதித்த பொருள்களாலும், சிலர் தாஞ் செய்யா நிற்கும் தவங்களாலும், சிலர் தாம் விரும்பிய யோகங்களாலும், சிலர் வேதாப்பியாசங்களாலும், சிலர் அவ்வேதத்தின் ஆர்த்த ஞானங்களாலும் தமதறிவாற்றலுக்குத் தக்கவாறாக யாகஞ்செய்பவர், அருச்சுனு! இங்கு யாம் கூறிய இவ்வைவரன்றி இவர்போல வேறு சிலர் செய்யும் யாகத்தையுங் கூறுகின்றேன், நீ கேட்கக் கடவாய் †

ஆத்ம சம்யம ரூப அக்கினியினிடத்து ஓமஞ்செய்தலாவது சுரோத்திராதி இந்திரியங்களின் வியாபாரங்களையும் பிராணாதி வாயுக்களின் வியாபாரங்களையும் சற்குரு கூறியவாறு தடுத்து, சீவ பிரஹ்ம ஐக்கிய ஞானத்தோடு சம்யமமெனனும் தாரணை, தியானம், சமாதி யென்பனவற்றைச் செய்தலாம்

† (1) பொருள்களால் யாகஞ் செய்தலாவது சாஸ்திர விதியாகப் பூர்த்தம் தத்தம் எனனுங் கருமங்களைச் செய்தலாம் வாவி கூடம் தடாக முதலியவற்றை யுண்டாக்குதல், தேவாலயங்களைக் கட்டுதல், பசித்தார்க்குணவீதல், பிரயாணிகள் வசிக்கச் சத்திரங்கட்டல் என்ற தொடக்கத்துக் கருமங்கள் பூர்த்தமாம், அடைக்கலமடைந்தவரைப் பாதுகாத்தல் எந்தப் பிராணிக்கும் இம்சை செய்யாமை என்ற தொடக்கத்துக் கருமங்கள் தத்தமாம்

(2) தவங்களால் யாகஞ் செய்தலாவது கிருச்சிரம், சாந்திராயணம் முதலிய விரதானுஷ்டானமாம்

(3) யோகங்களால் யாகஞ் செய்தலாவது இயம நியம ஆசன அப்பியாசங்களைச் செய்தலாம் இயமமாவது கொல்லாமை, பொய்யாமை, திருடாமை முதலியனவாம் நியமமாவது புலனடக்கம் பெற்றதுகொண்டு வைத்தல் ஈசுவர விசுவாச முதலியனவாம், ஆசனமாவது பத்மம் சுவஸ்திக முதலியனவாம்

(4) வேதாப்பியாசத்தால் யாகஞ் செய்தலாவது இருக்கு முதலிய வேதங்களைப் பக்தி சிரத்தையோடு அத்தியயனஞ் செய்தலாம்

(5) வேதத்தினார்த்த ஞானங்களால் யாகஞ் செய்தலாவது புருஷார்த்தத்தை யடைதற் பொருட்டு இருக்கு முதலிய வேதங்களினார்த்தங்களை யாராய்தலாம்

இயமம், நியமம், ஆசனம், பிராணுயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி யென்னும் யோகாங்க மெட்டனுள், பிராணுயாம மொழிந்த மற்றயவற்றைக் கூறிய பகவான் பிராணுயாம யாகத்தைக் கூறல்.

அருச்சுனு! சிலர் இவ்வுலகத்தில் மிகவும் ஊர்த்துவ விருத்தியாக வோடிக்கொண்டிருக்கின்ற பிராணவாயுவை அதோ விருத்தியாக ஓடிக் கொண்டிருக்கின்ற அபான வாயுவினிடத்துப் பூரகப் பிராணுயாம வாயிலாக இழுத்து ஓமஞ்செய்து, அதோ விருத்தியாக ஓடிக் கொண்டிருக்கின்ற அபான வாயுவை ஊர்த்துவ விருத்தியாக ஓடிக் கொண்டிருக்கின்ற அந்தப் பிராண வாயுவினிடத்து ஓமஞ்செய்து, பிராணன் அபானனிரண்டும் முறையே மேல்நோக்கி யோடல் கீழ் நோக்கி யோடலென்னும் வியாபாரங்க ளின்றி யொடுங்கும்படி யிருப்பர். இவ்வாறு பிராண அபான வாயுக்களின் சலனத்தைத் தடுத்திருக்கு மிவர்தாம் பிராணுயாமஞ் செய்வதன் எல்லையைக் கண்டவராவர். ‡

பகவான் மேற்கூறிய யாகங்களை யறிந் தனுஷ்டிப்பவர்க்கு வரும் நன்மையையும், அறிந் தனுஷ்டியாதவர்க்கு வரும் தீமையையும் கூறல்.

அர்ச்சுனு! இங்கு யான் கூறிவந்த இவர் யாவரும் யாகத்தின் தன்மையை யறிந்தவரே யாவர்; அவர்களே புண்ணிய முண்டாவதற் கேதுவாய யாகங்களைச் செய்வதால் பாவங்களினின்றும் நீங்கியவராவர். இவர்கள் முடிவில் நித்யப் பிரஹ்மத்தை நிச்சயமாக வடைவர். யான் இங்குக் கூறியவிதமாக இந்த யாகங்களைச் செய்ய முடியாதவர்க்கு எந்த வகையாலும் இவ்வுலக சுகபோகமு முண்டாவ தில்லையாம்; ஆகவே, பெரும் புண்யசாலிக ளடைதற்குரிய சுவர்க்காதி லோகபோக மெவ்வா றுண்டாம்? உண்டாவதே யில்லையாம். அதனுல், யான் கூறிய யாகங்கள் எப்போதும் யாவரும் செய்தற்குரியனவாம். இவற்றை அருச்சுனு நீ ஆராய்ந் தறியக்கடவாய்.

‡ பிராண வாயுவை அபான வாயுவில் புகவிடுதல் பூரகப் பிராணுயாமமாம்; அபானவாயுவைப் பிராணவாயுவில் புகவிடுதல் ரேசகப் பிராணுயாமமாம்; இவ்விரண்டு வாயுக்களையும் சலனமில்லாவாறு செய்தல் கும்பகப்பிராணுயாமமாம். பிராணுயாமம் - பிராண வாயுவைத் தடுத்தல்.

## பகவான் தாமருளிச்செய்த யாகங்களுக்குப் பிரமாணம் வேதமாமெனல்.

(அருச்சுனா ! நீ தேவரீரருளிச் செய்த யாகங்கள் உமது கற்பனையேயாகும்; அவற்றிற்குப் பிரமாணமில்லையென்று சங்கித்தல்கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.) அருச்சுனா ! யானிவ்வாறு கூறிய இந்த யாக மனைத்தும் அநாதியாகவே வேதத்தின்கண் விரிவாகக் கூறப்பட்டிருப்பனவாம்; (ஆதலால், அவை என்னாற் கற்பித்துச் சொல்லப்பட்டனவன்றாம்; அங்ஙனமாயினும்) அந்த யாகங்கள் செய்யும்போது காயிக, வாசிக, மானச கர்மங்களால் உண்டாவனவாம்; (ஆத்மாவால் உண்டாவன வன்றாம். ஆத்மா கரும சாட்சியாக விருத்தலின், அவ்வாத்ம விஷயமாய) இணையற்ற ஞானம் விசாரணையா லல்லாமல் கருமங்களால் உண்டாவ தில்லையாம்; ஆதலால், இதனை யுன துள்ளத்தின்கண் யான் கூறிய அவ்வாறே யறிந்து அதிகாரி புருஷரைப்போல நீயும் ஞான நிஷ்டை யுடையவனாகி, பாவ வடிவமாய இச்சம்சாரத்தினின்றும் நீங்கக் கடவாய். †

(அருச்சுனா! நீ தேவரீர் யாக மனைத்தையும் தம்முள் சமமாகத் திருவாய் மலர்ந்திராகலின், கரும யாகமும் ஞானயாகமும் தம்முள் சமானமேயாமென்று சங்கித்தல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.) அருச்சுனா! அநாதியாகவே வேதப் பிரதிபாத்தியமா யுள்ளனவாக யான் முன்னே கூறிய திரவிய வடிவ யாக முதலிய யாக மனைத்திற்கும் மிக மேன்மையுடையதாக விருப்பது ஞானயாகமே யாம்; (அது பிறவியைத் தருவ தன்றாம்; திரவிய வடிவ யாக முதலியனவோ அதனைத் தருவதாம். நீ திரவிய வடிவ யாக முதலிய யாகங்களி லுண்டாகும்) இச்சையை யொழித்து, அந்த ஞான யாகத்தை அஃதாவது அந்த ஆத்ம ஞானத்தை யடையும் சாதனம்

† யான் கூறிய யாக ரூப கருமங்களோ வேதப்பிரதிபாத்தியமாம்; யான் புதுவதாக வொன்றும் கூறவில்லை. அவ் யாகங்கள் காயிக, வாசிக, மானச கருமங்களால் செய்யப்படுவனவாம்; ஆத்மா சர்வ வியாபாரமு மற்ற அசங்க உதாசீனமாக இருத்தலின், அதனிடத்துக் கருமமொன்று மில்லையாம். அதனை யவ்வாறறிந்தால் அருச்சுனா ! நீயும் இச்சம்சார பந்தத்தினின்றும் நீங்குவாயென்று பகவான் அருச்சுனனுக் குபதேசஞ் செய்தனரென்க.

யாதென்று வினவுவாயாயின், அச்சாதனத்தையுங் கூறுகின்றேன், கேட்கக்கடவாய். ¶

பகவான் ஆத்ம ஞானத்தை யடையுஞ் சாதனத்தைக் கூறல்.

அருச்சுனா! நீ சாஸ்திர ஞானத்தோடு பிரஹ்மத்தை யறிந்திருப்பவரான ஆசிரியரது கருத்தின் வண்ணம் அவர் இவனென் கண்மணி போன்றவனென்று கருதுமாறொழுகி, (அவர் பிரசன்னரா யிருக்கும்போது பகவானே! யான் யார்? எதனாற் கட்டுப்பட்டிருக்கின்றேன்? எதனால் இக்கட்டினின்றும் விடுதலை யடைதல்கூடும்? என்று வினவி,) அவரது தாமரை மலரையொத்த திருவடிகளை உன் முடியின்மீது தரிப்பாயாயின், பிரத்தியகாத்மாவாய்த் துவம்பதத்தி னிலக்கியப் பொருளாயுள்ள நீ சராசரப் பிரபஞ்ச மனைத்தும் வாசுதேவனுய வென்னிடத்து அபேதமாக விருக்கின்றன வென்றறிந்து,(பின் வாசுதேவனுய்த் தற்பதத்தி னிலக்கியப் பொருளாயுள்ள என்னிடத்து உன்னை யபேதமாக வறிவாயோ,)பந்துமித்திரர் வதத்தால் ஒரு காலத்தும் சோகமடையாதிருக்குந் தன்மையான துளதாதற்குக் காரணமாய அவ்வொப்பற்ற ஞானத்தை அவர் உனக்கு எஞ்சுதலில்லாது உபதேசிப்பர். ‡

பகவான் ஆத்மஞானத்தின் மகாத்மியங் கூறல்.

(அருச்சுனா! நீ யான் பிரஹ்ம வடிவமாய என்னிடத்துச் சராசரப் பிரபஞ்சமனைத்தையும் அபேதமாகக் காண்டலாகிய ஆத்ம ஞானத்தை யடைந்தாலும், பீஷ்மர் துரோணர் முதலிய ஆசிரியரை

¶ அக்கினி ஹோத்திரம், ஜ்யோதிஷ்டோமம், சோமயாகம், சயனயாக முதலிய சிரௌத கருமங்களும், உபாசனை முதலிய ஸ்மார்த்த கருமங்களும் ஞான சூனிய யாகங்களாம்; அவை நேரே மோட்ச வடிவப் பயனை யளிப்பனவன்றாம்; ஆனால், சித்த சுத்தி வாயிலாக அப்பயனை யடைவதற்குக் காரணமா யிருப்பனவாம்; ஞானயாகமோ நேரே மோட்ச வடிவப் பயனை யளிப்பதாம்; அதனால், ஞானயாகம் கரும யாகமனைத்திற்கும் அத்தியந்தம் சிரேஷ்டமாமென்று பகவான் திருவாய் மலர்ந்தருளினாரென்க.

‡ ஆன்ம ஞானம் சற்குருவி னனுக்கிரகத்தா லன்றி வேறெதனாலு முண்டாகாதீ; அந்த ஞானம் சராசரப் பிரபஞ்ச மனைத்தும் ஆத்மவடிவப் பிரஹ்மத்தின் கண் அபேதமாக விருக்கின்றனவென் றறிதலா மென்று பகவான் கூறினாரென்க.

யும், துரியோதனன் முதலிய உறவினரையும் கொல்வதாலுண்டாகும் பாவத்தினின்றும் விடுதலை யடையமாட்டேனென்று சங்கித்து,) அந்த அபேத ஞானத்தாலுண்டாகும் பயன் யாதென்று வினவுவாயாயின், (அதற்கு விடைகூறுகின்றேன், கேட்கக் கடவாய்) பிராணிகளை வதைத்தல் முதலிய அநந்தியந்தம் பாதக வடிவினராய ஆராயந்தறிதற் கரிய அநேக பேதமாயுள்ள பிறப்பிறக்கேதுவாகிய இருவினைக் கடலி னிடத்து வீழ்ந்து கிடப்பவரும் திடஞானமெனனும் அழியாத மிதவையினால், தமக்கினபமுண்டாமாறு அவ்வினைக் கடலினின்றும் மோட்சமென்னுங் கரையின் மீதேறுவார் நீ அஃதெங்ஙனமா மென்று வினவுவாயாயின், அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய் ¶

அதிகாரி புருஷன் ஆத்ம ஞான வடிவ ஓடத்தால் இருவினைவடிவக் கடலைக் கடந்தாலும், ஓடத்தால் கடலைக் கடந்தாலும் அக்கடலழியாமை போல, அவ்வினை வடிவக் கடலழியாதென்னும் ஆட்சேபத்தை நிவிர்த்தி செய்தற்பொருட்டு, ஆத்ம ஞானத்தால் வினையனைத்தும் நாசமாமென்பதற்கு மற்றொருதிருஷ்டாந்தங் கூறல்

அருச்சுனா! அக்கினி சுவாலித்தெரிந்துகொண்டு வருங் காட்டினிடத்து எரிந்து நீறாக விருட்சங்களைவையாம்? விவேக மில்லாதவரும் அதனை யறிந்திருக்கின்றனா, இதுபோல, (யான் யார்? எதனால் கட்டுப்பட்டிருக்கின்றேன்? அஃதெதனால் நிவிர்த்தி யாமென்றற் றொடக்கத்து) விசாரணையா லுண்டாகின்ற குணவடிவ மாயுள்ள தத்துவஞான மென்னு மக்கினி பிரதிபந்தமில்லா தோங்கி வளருமாயின், (யான் கர்த்தாவென்னும்) பிராந்தியாலுண்டாகு மிரு வினை வடிவ விருட்சமனைத்தும் எரிந்து நீராய் விடுவனவாம். ஞான வடிவ அக்கினிக்கு வினை வடிவ விருட்சங்களை யெரிப்பது மிகு எளிதாம் †

---

¶ இதனால் பகவான் அருச்சுனனை நோக்கி அருச்சுனா! நீ பாவிகளுள் பெரும் பாவியாயிருந்தாலும், அந்தப் பாவரூபக்கடலை ஆத்மஞான மிதவையாலன்றி வேறெதனாலுங் கடத்தல் முடியாதென்று கூறினாரென்பது பெறப்பட்டதெனக. இருவினை - நலவினை, தீவினை, மிதவை - தோணி அல்லது ஓடம்

† சரீர வடிவக் காட்டிலுள்ள இருவினை வடிவ விருட்சங்கள் அக்காட்டில் ஞான வடிவ அக்கினி பற்றிப் பரவும்போது எரிந்து நீறாகிருப்பதில்லையென்பதிங் குணாத்திய வாறும யான் பிரஹமமென்னுந் தத்துவ ஞான

## ஆத்மஞான மடைதற்குரியா ரிவரெனல்.

அருச்சுனா! புண்ணிய கருமங்களைப் பயனோக்காது செய்பவருள்ளும் சில காலத்திலே தமது நிஜசொரூபமாயுள்ள பிரஹ்மத்தை யறிதற்குரிய அதிகாரி புருஷர் யாரென்று வினவுவாயாயின், (அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.) அவர், சாஸ்திரார்த்தங்களை யுபதேசிக்கும் குருவினிடத்தும் அவருபதேசிக்கும் சாஸ்திரார்த்தங்களிடத்தும் விசுவாசமுடையவரும், மெய்-வாய்-கண்-மூக்கு-செவி யென்னு மிந்திரியங்களை நிக்கிரகஞ் செய்தவருமாவர். ¶

## தத்துவஞானம்: அஞ்ஞானம், சந்தேகம், அசிரத்தை யென்பவற்றுள் எதனையாவதுடையவர்க்குச் சித்தியாதெனல்.

(சாஸ்திர ஞானமும் ஆத்மாநுபவமுமுடைய சற்குருவன்றி மற்றவர்) உபதேசித்தற்கரிய ஞானார்த்தங்களை யறியாதவராகிய அஞ்ஞானிகளும், இலௌகிக வைதிக விஷயங்களுள் பெரியார் யாது கூறினும், அதனிடத்து இது கொள்ளத்தக்கதோ, கொள்ளத்தக்கதன்றோ வென் றையமுறுகின்றவரும், (பெரியார் கூறும் சாஸ்திரார்த்தத்துள் விபரீத புத்தி செய்து,) அதனிடத்து விசுவாசமில்லாதிருப்பவருமாகிய இம் மூவரும் (அறம் பொருள் இன்பம் வீடென்னும் புருஷார்த்தங்களுள் யாதும்) இல்லாதவராவர்; இவர்களுள், ஐயமுடையவர் (இகலோக பரலோக போகங்களுக்குரிய சாதனங்களுள் எதனையுந் துணிந்து செய்யாமையால்,) இகலோக போகமும் பரலோக போகமும் நிச்சயமாக வில்லாதவராவர். (சமத்துவ புத்தி வடிவ

---

பிராரப்த கருமத்தினும் வேறாகிய கருமபாவனத்தையும் கெடுத்து விடுகின்றது; பிராரப்த கருமம் போகத்தாலன்றிப் பிறிதொன்றால் கெடுவதில்லையா மென்பதிங் குணர்தற்பாலதாம். தத்துவ ஞானத்தால் தன்னை மறைத்த பந்தமாகிய சொரூபாவரண மென்னும் அஞ்ஞானம் கெடுகின்றபோது, அதனை யாசிரயித்திருந்த சஞ்சித கருமமும் கெட்டொழிகின்றது; தத்துவ ஞானிக்கு ஆத்மாவின்கண் யான் கர்த்தா போக்தாவென்னும் பிராந்தியின்மையின், அவனிடத்து ஆகாமிய கருமம் சம்பவிப்பதே யில்லையாமென்பது மிங்குணர்தற் பாலதாம். இதனால், சம்சார காலத்தில் தவம், தானம், விரத முதலியவற்றுள், தத்துவ ஞானத்திற் கொப்பாயது யாது மில்லையாமென்பது பெறப்பட்டவா றறிக.

¶ இந்திரிய நிக்கிரகஞ் செய்து, குருவினிடத்தும், அவர் கூறும் சாஸ்திரார்த்தங்களிடத்தும் விசுவாசமுடையவரே ஆத்மஞானத்தை யடைதற்குரிய அதிகாரி புருஷராவரென்பதிங் குணர்த்திய வாறும்.

யோகத்தாற் பகவானிடத்துத் தாம செய்யும காமஙகளை யர்ப்பணஞ செய்பவரும) ஆத்ம ஞானததாற் சநதேகத்தை நீககியுள்ளவருமா யிருபபவர் தமமிடததுப பிரமாத மின்றியவரா யிருத்தலின், கர்ம மனைத்தையும் விட்டவராவர். †

'உறியார் வெண்ணெய் தோட்டுண்டிவ் வுலகமுண்ட திருவாயான்'
ஆத்ம ஞானததால் ஐயத்தை யொழித்துள்ள வித்வானைக
கருமங்கள பநததததிறகு உள்ளாக்குவ திலலையாம்,
அதனால், அருச்சுனா! நீயும் ஆதம ஞானத்தா
லையத்தை யொழித்து உனது சுதாமத்தின்கண்ணே
கருத்துள்ளவ னுவாயென்று கூறல்.

அருசசுனா! நீ அவிவேக வடிவ அஞஞானததினின்றுந தோனறி, உனது புததிவடிவ இருதயத்திலே வளாநது துககமனைத் திற்குங காரணமாயுள்ள சநதேகமெனனும விருட்சததை யானுப தேசித்த கிரமபபடி உனது ஆதம ஞான வடிவ வாளாயுதத்தால் வெட்டி ததளளிச சிறிதுமிலலா தொழிதது, (இப்போர் செய்வது எனககுச சுதாமமாமென்னுங) கருததோடு உனது யுதத ரூபமான கருமயோகததைப பயனை விருமபாது செயயக கடவாய். ‡

4—சமபிரதாய அததியாயம முறறிறறு.

† அஞஞானியும சிரததையிலலாதவனும பரலோக போகததை யடையா விடினும, இகலோக போகததை யொருவாறடைதற குரியவராவா, சநதேக முடையவனோ எதனையும துணிநது செயயாமையால எபபோகததையு மடைதற் குரியவனாகாதிருககினறான, அதனால, ஐயம பெருநதுனபததிற கேதுவாயிருக கின்ற தெனபதும, நிஷகாம கருமஞ செயது, அதனால சிததசுததி யடைந்து அதனால ஆதமாவை யறிநது, சநதேகமறறுளளவன் கரும சாடசியாக விளஙகு தலின, அவனைக கருமம பநததததிறகு உளளாககுவ திலலையா மென்பதும இங குணாததபாலனவாம

‡ அருசசுனா! நீ இபபோா முயறசி நிஷபலமாமெனறு கருததாக, இது சிததசுததி வாயிலாக ஆதம ஞான முணடாதற கேதுவாம, அதனால், இப் போரை விரைநது செயயககடவா யெனறு பகவானருசசுனனுக குபதேசித்த ரென்க. இநநானகாவ தததியாயததில பகவான அருசசுனனுககு, தாம் பிரஹ் சொரூபமென்பதை விளககி, அவனுககுத தமமிடததுப பகதி சிரத்தையுண் டாககச செயது, கருமயோகம ஆதம ஞானத்திறகுக காரணமாயிருததலின் அதனை நீ யவசியம செயதல வேணடுமெனறு திருவாய் மலாந்தருளினா ரெ பதாம்.

# 5— ஞானகரும அத்தியாயம்.

"பூத்தருளி யொருமலரா றபுவனமவை யீரேழுங், காத்தருளி விளையாடிக் கடைசாரங் கண்வளருந், தீர்த்த"னாகிய பகவான் ஆத்ம ஞானமடைதற் பொருட்டுக் கருமத்தையும் அதன் தியாகத்தையும் மறை முறையாகத் திருவாய்மலர்ந்தருளியதன் தாற்பரியத்தை அருச்சுன னறியாது, (பகவானை நோக்கிப் பகவானே! ஆத்மஞான மடைதற்குரிய சாதனங்களாகத் தாங்கள் திருவாய்மலர்ந்தருளிய கருமம் அதன் தியாகமெனனுமிரண்டும் இருளொளிபோலத் தம்முள்விரோதமுடையனவாக விருத்தலின், அவற்றை பதிகாரி புருஷன் ஒரே காலத்தில் மேற்கொண்டொழுகுவதெவ்வாறும்? அதனால், யான் கருமஞ் செய்வதா? அதன் தியாகஞ் செய்வதா? எனக்கதனைத் திருவாய்மலர்ந்தருளல் வேண்டுமென்று வினவத் தொடங்கி,) அஞ்ஞான முதலிய மலமியல்பாகவே யில்லாதுள்ள பகவானே! தேவரீர் அடியேனுக்கு ஆத்ம ஞான மடைதற்குக் கருமானுஷ்டானம் நோ காரணமா யிருக்கின்றதென் றுபதேசிக்கின்றீர்; அதனோடு நில்லாது கரும சந்நியாசத்தையும் பெறுதற்கரிய அமிர்தம் போன்ற சாதனமென்று முபதேசிக்கின்றீர். (தாங்களிவ்வாறுபதேசஞ் செய்வதால்,) யான் அவ்விரண்டனுள் (இது கொள்ளத் தக்கது, இது தள்ளத்தக்கதெனபதறியாது சந்தேக முறுதற்குரியவனாகின்றேன், கருமானுஷ்டானம் அதன் தியாகமென்னு மிவ்விரண்டனுள், மிக்க சிரேஷ்டமான தென்று நிச்சயித்திருக்கும்) ஒன்றனை யெனது சம்சார துக்கம் நீங்குமா றுபதேசித்தருள்வீராக என்றனன்.

(அருச்சுனன் தன் சந்தேகம் நீங்காது வினவியதனைத் திருச்செவி சாற்றியருளிய பகவான் அவனுக்குக் கருமானுஷ்டான மித்தன்மையது, கரும சந்நியாச மித்தன்மையதென் றவற்றைக் கூறத்தொடங்கி, அருச்சுனா! நீ வினவியதற்கு யான் கூறும் விடையைக் கவனிக்கக் கடவாயென்று கூறுவாரானார்.)

ஆத்மஞான மடைதற்குச் சாஸ்திர விதி பூர்வகமாகச் செய்யும் சர்வகருமங்களின் தியாக பூர்வகமான சந்நியாசமும் சிரேஷ்டமானதேயாம்; தீவினையைக் கெடுக்கின்ற கரும யோகமும் சிரேஷ்டமானதே

யாம். கருமானுஷ்டானம், கரும சந்நியாச மென்பவற்றை யாராய்ந்து நோக்கினால், அந்தக்கரண சுத்தியில்லாதவர் செய்யும் கரும சந்நியாசத்தைப் பார்க்கிலும், அவர்க்குக் கருமானுஷ்டான வடிவக் கரும யோகமே மிகச் சிரேஷ்டமானதாம். ஒன்றைப் பெறுவதன்கண் விருப்பும் பிறிதொன்றை யிழப்பதன்கண் வெறுப்புமடையாத நிஷ்காம கருமயோகிகள் பெரும்பான்மையும் கரும சந்நியாசத்தின்கணிற்பவராவர். கரும சந்நியாசஞ் செய்தும் சுக துக்கங்களிலும் அவற்றிற்குக் காரணமாயிருப்பனவற்றிலும் முறையே விருப்பு வெறுப்புடையவர் துன்பந்தரும் பந்தத்தில் நிற்குந் தொழி லுடையவரே யாவர்.¶

பகவான் கருமயோகம் கரும சந்நியாச மென்பன ஒருகாலத்தி லடைதற்குரியன வன்றாம்; ஆனால், காலபேதத்தால் அடைதற்குரியனவாம்; அதனால், அவற்றுள் யாது சிரேஷ்டமா மென்னுஞ் சங்கை அவிவேகிக் குண்டாகுமே யன்றி விவேகிக் குண்டாகாதெனல்.

அருச்சுனா! வைராக்கிய முடையவர் கொள்ளுதற்குரியது கரும சந்நியாசமாம்; அஃதில்லாதவர் கொள்ளுதற்குரியது கரும யோகமாம்; இவ்விரண்டனுள், ஒன்றனைத் தமததிகாரத்தை யனுசரித்துச் சாஸ்திர விதி பூர்வகமாக வடைந்தவர் ஆத்ம ஞானத்தை யடைதல் வாயிலாக அவ்விரண்டினது பயனாகிய ஒரே மோட்சத்தை யடைதற்குரியவராவர். கரும சந்நியாசம் கரும யோகமென்னு மவ்விரண்டற்கும்

¶ சாஸ்திரவிதி பூர்வகமாகச் செய்யுங் கருமங்களின் தியாகம் சந்நியாசமாம்; தத்தம் வருணாச்சிரம தருமத்திற் கேற்றவாறு நித்திய நைமித்திக கருமங்களைச் செய்தல் கரும யோகமாம்; இவ்விரண்டும் ஆத்ம ஞானமடைதற்குச் சாதனமாம்; இவ்விரண்டனுள், சித்தசுத்தி யில்லாதவன் செய்யும் கரும சந்நியாசம் அவனுக்குப் பயன்தருவதன்றாம்; அவன் செய்தற்குரியது கருமமேயாம்; அதனாற்றான் அவன் கடைத்தேறுதல் வேண்டும். இவ்வாற்றால் சித்த சுத்தியில்லாதவனுக்குக் கருமானுஷ்டானம் கரும சந்நியாசத்தினும் சிரேஷ்டமா யிருக்கின்றது. பயனோக்காது கருமங்களைச் செய்து, எதனிடத்தும் விருப்பு வெறுப்பில்லாதவன் கரும சந்நியாசியே யாவன்; பயனோக்கிக் கருமங்களைச் செய்பவன் விருப்பு வெறுப்புக்களால் தாக்கப்பட்டுத் துன்பத்தையே யடைதற்குரியவனாவன். கருமானுஷ்டானம் கரும சந்நியாசமென்னு மிவ்விரண்டனுள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகையால் சிரேஷ்டமா யிருக்கின்றதென்று பகவான் அருச்சுனனுக்குபதேசஞ் செய்தாரென்க.

பயன் வெவ்வேறென் றுணரும் அவிவேகிகள் இவ்விரண்டனையும் செவ்வையாக அறிந்தவராகார்; ஆராய்ந்து நோக்குமிடத்துக் கரும சந்நியாசம் கரும யோகமென்னு மிரண்டற்கும் பயனொன்றே யென் றுணர்ந்தவர் சாங்கியம் யோகமென்னு மிவ்விரண்டனையு முறையாக வுணர்ந்தவராவர். †

(அருச்சுனா! நீ பகவானே! கரும சந்நியாசம் ஞான நிஷ்டைக் கேதுவாயிருத்தலின், அஃதவசியஞ் செய்தற்குரியதாம்; அதனால், சித்தசுத்தி யுடையவன் ஞானநிஷ்டை செய்தற்பொருட்டுக் கரும சந் நியாசஞ் செய்வதுபோல, சித்த சுத்தி யில்லாதவனும் ஞான நிஷ்டை செய்தற்பொருட்டு, அச்சந்நியாசத்தையே முதலிற் செய்தல் கூடாதோ? என்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

அருச்சுனா! முன்னர்ச் சித்த சுத்திக்கேதுவாய நிஷ்காம கருமத் தைச் செய்துவரின், அதனால் சித்தசுத்தி யுண்டாவதாம்; அஃதுண் டாகவே, கரும சந்நியாசஞ் செய்துகொள்வது சம்பவிப்பதாம்; அதி காரி புருஷர் யாவரும் அச்சந்நியாசத்தை மேற்கொண்டு, பிரத்தியக பின்ன பரமாத்மாவாய என்னை அதி சீக்கிரமாக வடைவர். இச்சம்சார காலத்தில் நிஷ்காம கருமஞ் செய்வதொழியச் சிந்திப்பதற்கரிய மகி மைவாய்ந்த சாதனம் என்னை யடைதற்கு வேறு வழியாக வுளதென் றுணர்தல் எவ்வாற்றானு மில்லையாம். தமக்குரிய அந்த நிஷ்காம கரு மத்தை முன்னர்ச் சித்த சுத்தியின் பொருட்டுச் செய்பவரே என் னைத் தவறா தடைவர். இதனை நீ யறியக்கடவாய். ¶

---

† பகவான் அருச்சுனனை நோக்கி, அருச்சுனா! விசாரமில்லாதவர் கரும சந்நி யாசம் கரும யோகமென்னு மிரண்டும் வெவ்வேறு பயனுடையன வென்று கூறுகின்றனர்; விசாரமுடையவர் அவ்வாறு கூறுவதில்லை. கரும சந்நியாசம் கரும யோகமென்னு மிரண்டனுள், ஒன்றனைச் செவ்வையாக அனுஷ்டிப்பவர் மோட்ச வடிவாகிய அவ்விரண்டன் பயனையு மடைவரென் றுபதேசஞ் செய்தா ரென்க.

ஐயந்திரிபின்றிய ஆத்மஞானம் சங்கியையாம்; அதனை யடைவிப்பது சாங் கியமாம்; அஃதிங்குக் கரும சந்நியாசமாம். பயனோக்காது சாஸ்திரவிதி பூர்வக மாகச் செய்யும் நித்திய நைமித்திக கருமங்கள் இங்கு யோகமாம்.

¶ பகவான் இங்ஙனங் கூறியவாற்றால், கருமயோகம் கரும சந்நியாசமென்னு மிரண்டிற்கும் பயனொன்றே யாயினும், சித்த சுத்தியில்லாதவனுக்குக் கரும சந் நியாசத்தினும் கருமயோகமே அத்தியந்தஞ் சிரேட்டமானதாம்; அதனாலன்றி வேறு சாதனத்தால் அவன் பரமாத்மாவை யடைதல் முடியாதென்பது பெறப் பட்டவாறறிக.

(அருச்சுனா! நீ சீவர்கள் கருமத்தால் பந்தமடைகின்றன ரென்பது மிகு பிரசித்தமாயிருத்தலின், கருமம் பந்தத்திற்கே காரணமாம்; அதனால், நிஷ்காம கருமஞ் செய்பவன் என்னைத் தவறா தடைவனென்று தேவரீர் கூறுவது எவ்வாறு பொருந்துமென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

அருச்சுனா! தம்முள் வேற்றுமையுள்ள சத்துவ ராசத தாமத குணவடிவமாயுள்ள அந்தக்கரணமும் பெரும்பான்மையும் மயக்கஞ்செய் தற்கேதுவாயுள்ள சுரோத்திர முதலிய இந்திரியங்களுமென்னு மிவற்றை யடக்கினவரும், சர்வான்மாவாயுள்ள என்னைத் தமது கூர்மையான புத்தியால் நன்றாக அறிந்தவருமாகிய ஞானிகள் பிறரிகழ்தற்குரிய பந்த சாதனமாயுள்ள கருமங்களைச் செய்தாராயினும், அக்கருமங்கள் கரும சாட்சியாக விளங்குமவர்களைப் பந்தத்திற்குள்ளாக்கி வருத்துவ தில்லையாம். அந்தக்கரணம சுரோத்திர முதலிய இந்திரியங்களென் பவற்றைச் செவ்வையாக வடக்கிய ஞானிகள் கரும சந்நியாசஞ்செய்து, அதனாலடைதற்குரிய பயன் யாதிருக்கின்றது? ஒன்றுமின்றாம். *

## ஆத்ம ஞானியின் தன்மையைக் கூறல்.

அருச்சுனா! அந்தக்கரணத்தையும் இந்திரியங்களையும் செவ்வையாக வடக்கிச் சமாதியின்கண் நிலைத்து நின்று சற்குருவருளால் தனது நிஜவடிவத்தை யுள்ளவாறுணர்ந்தவன் கண்களால் உருவங்களைக் காண்

---

* மனம் புத்தி சித்தம் அகங்காரமென நான்கு பிரிவாகவுள்ள அந்தக்கரணத் தையும் சுரோத்திராதி ஞானேந்திரியங்களையும் வாக்காதி கருமேந்திரியங்களையுந் தத்தம் வியாபாரங்களைச் செய்யாவாறடக்கி, சமாதியில் நிலைத்திருந்து தமது நிஜ வடிவமாய ஆத்மாவிற்கு எவ்வாற்றானும் வேறாகாதுள்ள பிரஹ்மத்தை யுள்ளவா றுணர்ந்தவர் கரும சாட்சியாக விளங்குதலின், அவர் எக்கருமத்தையும் யானிக் கரும கர்த்தாவென்னும் பாவனையோடு செய்வதில்லையாம்; அவர் செய்யுங் கரும மனைத்தும் உலோகோபகாரமாக விருப்பனவாம்; அவர் செய்யும் கருமங்கள் பிறர் கருத்திற்குப் பந்தசாதனமாகத் தோன்றுமாயினும், அவை அவரைப் பந்தத்திற் குள்ளாக்கி வருத்துவதில்லையாம். அந்தக்கரணத்தையும் இந்திரியங்களையு மடக்கிக் கரும சாட்சியாக விளங்குமவர்கள் கரும சந்நியாசஞ் செய்வதால் ஒரு பயனையு மடைவதில்லையாம்; அதனால், அவர்கள் கரும சந்நியாசஞ் செய்வதநாவசியகமாம். வாக்குத் தண்டம், மனோ தண்டம், காயத்தண்டமென்பவை நிஷ்காம கருமத்தின் பயனாம்; அம்மூன்று தண்டத்தையும் முறையே பெற்றுள்ள ஆத்ம ஞானிக்குக் கருமத்தை விடுவதாலும் பயனில்லையாம், செய்வதாலும் பயனில்லையாம்; அங் ஙனமாயினும், அவன் உலோகோபகாரமாகக் கருமத்தைச் செய்து வருகின்றா னென்னும் விஷயம் இங்குணர்தற்பாலதாமென்க.

பான்; செவிகளால் சப்தங்களைக் கேட்பான்; துவக்கால் சீதோஷ்ணங்களை யறிவான்; மூக்கால் வாசனையைக் கிரகிப்பான்; கால்களால் நடப்பான்; புத்தி சோர்வடைந்தால் நித்திரை செய்வான்; மனத்தால் அநுகூலமாகவுள்ள வொன்றனை இதுவேண்டுமென்று விரும்புவான், பிரதிகூலமாகவுள்ள வொன்றனை இது வேண்டாமென்று வெறுப்பான்; மூக்கால் சுவாசம் விடுவான்; வாக்கால் ஏதாவதொன்றனைப் பேசுவான்; கண்களைத் திறப்பான், மூடுவான்; ஆடை ஆபரணங்களால் தன் சரீரத்தை யலங்கரிப்பான்; இன்னும் பல வியாபாரங்களையுஞ் செய்வான்; இவ்வாறு பல வியாபாரங்களைச் செய்வானாயினும், இவ்வியாபாரமனைத்தும் இந்திரியம் பிராணன் மன முதலியன தத்தமக்குரிய விஷயங்களில் செல்லுவதாலுண்டாகும் அவற்றின் வியாபாரங்களாமென் றுணர்ந்து அவ்வியாபார மனைத்திற்குஞ் சாட்சியாக விளங்கும் நிச்சயமுடையவனாய், ஸ்தம்பம்போன்றும் மலைபோன்றும் சிறிதுஞ் சலனமில்லாதிருப்பன். †

(அருச்சுனா! நீ தேவரீர் ஆத்ம ஞானிக்குக் கர்த்திருத்துவாபிமான மின்மையின், அவன் எந்தக் கருமத்தைச் செய்யினும், அதனால் பந்த மடைவதில்லை யென்று கூறியதால், அஞ்ஞானி கர்த்திருத்துவாபிமான வசத்தால், கருமங்களைச்செய்து, அவற்றால் பந்த மடைவனென்பது அறியப்படுகின்றது; அதனால் கருமங்களைச் செய்யும் அஞ்ஞானிக்குச் சந்நியாச பூர்வகமாக வுள்ள ஞான நிட்டையெவ்வாறு சித்தியாமென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

அருச்சுனா! யாவர் லௌகிக வைதிகமான கருமங்களுள் எதனையும் பரமேசுவரனுடைய எனது சந்தோஷத்தின் பொருட்டுச் செய்து, அதன் பயனை விரும்பா திருக்கின்றனரோ அவர் தாஞ் செய்யுங் கரு

† காண்டல் கேட்டல் பரிசித்தல் மோத்தலென்பன ஞானேந்திரியத்தின் வியாபாரமாம்; நடத்தல்பேசல் கன்மேந்திரியத்தின்வியாபாரமாம்; நித்திரை விருப்பு வெறுப்பென்பன புத்தியின் வியாபாரமாம்; சுவாசம் விடுதல் கண்களைத் திறத்தல் மூடுதலென்பன வாயுவின் வியாபாரமாம். ஆத்மாவை யறிந்து, அதனால் பரமானந்த வடிவமாக விளங்கும் தத்துவஞானி சர்வ வியாபாரத்திலும் அவை இந்திரிய முதலியவற்றின் வியாபாரமாமன்றி, ஆத்மாவின் வியாபாரமன்று; ஆத்மா எவ்வாற்றாலும் கர்த்தாவன்றென்பதை யுள்ளவாறுணர்ந்திருத்தலின், அவன் நேத்திர முதலியவற்றால் காண்டல் கேட்டல் முதலிய வியாபாரங்களுள் எதனைச் செயினும், அதனால் பந்தமுறானென்பதாம்.

மஙகளுள எதனேடும சமபநத மடையாா, இஙஙன மவா பொருநதுந தனமையைக கூறுமிடதது, தனனேடு பொருநதத தோனறி யிருநதும, குளிாநத தாமரையின பெரிய இலையும நீருமபோலக கருமஙகளோ டவா பொருநதா திருபபா அநதத தாமரை யிலை நீா போல விருபபவாககு லௌகிக வைதிக கருமஙகளுள எதுவும பநதததிற குக காரண மாவதிலலையாம, (ஆனல, பயனேசகாது செயபுமது சிதத சுததிககுக காரணமாம ) ‡

பயனேககாது செயயுங கருமம் மோடச காரணமா
மெனபதைக கூறல

(அருசசுன! மோடச விருபப முடையவா தமது சிதத சுததி யின பொருட்டு, தமது வருணுசிரமஙகளுககுரிய நிததிய நைமிததிக கருமஙகளைத) தமபோ டிருபபனவாய இநதிரியஙகளாலும, மனததினுலும, உடமபாலும இவை திரிகரணஙகளின வியாபாரமா மெனறு பயனேககாது ஈசுவரப பிரீதியாசச செயயாநிறபா (கருமஙகள பயனேககிச செயபவாககு பநத சாதனமாகவும, பயனேககாது செயபவாககு முததி சாதனமாகவு மிருததலை நீ யறியா திருககினருய அருசசுன! மோடச விருபபுடையவா மேற கூறியவாறு கருமஙகளைத) தினநதோறுஞ செயது வநதாலும, விஷமபோலத துககசாதனமா யுளள அககருமஙகளை பயனேகசாது செயபுமிடதது அவாகடகுச சிததசுததி வாயிலாக மோடசததைக கொடுததறகுக காரண மாம கருமஙகளின பயனசள நாமடைதற குரியனவாமெனறு கருதி, கருமஙகளைப பயனேககிச செபகினறவா அக கருமஙகளால சமசார பநத மடைவா †

‡ லௌகிக வைதிக கருமஙகளுள எதனையும பயனேககாது ஈசுவரப பிரீதியாகச செயபவன, அககருமததால பநதமடைவ திலலை, அவன தாமரை யிலையினீரபோல அககருமததோடு சமபநத மிலலாதிருபபன, அககருமம அவனுககுப பநதசாதன மாகாது சிதத சுததி யுணடாதறகுச சாதனமா யிருககினறது, பயனேககிச செயயும கருமமே எவாககும பநத சாதனமா யிருககினறதென றருசசுனனுககுப பகவான கூறினரெனக

† பயனேககாது கருமஙகளை ஈசுவரப பிரீதியாகச செயபவன முனனாச சிதத சுததியையும், அதனபினனா நிததியா நிததிய வஸது விவேகததையும், அபபால சநநியாச பூாவகமான ஞான நிடடையையும், அதன பின சாநதிவடிவ மோடசததையு மடைகினருன, பயனேககிக கருமஙகளைச செயகினறவனே அவறருல சமசார பநததததையே யடைகினருனென றருசசுனனுககுப பகவான கூறினரெனக

## இதுகாறும் சித்தசுத்தி யில்லாதவர்க்குக் கரும சந்நியாசத்தினும் கரும யோகமே அத்தியந்தஞ் சிரேட்டமாமென்று கூறிய பகவான் இப்போது சித்தசுத்தி யுடையவர்க்குக் கரும சந்நியாசமே அத்தியந்தஞ் சிரேட்டமா மென்று கூறல்.

பரமேசுவரனுன என்னிடத் தன்புள்ள அருச்சுனு! (யான் கூறுவதைக் கவனமாகக் கேட்கக் கடவாய். தேகத்தின் வேறாகத் தேகியைச் செவ்வையாக அறிந்திருப்பவன்) காமக் குரோதாதி விருத்திகளெழாவா றடங்கியுள்ள மனத்தினாலே கரும மனைத்தையும் அவற்றின் பயனையும் விட்டு, நவத்துவாரங்கள் பொருந்தியுள்ள மாயாபுரமென்னு மிவ் வுடம்பி னிடத்துத் துன்ப மென்பது சிறிது மின்றி யின்ப வடிவமாகவே பிறழா திருப்பன். அவன் பிராரத்த கருமவசத்தாலே தன்னெதிரே வந்தடைவனவாய கருமங்களைச் செய்பவனுமாகான், செய்விப்பவனு மாகான். ¶

(அருச்சுனு! நீ ஒருவனிடத்துள்ள நடத்தற் றொழில் அவனுட் கார்ந்துள்ளபோது நிகழாமைபோல, ஆன்மாவினிடத்துள்ள செய்தல் செய்வித்த லென்னுந் தொழில்கள் சந்நியாச காலத்தில் நிகழவில்லை யென்பது தேவரீரது வாக்கியத்தின் தாற்பரியமா? அல்லது ஆகாயத்தினிடத்துத் தோன்றும் கறுநிறம் கொப்பரை கவிழ்த்தாற்போன் றுள்ள விடமென்பன அதனிடத்துக் கற்பிதமா யிருத்தல்போல, ஆன்மாவிடத்துத் தோன்றும் செய்தல் செய்வித்த லென்னுந் தொழில்கள் அதனிடத்துக் கற்பிதமா யிருக்கின்றன வென்பது தேவரீரது வாக்கியத்தின் தாற்பரியமா வென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

¶ நித்தியம், நைமித்திகம், காமியம், பிராயச்சித்தம் எனக் கருமம் நான்காம்; தேகத்திரய விலட்சணமாய், அவஸ்தாத்திரய சாட்சியாய் ஆத்மாவை யுள்ளவா றறிந்தவன் இவற்றுள் எதனையுஞ் செய்வ தில்லையாம், செய்விப்பது மில்லையாம்; கரும பலத்தைச் சிறிதும் விரும்புவதில்லையாம். அவன் காதிரண்டு, கண்ணிரண்டு, மூக்கிரண்டு, வாயொன்று, பாயு ஒன்று, உபஸ்த மொன்றென நவத்துவாரமுடைய மாயாபுரமென்னு முடம்பிலே, உலக நோக்க மின்றிச் சச்சிதாநந்த வியாபக வடிவமாகவே விளங்குகின்றான்; அவனுக்குச் சம்சாரபந்தஞ் சிறிது மில்லையாமென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினரென்க.

(அருச்சுனா! தேகேந்திரிய முதலியவற்றிற்குச் சுவாமியாயுள்ள இவ்வான்மா தேகேந்திரிய முதலியவற்றின் கர்த்திருத் தன்மையையும், கருமங்களையும், தேகேந்திரிய முதலியவற்றிற்குக் கரும பலங்களோடு சம்பந்தத்தையும் செய்வதில்லையாம்; ஆனால்,) இப்பாகுபாடுடையனவாய கரும மனைத்தும் அஞ்ஞான வடிவ மாயையின் காரியங்களேயாம். ஆத்மாநாத்ம விவேகமில்லாதவர் அக்கருமங்களை யுண்டாக்கும் அஞ்ஞானத்தால்(உண்மையில் அகர்த்தா அபோக்தாவாயும், பரமாநந்த வடிவமாயும், அத்விதீயமாயுமுள்ள ஆன்மாவை) உள்ளவா றுணராது, யானிக்காரியத்தைச் செய்யுங் கர்த்தா, இஃதெனது காரியமாமென் றுணர்ந்து, மித்தையாயுள்ள உலகாசாரத்தால் மோகமுற் றழிகின்றனர்.¶

சனன மரண வடிவச் சம்சார நிவிர்த்தியின் காரணங் கூறல்.

(அருச்சுனா! நீ அநாதி அஞ்ஞானத்தால் தமது சொரூபத்தை யறியாதுள்ளவர்க்குச் சனனமரண வடிவச் சம்சார நிவிர்த்தி யெவ்வாறுண்டாகுமென்று வினவுதல்கூடும்? அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

அருச்சுனா! எவர்க்கும் ஆன்ம ஞானத்தால் தன்னை மறைத்த பந்தமென்னுமஞ்ஞான முற்றும் நாசமாவதாம்; அது நாசமாகவே, அவ்வான்மஞான முடையவர்க்கு (எங்கும் கடத்தில் மண்போல நிறைந்து பரிபூரணமாயுள்ள)பிரஹ்மம் ஆகாயத்திற்றோன்றும் சூரியன் போலச் செவ்வையாக விளங்குவதாம்; ஆன்மஞானமே ஆன்மாவிற்கு வேறாகாதுள்ள பிரஹ்மத்தைச் செவ்வையா யறிதற்குச் சாதனமாமென்னும் இவ்வழியால் அப்பரப்பிரஹ்மத்திலேயே நிஷ்டையுடையவராய், அப்பரப்பிரஹ்மத்தில் ஒரு சிறிதும் வேற்றுமையில்லாதிருப்

¶ஆத்மா அசங்கமா யிருத்தலின், அஃதெக்காரியத்தையும் செய்வது மில்லையாம், செய்விப்பது மில்லையாம்; ஆனால், அதன் சந்நிதான விசேடத்தால் தேகேந்திரிய முதலியன செய்வது செய்விப்ப தென்னும் கருமங்களுக்குக் கர்த்தாவாக விருக்கின்றன; அக்கருமங்களின் பயனையடைவது அந்தக்கரணத்தின்கண் ஆன்மாவின் பிரதிபிம்ப ரூபமாயுள்ள சீவனேயாம்; எவ்வகையாலும் ஆன்மா அப்பயனை யடைவ தில்லையாம். இக்காரியங்களைச் செய்யச் சீவனை முன்னிட்டு அஞ்ஞான வடிவத் தெய்வீக மாயையென்னும் பிரகிருதியே முயலுகின்றது; இவ்வுண்மையினை யறியாதவர் யானிக் காரியத்தைச் செய்யுங் கர்த்தா, இஃதெனது காரியமாமென்னும் விபரீத புத்தி யுடையவராய்க் கெடுகின்றனரென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினா ரென்க.

பவர், பிறவிக்குக் காரணமாயுள்ள அஞ்ஞானத்தை யொழித்தவரா யிருத்தலின், இனிப் பிறவாதவரேயாவர். †

## ஆன்ம ஞானத்திற்கு விதேகமுத்தி பயனாமென் றருளிச்செய்த பகவான், அதற்குச் சீவன் முத்தியும் பயனாமெனக் கூறல்

அருச்சுனா! செவ்வையாக வித்தை விநயங்களையுடைய பிராமணன், யானை, பசு, நாய், அந்நாயினிறைச்சியை நன்றாகத் தின்றலையுஞ் சண்டாளனென்று சொல்லப்படுகின்ற இப்பாகுபாடுடைய சர்வப் பிராணிகளிடத்தும் ஒன்றனைக் கண்ணிருப்பவனென்றென்று கருதாவாறும், பிறிதொன்றனைக் கணிருப்பவனென்று கருதாவாறும், அறிவு சொரூபமா யிருக்கின்ற என்னை யெவ்விடத்திலும் ஏகமாகவே காணும் ஞானிபுருஷன் இவ்வுடம்போடு கூடி யிருப்பானாயினும், உடம்பில்லாதவனாவன் (இவனறான் சீவன் முத்தனென்பவனாவன்) ‡

(அருச்சுனா! நீ பிராமணன், யானை, பசு, சண்டாளனென்றற்றொடக்கத்துப் பேதபுத்தி தேவரீர் கூறிய புருஷனுக்கிருத்தலின், அவனுக்குப் பிரஹ்மஞானம் சம்பவிப்ப தெவ்வாறுமென்று வினவுதல் கூடும்', அதற்கு விடை கூறுகின்றேன், சேட்கக் கடவாய்)

அருச்சுனா! பாகியமான சப்தாதி விஷயங்களிற் செல்லுகின்ற சுரோத்திராதி இந்திரியங்களாலுண்டாய சுகமனைத்தையும் தம் அந்தக் கரணத்தினின்றும் செவ்வையாக வொழித்து, அத்தியந்தம் வைராக

† தன்னை மறைத்த பந்தமென்னுமஞ்ஞானம் தன்னை யறிதலென்னுந்தத்துவ ஞானத்தாற் கெடுவதாம் தன்னை (ஆத்மாவை) யறிந்தவர்க்குப் பரப்பிரஹ்மம் அதற்கு வேறாக விளங்குவதில்லையாம், அதனால், அவர்க்குப் பரப்பிரஹ்மம் செவ்வையாக விளங்குவதாம் இம்முறையை யறிந்து, பிரஹ்ம நிஷ்டை செய்பவர் அதற்கு வேறாகாது விளங்குவர், பிறப்பில்லை யென்பது இவர்க்கேயா மென்றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரெனக் பிரஹ்மநிஷ்டையாவது பிரஹ்மைவாகம் (பிரஹ்மமே நான்) என்றிடைவிடாது பாவனை செய்தலாம்

‡ வித்தை—வேதார்த்தத்தினுண்மை ஞானமாம், அல்லது பிரஹ்ம ஞானமாம், விநயம்—இவ்வித்தையை யடைந்திருந்தும் அகங்கார மில்லாதிருத்தலாம்

சத்வ குணமுடைய பிராமண சரீரத்திலும், இராசத குணமுடைய யானை முதலிய சரீரத்திலும், தாமத குணமுடைய சண்டாள சரீரத்திலும் ஆத்மா ஒன்றாகவே யிருக்கின்றதென றுணர்ந்து, எங்கும் ஆத்மாவை (தன்னை)யேகாணும் புருஷனறான் ஆன்மஞானமுடையவனாவன், இவன் உடம்போடுள்ள காலத்திலும் உடம்பில்லாதவனாவனென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரெனக

கியமுடைய தம தந்தக்கரணத்திலே சமாதி யப்பியாசத்தால் விளங்கு கின்ற பிரஹ்மாநந்தத்தை யடைந்தவர்க்கு நித்தியமாயுள்ள பிரஹ்மமடையப் பட்டதேயாம். (அவர்க்குப் பேத புத்தி யுண்மையாக வில்லையாம்.)

(அருச்சுனு! விஷயத்திலாசை அவிவேகிகட்கு உண்டாவதன்றி விவேகிகட் குண்டாவதில்லையென்பதை நீ அறியா திருக்கின்றாய்.) விவேகிகள் தம் சித்தத்தின்கண் பொருந்த அனுபவிக்கின்ற இந்திரிய விஷயங்களின் சம்பந்தத்தா லுண்டாகின்ற இன்பங்கள் நாச முடையனவாமென்றும் இவ்வின்பங்கட் கேற்றவாறுகப் பின்னர்த் துன்பங்களுண்டாவனவாமென்றும் நன்குணர்ந்து, அவ்வின்பங்களை யெப்போதும் விரும்பா திருக்கின்றார்கள். †

## காமக்குரோத முதலியவற்றை யொழித்தவனே பரம புருஷார்த்தமான மோட்சத்தை யடைவானெனல்.

அருச்சுனு! உடம்போடு கூடிச் சீவிப்பவனு யிருந்துகொண்டே, (தம்மை யுடையவரை வருத்துவதில்) விஷத்தை யொத்துள்ள காமக்குரோதங்களால் தோன்றும் வேகங்களால் வேவாவாறு, அக்காமத்தையும் குரோதத்தையும் ஒழித்தவனே பிரஹ்மத்தை யடையும் ஞானியும், அப்பிரஹ்மா நந்தத்தை யனுபவிப்பவனு மாவன். ‡

---

†விஷய சுகத்தை வெறுத்து, சமாதிகூடிப் பிரஹ்மாநந்தத்தை யடைந்திருப்பவர் பரப்பிரஹ்ம வடிவமாகவே யிருக்கின்றனர்; அதனாலவர்க்குப் பேத புத்தி யென்பது துண்மையில்லையாம். விஷய சுகம் துன்பந் தருவதாமென்றுணர்ந்தவரதனை யெப்போதும் விரும்புவ தில்லையாமென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினரென்க.

‡ அனுகூல பதாரத்தங்களைக் கண்டபோதாவது கேட்டபோதாவது நினைக்கும்போதாவது அதனால் அவற்றின்மீது சித்தத்தின்கணுண்டாகு மிச்சையே காமமாம்; அதனாலுண்டாகும் உரோமாஞ்சலி, முகவிலாச முதலியன அக்காமத்தின் வேகமாம். பிரதிகூல பதார்த்தங்களைக் கண்டபோதாவது கேட்டபோதாவது நினைக்கும்போதாவது அதனால் அவற்றின்மீது சித்தத்தின்க ணுண்டாகும் வெறுப்பே குரோதமாம்; அதனாலுண்டாகும் சரீர நடுக்கம், வியர்வை, பற்கடி, பெருமூச்சு, குரூரப்பார்வை முதலியன அக்குரோதத்தின் வேகமாம். இவ்வேகங்களுக்குக் காரணமாயுள்ள காமக் குரோதங்களைத் தேகாபிமானஞ் சிறிதுமின்றிப் பிரயத்ன பூர்வகமாக வொழித்தவன் சமாதி யப்பியாசத்தால்; பிரஹ்மத்தை யறிந்தடைந்து, பிரஹ்மாநந்த வடிவமாகவே விளங்குவன்; மோட்சமென்பது பிரஹ்மாநந்த வடிவமாக விளங்குதலேயாமென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினரென்க.

(அருச்சுனா! நீ காமக்குரோதங்களின் வேகத்தைச் சகித்துக் கொள்வதினாலேயே அதிகாரி புருஷன் மோட்ச மடைதல் கூடுமோ என்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

அருச்சுனா! பிரத்தியகாத்மாவையே தமக்குள்ளே விளையும் ஆநந்த மாகவும், அந்தப் பிரத்தியகாத்மாவையே தாம் நிலைத்து நின்று விளையாடு மிடமாகவும், அந்தப் பிரத்தியகாத்மாவையே தமக்குத் திருஷ்டியாகவும் கொண் டனுபவியா நிற்கும் யோகிகள் அந்தப் பிரத்தியகாத்மாவே யாகி விளங்குவர்; தாம் இயல்பாகவே பெற்றுள்ள பரமாநந்த வடிவமாகவே விளங்குவர்.*

## பிரஹ்ம ஞானத்திற் கந்தரங்க சாதனமாயுள்ள தியான யோகத்தைச் சங்கிரகமாகக் கூறல்.

## (இது 6-வது அத்தியாயத்தில் விரிவாகக் கூறப்படும்.)

சுரோத்திர முதலிய இந்திரிய மைந்தையும் சப்தாதி விஷயங்களிற் செல்லாவாறு தடுத்து, தமது பார்வை யிரண்டையும் புருவ நடுவின்கண் பொருந்தவைத்து, அதோ முகமும் ஊர்த்துவமுகமுமாக முறையே ஓடிக்கொண்டிருக்கின்ற அபான வாயுவையும் பிராண வாயுவையும் தமதப்பியாச வலியால் அசையாவாறு கும்பகஞ் செய்து, ஐந்து கூறுபாடாயுள்ள சப்தாதி விஷயங்களின்மீ தெழுகின்ற இச்சையை யடக்கி, மனத்தில் அடிக்கடி எழுகின்ற பயத்தையும் கோபத்தையும் மனத்தை யடக்குதல் வாயிலாக வடக்கி, உணவு கொள்ளுதல் உலாவுதல் என்றற் றொடக்கத்தனவற்றை மிகுதல் குறைத லில்லாது சமமாய்க் கொண்டொழுகும் யோகிகள் யோகசித்தி பெற்று இச்சம்சார வலையினின்றுந் தப்பி, பிறப்பில்லாது விளங்குவார்கள். ¶

---

* பிரத்தியக் - உள். பிரத்தியகாத்மா - சரீரத்திரய விலட்சணமாய், அவஸ்தாத்திரய சாட்சியாய், சச்சிதாநந்த வடிவமாய், பிரஹ்மத்திற்கு வேறுகாதுள்ள ஆத்மா. சப்தாதி விஷயங்களைத் துச்சமாகக் கருதி, காமக் குரோதங்களைத் தடுத்து, எதனிலும் விருப்பமில்லாதிருப்பவர் தமது பிரஹ்ம சொரூப ஆத்மாவையே தமக்குள் விளையும் ஆநந்தமாகவும், தாம விளையாடுமிடமாகவும், தமக்குத் திருஷ்டியாகவுங் கொண்டனுபவித்து, சச்சிதாநந்த வடிவமாகவே விளங்குவரென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினரென்க.

¶ விஷய விருப்பத்தை யொழித்து, பார்வை யிரண்டையும் புருவ நடுவின் கண் நிறுத்தி, அபான பிராண வாயுக்களிரண்டையும் நாசிக்குள் சமமாக நிரோதம் செய்து, இந்திரியங்களையும் மனத்தையும் பிரயத்ன பூர்வகமாக வடக்கி, பயத்தையுங் கோபத்தையு மொழித்துயோகாப்பியாசஞ் செய்பவர் யோக சித்திபெற்று இச்சம்சார வலையினின்றும் தப்பி, பிறப்பிறப்பில்லாது பரமாநந்த வடிவமாக விளங்குவரென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினரென்க. அதோ முகம் - கீழ் முகம் ; ஊர்த்துவ முகம் - மேல் முகம் ; நிரோதம் - அடக்குதல்.

(அருச்சுனு ! நீ இந்த யோகி புருஷர் எதனையறிந்து முத்தியடை கின்றன ரென்று வினவுதல்கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

பிராமணுதி ஜாதி யபிமானமுடையார் செய்யும் ஜ்யோதிஷ்டோம முதலிய கர்மங்களுக்கும், அறிவுடையோர் தமது ஜன்மாந்தர பாவம் நிவிர்த்தியாதற் பொருட்டுச் செய்யும கிருச்சிரம் சாந்திராயண முதலிய தவங்களுக்கும், ஏழுலகங்களுக்கும் பொருந்திய இடமாயும், உற்பத்தி நாசமின்றி எல்லாப்பொருளுமாயும் உள்ள என்னை வேதங்கூறி முடித்த வாறே உள்ளவாறு தமது ஆன்ம சொரூபமாக யோகசித்தி வாயிலா யுணர்ந்தவர், ஜன்ம காரணமாய அஞ்ஞானமில்லாமையால், மீண்டும் பிறத்தற்குரியராகார்; இதனை நீ அறியக்கடவாய். *

5—ஞான கரும அத்தியாயம் முற்றிற்று.

## 6—'வது யோக அத்தியாயம்.

**ஐந்தாவது'அத்தியாயத்தி னிறுதியிற் கூறிய யோகார்த்தங்களை விரிவாகக் கூறியருளுதற்பொருட்டு, இவ்வாறுவது அத்தியாயம் பகவானு லாரம்பிக்கப்படுகின்றதென்க.**

சித்த விருத்தி நிரோதமென்னும் யோகாப்பியாசஞ் செய்யும் மனமுடையவரது யோகாப்பியாசத்தின் கண்ணே ஏகரசப் பொருளா யிருந்து விளங்கியும், காளிங்கனென்னும் சர்ப்பராஜன் முடியின்மீது

* ஜ்யோதிஷ்டோமாதி கருமங்களுககும், கிருசசிராதி தவங்களுக்கும், உலக மேழிற்கும் பகவான் பொருநதிய இடமாயிருககின்ற ரென்பதனுல், பகவானது சந்நிதான விசேஷத்தால் சர்வ வியாபாரமும் நடக்கின்றனவென்பது பெறப்படுவ தாமெனக.

யோகிகள் தமது யோகப்பியாசத்தின் பெருக்கத்தால் சசசிதானந்த வடிவமாய் ஏகரசமாய், சர்வாத்மாவாயுள்ள என்னைத் தமதாத்மாவாக வறிந்து, அதனுல் பிறப் பின் காரணமாய அவித்தையைக் கெடுத்து, யானுக விளங்குவரென் றருச்சுன னுக்குப் பகவான் கூறினுரெனக.

பகவான் பல்வேறு திறத்தனவாயுள்ள சாதனுப்பியாசங்களாலுண்டாவதும், அதிகாரிகள் யாவர்க்கும் மோட்ச சாதனமா யிருப்பதுமாய தமது சொரூப ஞானத்தை இவ்வைந்தாவதத்தியாயத்தில் அருச்சுனனுக் குபதேசஞ் செய்தா ரென்க.

நின்று நடனஞ் செய்தருளிய பகவான் அருச்சுனனுக்கு மீண்டும் யோகார்த்தங்களை விரிவாகக் கூறத்தொடங்கி, அருச்சுனா! நீ என்னை நோக்கி, தேவரீர் சர்வ கருமங்களும் தியாகஞ் செய்யத்தக்கனவா மென்று கூறினமையின், அவை சந்நியாசத்தினும் யோகத்தினும் மிகக் கீழாயினவாமென்பது பெறப்படுகின்றது; அதனால்; யான் யுத்த வடிவக் கருமத்தில் பிரவேசிப்பது அநாவசியகமாமன்றோ? என்னை ஏன் தாங்கள் அடிக்கடி யுத்த வடிவக் கருமத்தில் பிரவேசிக்குமாறு வற்புறுத்துகின்றீரென்று வினவுதல்கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.

அருச்சுனா! தான் செய்தற்குரிய நித்திய நைமித்திக கருமங்களின் பயனை விரும்புவதொழித்து, இவற்றைவிடாமல் சிரத்தா பக்தி பூர்வகமாகச் செய்துவருகின்றவனே பயனை விரும்பி அக்கினிகொண்டு யாகஞ் செய்பவருள் சிறந்தவனாவன்; அவனே தான் கடைத்தேறக் கருதிய யோகியுமாவன், சந்நியாசியுமாவன்.†

நிஷ்காம கருமஞ் செய்பவன் யோகியுமாவன், சந்நியாசியுமாவனென்று கூறுவதற் கேது கூறல்.

அருச்சுனா! தாம் செய்யுங் கருமங்களால் வரத்தக்கனவாய சுவர்க்காதிப் பயன்களிலுள்ள சங்கற்ப மனத்தையும் தியாகஞ் செய்யாதவர் யாவராயிருப்பினும், அவர் சிறந்த யோகிகளாகமாட்டார்; அவர்கள் யோகிகளாவாராயின், அதற்குக் காரணம் அவர்கள் சுவர்க்காதிப்

†அருச்சுனா! சுவர்க்க முதலிய பயனை விரும்பாது சாஸ்திரங் கூறியவாறு அக்னிஹோத்திர முதலிய நித்திய நைமித்திக கருமங்களைச் சிரத்தா பத்தியோடு செய்கின்றவன் கருமியே யாயினும், கருமி யாகான், யோகியுஞ் சந்நியாசியுமாவான். அதனால், நீ உனது சுதர்மமாயுள்ள யுத்த வடிவக் கருமத்தைச் செய்யக்கடவாயென்று பகவான் அருச்சுனனுக்குக் கூறினாரென்க.

யோக மென்பது சித்தத்தின்கண் விட்சேபமில்லாமையாம்; விட்சேபம் - மனமொருமுகமாகாதிருத்தலாம்; சந்நியாசமென்பது தியாகமாம்;தியாகம்-விடுதல்.

நிஷ்காம கருமஞ் செய்பவனிடத்துத் தான் செய்யும் கருமங்களின் பயனை விரும்பாமையாகிய தியாகமும், பயனை விரும்புதல்வடிவ விட்சேபமுமின்மையின் அவன் அவற்றால் சந்நியாசியும் யோகியுமாயிருக்கின்றானென்று கூறப்படுகின்றானென்க. இதனால், நிஷ்காம கருமஞ்செய்பவன் உண்மை நோக்கில் சந்நியாசியும் யோகியு மாகாவிடினும், சகாம புருஷரை நோக்க யோகியும் சந்நியாசியுமா யிருக்கின்றானென்பதிங் குணர்தற்பாலதாம்.

பயன்களிலுள்ள தமது சங்கற்ப மனத்தையு மொழித்தலேயாம். சங்கற்பத் தியாகமே ஒழிவதில்லாத சிறந்த யோகமாம் இப் பாகுபாட்டை நீ யாராய்ந்தறியக் கடவாய் ‡

(அருச்சுனா! நீ தேவரீர் இதுகாறும் திருவாய்மலர்ந்தருளினமை பால், நிஷ்காம கருமம் அவசியம் செய்யத் தக்கதாமென்பது பெறப் பட்டது, அதற்கு முடிவில்லையோ வென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன் கேட்கக்கடவாய்)

காமங் கடைத்தேறுமாறு யோகாப்பியாசஞ் செய்ய முயலுகின்ற வர்க்கு, அதனைத் தம்வசமாமாறு செய்வதற்குக் காரணமா யிருப்பது பயன் நோக்காது செய்யும் நித்திய நைமித்திக கருமமேயாம் உள்ள படி யோகாப்பியாசம் சித்தியானபின், (ஞானநிஷ்டை யடைதற் பொருட்டு அவர் மேற்கொள்ளத் தக்கது சந்நியாசமேயாம் அவர் யோகாப்பியாசஞ் சித்தித்தபின், சந்நியாசங் கொள்ளாது) உண்மை யாகவே செய்யும், நித்திய நைமித்திக கருமங்கள் அவர் செய்யும் யோகாப்பியாசத்திற்குத் தடையாகவே யிருப்பனவாம் ¶

(அருச்சுனா! நீ தேவரீர் கூறிய அதிகாரி புருஷன் எந்த யோக சித்தியைப்பெற்றுச் சர்வ கரும பரித்தியாகஞ் செய்தற்குரியவனாகின் றானோ, அந்த யோகசித்தியை அவனடையுங்கால மெப்போதென்று வினவுதல்கூடும், அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

---

‡ நிஷ்காம கருமஞ்செய்பவன் தான் செய்யும் கரும பலத்திலிச்சையற் றிருத் தலின், சந்நியாசியாவன் அதனால், அவன் மனம் சலித்தலில்லா திருத்தலின், யோகியுமாவன், இக்காரணங்களால் நிஷ்காம கருமஞ் செய்பவன் சந்நியாசியென் றும் யோகியென்றும் சொல்லப்படுகின்றானென் றருச்சுனனுக்குப் பகவான் கூறி னாரெனக்

¶ விஷய சுகங்களை விஷம்போலக்கருதி வெறுத்திருப்பவர்க்கே யோகாப்பியா சம் சித்திப்பதாம் அது சித்தித்தபோது, அந்தக்கரண சுத்தி சித்திப்பதாம், அது சித்தித்தபோது, சந்நியாசஞ் சித்திப்பதாம், அது சித்தித்தபோது சிரவண மனன நிதித்தியாசன வாயிலாக ஞான நிஷ்டை சித்திப்பதாம், அது சித்தித்த வர்க்கே மோட்சஞ் சித்திக்கும், யோகாப்பியாசஞ் சித்திக்குமவரை நிஷ்காம கரு மங்களை அவசியஞ் செய்தல்வேண்டும், யோகாப்பியாசஞ் சித்தித்தபோது அவற் றைச் செய்வதனாவசியகமாம், அவை யோக விக்கினமாமென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரெனக்

*அருச்சுனா! எப்போது அவ்வதிகாரி புருஷன் இழிந்தகைம்மையுடையனவாய சப்த பரிச முதலிய விஷயக் கூறுபாடுகளிலும் பல திறத்தனவாயுள்ள கருமப் பயன்களிலும் இச்சை வைத்தலாகிய சங்கற்பமில்லாதவனாகின்றானோ அப்போது இயல்பாகவே யோகசித்தியுடையவனாகின்றான் †*

•

யோகசித்தியுடையவர் தம்மைத் தாமே இச்சம்சார வடிவச
சாகரத்தினின்றும் மோட்ச வடிவக் கரையிலேற்றுதற்
குரியவராகின்றனர், மற்றவர் தம்மைத் தாமே
இச்சம்சாரவடிவச் சாகரத்தில் மேன்மேலும்
மூழ்கச் செய்தற் குரியவராகின்றனரென்க
கூறல்

*அருச்சுனா! ஒவ்வொருவர்க்கும் தமது மேன்மையைத் தாமே யல்லாமல் வேறு செய்தற்குரியார் யாவர்? ஒருவருமிலர். ஒவ்வொருவர்க்கும் தமது கீழ்மையைத் தாமே யல்லாமல் வேறு செய்தற்குரியார் யாவர்? ஒருவருமிலர். கொடுநெறியிற் சென்றொழுகுங் காலத்து ஒவ்வொருவர்க்கும் தாமே யல்லாமல் வேறெவர் உண்மையாய பகைவரா யிருக்கின்றனர்; ஒருவருமிலர், செந்நெறியிற் சென்றொழுகுங்*

*† யோகசித்தி-யோகாப்பியாசம் முற்றுப் பெறுதல். சப்த பரிச முதலிய விஷயங்களிலும் கருமப் பயன்களிலுமுள்ள இச்சையே யோகாப்பியாசம் முற்றுப் பெறுதற்குத் தடையாயிருப்பதாம், அவ்விச்சை யெப்போதொழிகின்றதோ அப்போது யோகாப்பியாசம் முற்றுப் பெறுவதாம், யோகசித்தி யுடையவன் செய்தற்குரிய கருமம் ஒன்றுமில்லையென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரென்க*

*சப்த முதலிய விஷயங்களும் நித்திய நைமித்திக கருமங்களின் பயன்களும் மித்தையாம், துக்க சாதனமாயிருப்பனவா மென்னும் விவேகமும், ஆத்மா அகர்த்தாவாயும் அபோக்தாவாயும் பரமாநந்த போதவடிவமாயுமிருக்கின்றதென்னு முணர்ச்சியு முடையவராய யோகாப்பியாசஞ் செய்பவர்க்கே சப்த முதலிய விஷயங்களிலும் கருமப் பயன்களிலும் இச்சை வைத்தலாகிய சங்கற்பமொழிதல் வாயிலாக யோகசித்தி யுண்டாமென்பது இங்குணரத்தற்பாலதாம்*

காலதது ஒவவொருவாககும தாமே யலலாமல வேறெவா உணமை யாய உறவினராவா, ஒருவருமிலா ‡

(அருசசுனு ! நீ யாவா தமககுத தாமே உறவினராவா, யாவா தமககுத தாமே பகையினராவ ரெனறு வினவுதலகூடும, அதறகு விடை கூறுகினறேன, கேடகக கடவாய )

அருசசுனு ! தானினிப பிறநதிறவா வணணப தன மனததைச சபத முதலிய விஷயஙகளிலும கருமப பயனகளிலும இசசை வைபப தொழிந தடககுகினறவ னெவனோ அவன தனககுததானே யெப போதும உறவினனுயிருககினறுன, தம மனததைச சபத முதலிய விஷயஙகளிலும கருமப பயனகளிலு மிசசைவைபபதொழிந தடககுத லிலாதவரெவரோ அவா தமககுத தாமே யெபபோதும பகைவரா யிருககினறனா யாவரும ஒழிவினறி யடைகினற சீதம உஷணம, சுகம துககம, மானம அவமானமெனறற றொடககததுத துவநதுவங களைச சிறிதுங கருததலினறி, தமது நிஜவடிவமாயுளள ஆதமா வொனறனையே, யெபபோது மறவாது விருமபி யோகாபபியாசஞ செயபவரிடதது, ஞான வடிவமாயுளள ஆதமா விளஙகுவதாம, அங

‡ ஒவவொருவரு தமககு மேனமையையோ கீழமையையோ செயதுகொ ளளுவதறகுக காரணராயிருபபவா தாமேயனறி மறறவரலலா ஒவவொருவரும தாம தீவினைகளைப புரியுமபோது தமககுததாமே பகைவராயிருககினறனா, நலவி னைகளைப புரியுமபோது தமககுத தாமே நடபினராயிருககினறனா ஒவவொருவ ரும தமமை யுயாததுதறகும தாழததுதறகும தாமே காரணமாயிருககினறனா, மறறவரலலா, யோகசிததியுடையவரோ தமமை யுயாததுதறகுத தாமே காரண ராயிருககினறனா, தமககுத தாமே நடபினராகவு மிருககினறனா, அஃதிலலா தாரோ தமமைத தாழததுதறகுத தாமே காரணராயிருககினறனா, தமககுததாமே பகைவராயுமிருககினறனரென றருசசுனனுககுப பகவான கூறினுரெனக

இஙகு மேனமையெனபது சமசார வடிவச சாகரததினினறும மோடச வடிவககரையிலேறுதலாம, கீழமையெனபது சமசார வடிவச சாகரததில மேன மேலு மூழகுதலாம

சபத முதலிய விஷயஙகளிலும கருமப பயனகளிலு மிசசை யொழிதல வாயிலாக யோகசிததி பெறறவன ஆதமஞான வாயிலாக ஜனம காரணமான அஞஞானததை யொழிததுப பரமாநநத வடிவமாக விளஙகுவானெனபதிங குணாததபாலதாம

மனம் விளங்குகின்ற ஆன்மா சீதம் உஷ்ணமுதலிய வடிவமாகவிளங்குகின்ற இவ்வுலகவடிவமாயுள்ள மாயை மறைக்க, மறைவதில்லையாம். *

## யோகசித்தியுடையான் உலக வியவகாரத்தில் தாக்கற்றிருப்பானெனல்.

அருச்சுனா! சற்குரு வாயிலாகக் கற்றுணர்தற்குரிய ஞானநூல் பலவற்றையும் ஐயந்திரி பில்லாது கற்று, அந்நூல்களால் உணர்தற்குரிய பயன்களை யுள்ளவாறுணர்ந்து, சப்த முதலிய விஷயங்களில் விரைந்தோடும் சுரோத்திரமுதலிய இந்திரியங்களைப் பிரயத்தனபூர்வகமாக வடக்கி, (சப்த முதலிய விஷயங்கள் தன்னருகே வந்தும், அவற்றை யனுபவித்தற்குரிய சாமர்த்தியம் தன்னிடத்திருந்தும் அவற்றால் தனது) யதார்த்த நிலையினின்றும் பிறழ்தலில்லாது, ஓட்டையும் பொன்னையும் மண்ணென்னும் ஒரு பொருளேயாகச் சமமாக நோக்குகின்றவனே யோகசித்தி யுடையவனாவன். அவனே இவ்வுலகத்தில் யாவரும் யானெனதென்று வியவகரித்தலையும் பெரிய மாயக் கூத்தினைச் செய்யாது, தான் அக்கூத்தினைச் சாட்சியாக விருந்து கண்டு நிச்சலமாகவே யிருப்பான். ¶

* மனத்தை யடக்குதலென்பது இங்கு இந்திரியங்களையும் உடம்பையு மடக்குதலையு முணர்த்திநின்றது. மனம் வாக்குக் காயமென்னும் திரிகரணத்தையும் எதனிடத்து மிச்சையில்லாது பிரயத்தன பூர்வகமாக அடக்குகின்றவன் தனக்குத்தானே யெப்போதும் உறவினனாயிருக்கின்றான்; மன முதலியவற்றை யிங்ஙன மடக்காதவர் தமக்குத்தாமே யெப்போதும் பகைவரா யிருக்கின்றனர். மனத்தைக் கலங்கச் செய்வதாகிய சீதம் உஷ்ணம், சுகம் துக்கம், மானம் அவமான மென்றற்றொடக்கத்துத் துவந்துவங்களில் சமபுத்தி வைத்து, மனது தமது வசமாமாறு யோகாப்பியாசஞ் செய்கின்றவர்க்கு அவர் தம் நிஜவடிவ ஆத்மா சொப்பிரகாசமாக விளங்குவதாம; அவ்விளககம் துவநதுவங்கள் சம்பவித்த விடத்தும் மறைவதில்லையாம்; அவ்விளக்க முடையவர்க்கே பிறப்பில்லையாமென்றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரென்க.

¶ சற்குரு வாயிலாகக் கற்றற்குரிய நூல்களைக் கற்று, அவற்றின் பயனை யுள்ளவாறுணர்ந்து, இந்திரியங்களைப் பிரயத்தின பூர்வகமாக வடக்கி, சப்த முதலிய விஷயங்களுள் எதனாலும் கலங்குவதில்லாது யோகாப்பியாசஞ் செய்பவன் யோகசித்தி பெறுதற்குரியவனாவன்; யோகசித்தி பெற்றவன் ஓட்டையும் பொன்னையும் ஒரு பொருளாகவே வெறுப்பு விருப்பின்றிக் காண்பான்; உலக வியவகாரத்தில் பற்றில்லாதவனா யிருப்பன்; சர்வ வியவகாரங்கட்கும் சாட்சியாய் நிச்சலமாயிருப்பனென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரென்க.

### சத்துரு மித்துரு முதலியோரிடத்துச் சமபுத்தி யுடையவனே யோகிகளுள் சிறந்தவனுவனெனல்

*பிரதி யுபகாரத்தை விரும்பாது பிறர்க்குபகாரஞ் செய்யும் சுகிர்தன், அன்புள்ள மித்துரு, கொடிய சத்துரு, எதற்குஞ் சித்தங் கலங்குதலில்லாது யாவரிடத்தும் சம நோக்குடையவனுயுள்ள மத்தியஸ்தன், உறவினன், நிந்திப்பவன், சுருதி ஸ்மிருதிகள் கூறுகின்றவாறு புண்ணிய கருமங்களைச் செய்யும் சாது, பாவ கருமங்களைச் செய்யும் பாவியென்றுள்ள இவரிடத்துச் சம நோக்குடையவனுயிருப்பவனே யோகிகளுள் சிறந்தவனுவன். †*

### யோகாப்பியாசஞ் செய்ய முயலுகின்றவன் செய்தற்குரியனவற்றைக் கூறல்.

*அருச்சுன! நீ யான்கூறிய மிகமேன்மையுடையதாகிய இந்தயோகத்தை அப்பியாசஞ்செய்ய முயலுகின்றவன் அதன்கண் நிலைத்து நின்று செய்யும் சாதனங்களைக் கூறுகின்றேன், அவற்றைக் கேட்கக்கடவாய். அவன் கெடுவதின்றி மேன்மேலும் பெருகுகின்ற விஷயவிருப்பத்தை (சப்தாதி விஷயங்கள் அநித்தியமாயிருப்ப துணர்தல் வாயிலாக) முற்றுமொழித்து, யோகாப்பியாசஞ் செய்வதற்குத் தடையாயுள்ளனவற்றுள் எதனையும் தனக்கென்று வேண்டுவதொழிந்து, யோகாப்பியா*

*† சுகிர்தன் முதலியோரிடத்துச் சம நோக்குடையவனு யிருப்பவன் சர்வப்பிராணிகளிடத்துஞ் சமநோக்குடையவனு யிருப்பனென்பதிங் குணர்தற்பாலதாம்.*

*(1) பிரதி யுபகாரத்தையும் பூர்வ சிநேகிதத்தையும் பூர்வ சம்பந்தத்தையுங் கருதாது பிறர்க்குபகாரஞ் செய்பவன் சுகிர்தனுவன்; (2) பூர்வ சிநேகிதத்தைக் கருதிப் பிறர்க்குதவி செய்பவன் மித்துருவாவன்; (3) தான் பிறர்க்குச் செய்த கொடுஞ் செயல்களைக் கருதாது மீண்டுமவர்க்குக் கொடுஞ் செயல்களைத் தன்னியற்கையாகச் செய்து வருகின்றவன் சத்துருவாவன்; (4) வாதிப் பிரதிவாதிகளிருவர்க்கும் நன்மைசெய்ய விரும்புகின்றவன் மத்தியஸ்தனுவன்; (5) அற்ப சம்பந்தங்கருதிப் பிறர்க்குபகாரஞ் செய்பவன் உறவினனுவன்; (6) பிறர் தனக்குச் செய்த தீமையைக்கருதி, அவரைப் பழிப்பவன் நிந்திப்பவனுவனென்பது மிங்குணர்தற்பாலதாம். சமநோக்கென்பது இங்குச் சுகிர்தன் முதலிய உயர்திணைப் பொருள்களிடத்தும், ஆடு-மாடு முதலிய அஃறிணைப் பொருள்களிடத்தும் விருப்பு வெறுப்பில்லாதிருத்தலாம்.*

சஞ் செய்தற்குரியவிடங்களாமென்று யோக சாஸ்திரங்கள் கூறுகின்ற மலைக்குகைமுதலாகவுள்ளவிடங்களுள் இயற்கையாகவாவது செயற்கையாகவாவது சுத்தமாயுள்ள ஓரிடத்தில் வந்து. கொசுகு - மூடு முதலிய பிராணிகள் வருத்தந் தருவதில்லாத அந்த விடத்தில், அதிக வுயரமாக வேனும் அதிகத் தாழ்வாகவேனு மில்லாதவாறு தருப்பையைச் சமமாகப் பரப்பி, அதன் மீது மிக மிருதுவாயுள்ள மான்தோலையாவது புலித்தோலையாவது விரித்து, அதன்மீது மிக மிருதுவாயுள்ள வஸ்திரத்தை விரித்து, தான் அவ்வாறுசெய்த அவ்வாசனத்தின்மீது பதுமாசனமிட்டுட்கார்ந்து, காண்டல் கேட்டல் முதலிய வெவ்வேறு வியாபாரங்களைச் செய்வதோடுகூடிய கண் காது முதலிய இந்திரியங்களை யடக்கி, மிகக் கலக்கமுடைய மனத்தையும் விரிந்தோடாவாறு விழிப்பாக வடக்கி, அந்தக்கரண சுத்தியின்பொருட்டு யோககுரு கூறியவாறு மனத்தை யொருமுகமாக்குத லென்னும் யோகாப்பியாசஞ் செய்தல்வேண்டும். *

## ஆசனத்திருந்து யோகாப்பியாசஞ் செய்பவன் செய்யத்தக்கனவற்றைக் கூறல்.

அருச்சுனா ! ஆசனத்திருந்து யோகாப்பியாசஞ் செய்ய முயலுகின்றவன் தான் செய்யுமாறு மேற்கொண்ட இவ்வியோகத்தை எத்தடைக்கு மஞ்சாது செய்தல் வேண்டுமென்னுந் திட நிச்சயமுடையவனாய், தலை கழுத்து உடம்பு என்னுமிந்த மூன்றனையும் தண்டம்போலச் சமானமாகவும் அசையாமலும் நிறுத்தி, அவை அங்ஙனமிருக்கும் நிலையில் தான் சோர்விலாதிருந்து, தன் கண்ணிரண்டையும் தன் மூக்கினுனியின்மீது செவ்வையாக நிறுத்தி, அலைகின்ற கடல்போலச் சஞ்சல வடிவமாயுள்ள ஆசையும், அதனாலுண்டாகின்ற உண்மையான பயமும் தன்னைவிட்டொழியவும், அலைகின்ற மனமானது ஆத்மாவை நோக்கிநின்றடங்கவுஞ்செய்து, சர்வாத்ம வடிவமாயுள்ள என்னைப்பரம்

---

* அந்தக்கரண சுத்தியாவது மனம் ஆசை கோபமுதலியன வில்லாது ஆத்மாவையே நோக்கி நிற்பதற்குத தகுதியுடைய தாவதாம். யோகாப்பியாசமாவது மனத்தை உலக நோக்கஞ் சிறிதுமின்றி ஆத்மாவையே நோக்கி நிற்கச் செய்தலாம்.

பொருளாக வுணராநது, எனனிடததுச சித்தததை நிலைபெறச செய திருபபதே யோகமாம. ‡

### பகவான் தாமருளிசசெய்த சம்பிரஞ்ஞாத வடிவ யோகததின் பயனையும் ஆகாராதி நியம மில்லாவிடததது அது வாயககா தெனபதையுங் கூறல்

அருசசுனா! அபபியாச வைராககியஙகளின மிகுதிபபாட்டால சிததியாததற்குரிய யோகததை யான கூறிய இந்நியமததினபடி மேற கொண்டு, எபபோதும சோர்வினறி அபபியாசஞ செயபவா முடிவில மனவிருததியற்ற நிலையைப பெறுதல வாயிலாக மோட்ச சொரூபமா யுள்ள எனனையே வேறறுமையினறி யடைவா, ஆனால, இநத யோகம உணவினகண மிக விருபபமுடையவராய அதனை மிகுதியாக உண்பவரும, உணவினை முறறும விட்டிருபபவரும, மிகுதியாக நித திரை செயபவரும, நிததிரையை முறறு மொழிததிருபபவருமாய இவாககுச சிததியாவதில்லையாம †

‡ யோகாபபியாசஞ செயபவன தலை கழுதது உடமபெனனு மிமமூனறை யும தண்டமபோலச சமானமாகவும அசையாமலு மிருககச செயதல வலபபக கததிலும இடபபககததிலும பின பககததிலுமுளள பொருளகளைப பாராமலும தீண்டாமலு மிருததறகும, கொசுகு, மூடு, எறு மபு முதலியவறறா லுண்டாகும துனபஙகளைப பொறுததுக கொளளுதறகுமாம, கணகளை மூககின நுனியினமீது நிறுததுதல எதிரேயுளள பொருளகளை நோககாதிருததறகாம வெளியிநதிரி யஙகளுள கண தலைமையாயிருபபதுபறறி, அஃதிஙகுக குறிததுக கூறபபட்டது கண உருவ முதலியவறறைப பாராதிருபபதுபோல, காது முதலியனவும சபத முதலியவறறைக கேளாதிருததல முதலியனவா யிருநதாறறான, யோகம சிததிப பதா மென்க

யோகாபபியாசஞ செய்பவனுககுக கருமஙகளைச செயயாதொழிதல எனக குரியதோ அனறோவென றுண்டாகும சஙகையே இஙகுப பயனாமெனக

இஙகுக கூறிய யோகம சமபிரஞஞாத சமாதியாம

† ஏகாநதமான விடததினகண சுகாசனததிருநது, சிதததததினகண பழகக வழகக வசததாலெழும காமாதி விருததிகளைப பிரயததன பூாவகமாக வடககி யோகாபபியாசஞ செயபவன பரமானநத வடிவமாக விளஙகுகினறான, அவனி டதது உணவின நியமமும நிததிரையின நியமமுமிலலையாயின, அவனுககது சிததியாவதிலலையாமெனறு பகவான அருசசுனனுககுக கூறினாரெனக

உணவினை மிகுதியாக உணபவாகும,முறறுமுணணாதிருபபவாகும,உண ணுமளவாகவுணணாது மிகக குறைவாக வுணபவாகது நிததிரையை வேண்டிய

### ஆகாராதி நியமமில்லாது யோகாப்பியாசஞ் செய்பவர்க்கு அது சித்தியாவதில்லையா மென்று கூறிய பகவான் அதனை வற்புறுத்துதற் பொருட்டு, ஆகாராதி நியமமுடைய வர்க்கே அது சித்தியாமெனக் கூறல்.

அருச்சுனா! நித்திரையும், உணவும், போதல் வருதல் முதலிய வியாபாரங்களும் மந்திர ஜபம் வேதாந்த பாடமுதலிய வியாபாரங் களுமாய இவற்றை யோகநூல் கூறிய நியமத்திற்கு அதிகமாகாமலும் குறைவாகாமலும் மேற்கொண்டு யோகாப்பியாசஞ் செய்பவனே துக்க மனைத்தையும் கெடுப்பதற்கேற்ற சாதனமாயுள்ள அச்சமாதி யோகத் தைத் தன்னிடத்துத் தவறாதிருக்கச் செய்யுந் தன்மை யுடையவ னாவன். எப்பொழுது அவனது சித்தம் அவனோடு பொருந்தியுள்ள இந்திரியங்களின் வாயிலாக விஷய போகத்தை யனுபவிக்கப்போவ தொழிந்து, அவன்றனது நிஜசொரூபமாயுள்ள ஆத்மாவினிடத்துச் சென்றடங்கி யாதொரு வியாபாரமுமில்லா திருக்குமோ, அப்பொழுது அவனைத் தன் வசமாய யோகத்தில் நிலைபெற் றிருக்கின்றானென்று ஐயந்திரிபின்றிக் கூறலாம். *

வளவாகச் செய்யாது அதனை முற்றும் விட்டிருப்பவர்க்கும், நோய் தவறாதுண் டாவதாம் ; நோயுடையவர் யோகாப்பியாசஞ் செய்தற்குரியவராவ தில்லையாம். மிகுதியாக நித்திரை செய்பவர் சோம்பலையே தமக்குச் சொந்தமாக வுடையவரா யிருத்தலின், அவரும் யோகாப்பியாசஞ் செய்வதற் குரியவ ராவ தில்லையா மென்பதிங் குணர்தற்பாலதாம்.

* யோகாப்பியாசஞ் செய்பவன் தன்வயிற்றி னரைப் பாகத்தை உணவால் நிரப்பி, காற்பாகத்தை நீரால் நிரப்பி, மற்றைக் காற்பாகத்தைப் பிராணவாயு நன் றாக வுலாவ வைத்தல் வேண்டுமென்பது ஆகாரநியமமாம்; சூரியன் அஸ்தமித்த காலந்தொடங்கி, அவனுதயமாமளவுமுள்ள இராக்காலத்தை தம்முள்ளொத்த மூன்று பாகமாக வகுத்துக் கொண்டு முதற்பாகத்திலும் கடைப் பாகத்திலும் நித்திரை செய்வதொழிந்து, இடைப்பாகத்தில் நித்திரை செய்தல் வேண்டுமென் பது நித்திரையி னியமமாம் ; போதல் வருதல் முதலிய வியாபாரங்களை யோசனை தூரவளவிற்குள் செய்தல் வேண்டும், மந்திர ஜபம், வேதாந்த பாட முதலிய வற்றை வாக்கிந்திரியத்திற்கு வருத்தமுண்டாகாவாறு செய்தல் வேண்டுமென் பது வியாபார நியமமாம். இந்நியமங்களை மேற்கொண்டு யோகாப்பியாசஞ் செய் பவனது சித்தம் அதிசீக்கிரத்தில் ஆத்மாவின்கண் நிலைத்து நிற்பதாம்; சித்தம் அவ்வாறு நிற்குங் காலத்தில் அவன் சர்வ துக்கங்களுக்குங் காரணமாயுள்ள அஞ்

யோகாப்பியாசத்தால் ஒரு முகமாய மனம் அநிலம் (காற்று) சேராத விளக்குப்போல விளங்கும்; அதனையுடையவன் தவறாது பரமாநந்தமடைவானெனல்.

*அருச்சுனா! யான் கூறிய இந்நியமப்பிரகாரம் யோகாப்பியாசஞ் செய்கின்ற யோகி புருஷனது சித்தம் காற்றில்லாத விடத்து அசையாதுள்ள விளக்குப்போல உலக விஷயங்களுள் எதனையும் நினைப்பதின்றி அவன் நிற்கச் செய்தவாறே யுள்ளவாறு நின்றசையாதிருப்பதாம். எப்பொழுது அவனது சித்தம் ஆத்மாவினிடத்துச் சென்று பிரிவின்றி நிற்கின்றதோ அப்பொழுது அவன் ஆத்மாவை யுள்ளவாறறிவதல்லாமல், பரமாநந்தத்தையு மடைகின்றான். ¶*

ஒரு முகமாய சித்தமுடைய யோகி பரமாநந்த வடிவமாக விளங்குகின்றானென்பதற் கேது கூறல்.

*அருச்சுனா! எந்த ஒன்று இந்தக் கண் முதலிய இந்திரியங்களுக்கு விஷயமாகாததாய் எல்லையில்லாத சுகமாயிருக்கின்றதோ, எந்தச் சுகத்தை யோகாப்பியாச வாயிலாகச் சென்றடைந்தவர் பின் அச்சுகத்தினின்றும் வேற்றுமையடையா திருக்கின்றனரோ, எந்தச் சுகத்தைப் பெற்றவர் இச்சுகத்தினும் மேலா யிருப்பதும் சமமா யிருப்பதுமாய பயன் வேறுண்டென்று கருதமாட்டாரோ, எந்தச் சுகம் யோகாப்பியாசத்தால் காமம் வெகுளி முதலியன வின்றிச் சுத்தமாயிருக்கும் புத்திக்கு விஷயமாயிருக்குமோ, அந்தச்சுகத்தின்கண்ணே நிலைபெற்றிருப்பவர்: வஞ்சகராயினோர் வேற்படையை யெடுத்துத் தம் மார்பின்கண் பாய்ந்துருவுமாறு வீசினாலும், தமதங்கங்கள் குறையுமாறு தம்முடம்பை*

ஞானத்தைத் தன்னை யுள்ளவாறுணர்தலென்னும் தத்துவ ஞானத்தால் கெடுத்து, தான் மாத்திரமாக விளங்குகின்றானென்று பகவான் அருச்சுனனுக்குக் கூறினானென்க.

¶ யோகாப்பியாசஞ் செய்கின்றவன் அதனைச் சிரத்தா பத்தியோ டிடைவிடாது செய்து வருவானாயின், அவனது சித்தம் காற்றில்லாவிடத்து விளக்கு அசையாதிருப்பதுபோல அசையாதிருப்பதாம்; அவ்வாறுள்ள சித்தம் ஆத்மாவை யடைந்து நிற்பதன்றிப் பிறிதொன்றனை யடைந்து நிற்பதில்லையாம். இவ்வாறு நிற்கும் சித்தமுடைய யோகிபுருஷன் ஆத்மாவை உடல்பொறி முதலியவற்றினும் வேறாக உள்ளவாறுணர்ந்து அதனால் பரமாநந்த வடிவமாக விளங்குகின்றானென்று பகவான் அர்ச்சுனனுக்குக் கூறினானென்க.

நெருப்புச் சூழ்ந் தெரிந்தாலும், கொடு விஷமுள்ள பாம்பு கடித் தாலும் உடல் பொறி முதலியவற்றிற்கு வேறாக ஆத்மாவை யுள்ளவா றறிந்திருத்தலால் அவற்றிற்குச் சிறிது மஞ்சார், அவரது சித்தம் அப்போடு கூடிய உப்பு அப்பு மயமாய் விளங்குவதுபோல ஆநந்த மயமாகவே விளங்குவதாம் ‡

(அர்ச்சுனா! நீ தேவரீ ரருளிச் செய்த யோகத்தைச் எவ்வுபாயத்தா லப்பியசித்தல் வேண்டுமென்று வினவுதல் கூடும், அதற்கு விடை கூறுகிறேன், கேட்கக் கடவாய்)

அருச்சுனா! விவேகத்தோடு கூடிய மனத்தால் பொருள்பற்றி யும் காமம்பற்றியு முள்ள சங்கற்பத்தா லுண்டாகின்ற ஆசை யனைத் தையும் அவற்றின் வாசனையோ டொழித்து, சுரோத்திர முதலிய இந்திரியங்களைச் சப்த முதலிய விஷயங்களிற் செல்லுதலினின்றும் தடுத்து, உன் சித்தத்தினக்கண் சத்திய ஞாநாநந்தகனமாய் விளங்கு கின்ற பிரத்தியகான்மாவின்கண், (ஆசை யனைத்தையும் அவற்றின் வாசனையோ டொழிப்பதற்கும், இந்திரியங்களை விஷயங்களிற் செல் லாவாறு தடுப்பதற்கு சாதனமாயுள்ள) அம்மனத்தினை அதனது சலனமான தொழிய, அதனோடு மாறுபடுவ தில்லாது பையப்பைய அவ்வாத்மாவோ டொன்றுமாறு நிறுத்தக்கடவாய் *

‡ கண் முதலிய இந்திரியங்களுக்கு விஷயமாகாது, பேரின்ப வடிவமாயுள்ள ஆத்மாவை யோகப்பியாச வாயிலாக வடைந்தவர் அவ்வாத்மாவாகவே விளங்குவர், அவர் ஆத்மசுகத்திற்கு மேலாகவாவது சமமாகவாவது ஒரு சுகமுண்டென்று கரு துவதில்லை, அந்த ஆத்ம சுகம் யோகாப்பியாசத்தால் சுத்தமாய மனமுடைய வர்க்கே வாய்ப்பதாம் மற்றவர்க்கு வாய்ப்பதில்லையாம், ஆத்ம சுகத்தை யடைந் திருப்பவர் தம்மைப் பகைவரென் றறியாமையால் நினைத்துத் தம்மீது பிறரெறியும் வேற்படை முதலியவற்றிற்கும், தம்மைச் சூழ்ந்து தீயெரிவதற்கும், தம்மை விஷப் பாம்பு கடிப்பதற்கும், பிறவற்றிற்கும் அஞ்சுவதில்லாதிருப்பர், அவரது சித்தம் எப்போதும் சாந்தாகாரமாகவே யிருக்குமென்று பகவான் அருச்சுனனுக்குக்கூறினு ரென்க அப்பு—நீர்

* இவ்வுலகத்தும் சுவர்க்காதி யுலகத்தும் அனுகூலமாகத் தோன்றும் பொருள்களின் துண்டாகும் ஆசைகளை அவற்றின் வாசனையோ டொழித்தும், இந்திரியங்களை விஷயங்களிற் செல்லவொவா றடக்கியும், ஆத்மாவினிடத்துச் சித் தத்தை அதனது சலனமொழிய, அதற்கு நட்பாகவே யிருந்து, பையப்பைய நிறுத்திவருதல் வேண்டும், அங்ஙனம் சித்தத்தை நிறுத்திவரின், அஃது அதி

(அருச்சுனா! நீ உன் மனத்தைப் பிரத்தியக் ஆத்மாவின்கண் அதனோ டொன்றுமாறு நிறுத்தும்போது, அஃது உன்னை யேமாற்றி இந்திரியங்களின் வாயிலாக விஷயங்களிற் சென்றோடி விடுவதாம்; அப்போது நீ மிக விழிப்பாக இருந்து,) சுரோத்திர முதலிய இந்திரியங்களின் வாயிலாகச் சப்த முதலிய விஷயங்களிற் சென்றோடி உலாவுகின்ற மனத்தை (சப்த முதலிய விஷயங்கள் அசுத்தமாகவும் துக்கசாதனமாகவும் அநித்தியமாகவு மிருக்கின்றனவென் றவற்றை யாராய்ந்துள்ள விவேகத்தாலும், அவற்றை யென்னதென் றபிமானிக்கும் அபிமானத்தை விடுவதாகிய வைராக்கியத்தாலும்,) உன் வசமாமாறு செய்து, அஃது உன் வசமாவதினின்றும் நீங்கி நித்திரை சோர்வு முதலியன வடைந்தொழியாவாறு கவனித்து, அதனை, உனது நிஜவடிவமாயுள்ள பிரத்தியக் ஆத்மாவின்கண் நிறுத்தி, யோசாப்பியாசத்திற்குத் தீமை தருவனவாயுள்ள விஷய மனனத்தையும் சிறிதுங் கருதுவதில்லா திருப்பதாகிய அப்பியாசமெதுவோ அவ்வப்பியாசத்தை நீ பேறசொண்டொழுகக் கடவாய். ‡

---

சீக்கிரத்தில் உப்பளத்திற் சேர்ந்த ...ங்காய் உப்பாகாரமாய் விடுதல் போல, ஆத்மாகாரமாய் விடுமென்று பகவான் அருச்சுனனுக் குபதேசித்தாரென்க.

சித்தத்தை ஆத்மாவின்கண் நிறுத்தும்போது அஃது தன்கண்ணில்லாது பூர்வ வாசனையால் விஷயங்களை நோக்கிப் போடுவதாம், அப்போது சித்தத்தைப் பிடிவாதமாக அடக்குவதொழிந்து, அது தான்போன வழியே போக அதற்குச் சிறிதிடங்கொடுத்து, பின் அதனைத் தன் வசமாகச்செய்து, ஆத்மாவின்கண் பையப் பைய நிறுத்திவந்தால், அஃது ஆத்மாவின்கண் அதிசீக்கிரத்தில் பிறழாது நிற்றற் குரியதாய், அதனுகாரமாகி விடுமென்பதிங் குணர்தற்பாலதாம்.

‡ இந்திரியங்கள் வாயிலாக விஷயங்களிற் சென்றோடி யுலாவுகின்ற மனத்தை விவேகத்தாலும், வைராக்கியத்தாலும் திருப்பி யடக்கி, ஆத்மாவின்கண் தொடர்பாக நிறுத்தி வருதலே யோகஞ் செய்தற் குபாயமாம், அங்ஙனஞ் செய்து வரும்போது மனம் பாகியாந்தர (வெளி உள்) விஷயங்களுள் எதனையும் கருதாதிருத்தல் வேண்டும், கருதுமாயின், அது சித்தியாவதில்லையாம், மனம் எதனையும் நினைப்பதின்றி ஆத்மாவின்கண் தொடர்ச்சியாக நின்று, அதனுகாரமாய் விடுதலே நிர்விகற்ப சமாதியெனனும் அசம்பிரஞ்ஞாத சமாதியாம். மனம் ஆத்மாவில் நிலைத்து நிற்பதற் குபாயம் ஆசையை யொழித்து, இந்திரியங்களின் வழியாகவுள்ள மனத்தைத் தன் வசமாகச் செய்து, எதனையும் மறந்தும் நினையா திருப்பதேயா மென்று பகவா னருச்சுனனுக்குக் கூறினாரென்க.

(அருச்சுனா! நீ யோகாப்பியாசத்தால் தன் சித்தத்தை உடல் பொறி முதலிய வினைத்திறகும் பிரத்தியக்காய (உள்ளாய) உள்ள ஆத்மாவினகண் பிற்ழாது நிறுத்தி, யாதொரு சங்கற்பமுமின்றி யிருப்பவனுக் குண்டாகும் பயன் யாதென்று வினவுதல் கூடும், அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய)

அருச்சுனா! (யோகாப்பியாசத்தின் மிகுதிப்பட்டால் தாமத குணத்தா லுண்டாகும் அஞ்ஞான மயமான மூடவிருத்தியும், ராசத குணத்தாலுண்டாகும் ராகமயமான குரோத விருத்தியும் நீங்கப் பெற்று, சத்துவகுணத்தா லுண்டாகும் வைராக்கியமயமான சாந்த விருத்தியைப் பெற்று, அதனால் களங்கமற்று நின்ற ஆகாயம்போல) தெளிந்த மனமுடையவனாய, மாயாப் பிரபஞ்சம் தன் சங்கற்ப மாத்திரமாக விருப்பதல்லாமல் அதற்கு வேறாக விருக்கின்றதென்பதை யெவ்வகையாலும் கண்டுணாவதில்லாதுள்ள தனது தத்துவ ஞானத்தால் தடையொன்றுமில்லாது, இந்த வுடம்புடன் கூடியிருந்தே அதற்கு வேறாகவுள்ள (பிரத்தியகாத்மாவிற்கு எவ்வகையாலும் வேறாகாதுள்ள) பிரஹமத்தை யடைந்து யோகசித்தி பெற்றவனே பரமானந்தமடைவன ¶

கிரமமாகச் செய்யும் யோகாப்பியாசத்தால் ஆநந்த வடிவமாக விளங்கும் யோகி புருஷனது திருஷ்டியைக் கூறல

அருச்சுனா! (யோகாப்பியாசஞ் செய்யும்போதுண்டாகும் விஷய விசனை, உறக்கம், சோம்பல் முதலிய பிரதிபந்தங்களால் அவ்யோகாப்பியாசத்தி னின்றும் நீங்காது, அப்பிரதிபந்தங்களைப் பிரயத்தன

¶ தத்துவஞானம் - சீவப்பிரஹம ஐக்கிய ஞானமாம் தடையென்பது இங்கு யோகாப்பியாசத்திற்கு விக்கினமாயுள்ள சோம்பல், நித்திரை, பராக்கு முதலியனவாம

யோகாப்பியாசத்தால் சித்த சுத்தியைச் செவ்வையாகப் பெற்று, அதனால் தன் சங்கற்பத்தைத் தவிரச் சாவ ஜகத்துமில்லை யென்பதைச் சுருதி யுக்தி யனுபவவாயிலாக வறிந்து, காணி மனை முதலியவற்றினகணுள்ள எனதென்னும் அபிமானத்தையும் உடல் பொறி முதலியவற்றினகணுள்ள யானென்னுமபிமானத்தையு மொழித்து தன்னை (ஆத்மாவை)ப் பிரமமாக வுள்ளவாறுணர்ந்தவன் பரமானந்த வடிவமாகவேவிளங்குவான,பரமானந்தவடிவ ாகவிளங்குதலேயோகாப்பியாசத்தின் முக்கியப் பயனுமென்று பகவான் அருச்சுனனுக்குக் கூறினாரெனக

பூர்வகமாக வொழித்து, யானிதுகாறும் கூறிவந்த) இந்த யோகாப்பி யாசத்தைத் தவறாது செய்து வருகின்றவனெப்போது மழியாதுள்ள பூரணாநந்தத்தை வருத்தமில்லாதடைவன. அஃதிருக்கட்டும்

அருச்சுனா! அவன் தன் நிஜவடிவத்தை யுள்ளவா றறிந்திருப்ப தால், சிறிது மாத்திரமாகவேனும் நீங்காது சர்வபூதங்களையும் தன் னுள்ளே யிருப்பனவாகக் காண்பன; அச்சர்வபூதங்களுள்ளே எவ் விடத்தும் தான் சிறிதும் நீங்காதிருக்கின்ற தன்மையையும் விளக்க மாகக் காண்பன். ‡

**தத்துவமசி மகாவாக்கியத்தினது துவம்பதத்தின் இலக்கியப் பொரு ளாய ஆத்மாவின் தன்மையைக் கூறிய பகவான் அதன் தத்பதத்தின் இலக்கியப் பொருளாய பிரஹ்மத்தின் தன்மையைக் கூறல்.**

தேவர்து பகைவராகிய அசுரர்களை முன்னேவென்று மேம்பட்ட அருச்சுனா! எந்த யோகி புருஷன தத்பதத்தின இலக்கியப் பொருளா யுள்ள வென்னைச் சர்வ பூதங்களிடத்திலும், என்னிடத்துச் சர்வ பூதங்களையும் பொருந்துமாறு வேற்றுமையில்லா துள்ளவாறு காண் கின்றானோ அவன் எவ்வகைத்தாய வியவகாரத்தைச் செய்தானாயினும், யான் அவனுக்கே யிருக்கின்றேன். அருச்சுனா நீ இவ்விஷயத்தில் சிறிதும் சந்தேகமடைதல்வேண்டாம். ¶

‡ யோகாப்பியாசம் செய்யும்போ துண்டாகும் விஷய விச்சை, உறக்கம் முதலிய பிரதிபந்தங்களைப் பிரயத்தன பூர்வகமாக வொழித்து, அதனை மிகு விழிப்பாகச் செய்பவன வருத்தஞ் சிறிதுமில்லாது பிரஹ்மவடிவ அபரிச்சின்ன சுகத்தையடைவன, அதனாலவன தனது நிஜவடிவமாயுள்ள ஆத்மாவை யுள்ள வா றுணர்ந்து, சர்வவுலகத்தினும் சமபுத்தியுடையவனாய், சர்வபூதங்களும் தன்னி டத்திருப்பதையும் தான அச்சர்வ பூதங்களிலு மிருப்பதையும் சந்தேகவிபரீதமில் லாது கண்டு ஒரு தன்மையனாகவே விளங்குவானென்று பகவான் அருச்சுனனுக் குக் கூறினாரென்க.

¶ பிரஹ்மத்தைச் சர்வ பூதங்களிலும் பிரஹ்மத்தின்கண் சர்வபூதங்களையும் வேற்றுமையில்லா துள்ளவா றுணரும் யோகிபுருஷன் எவ்வியவகாரத்தைச் செய்தானாயினும், யானவனுக்கே யிருக்கின்றேனென்று பகவான் அருச்சுன னுக்குக் கூறினாரென்க

கயிற்றரவென்னும் வியவகாரத்தில் அரவின்கண் கயிறு யதார்த்தமாகவும், கயிற்றின்கண் அரவு கற்பிதமாகவு மிருத்தல்போலச் சர்வபூதங்களிலும் பிரஹ்

## யோகசித்தி பெற்றவன் யோகத்தினின்றும் விழித்தபோது சர்வப் பிராணிகளையுந் தானாகவே காண்பனெனல்.

*விளங்குகின்ற கூர்மை பொருந்திய வேலையுடைய அருச்சுனா! யோகசித்தி பெற்றவனென்று சொல்லப்படுகின்றவன் துக்கமாவது சுகமாவது யாவர்க்கேனு முண்டாமாயின், அவர்க்குண்டாகின்ற அவற்றைத் தானுமடையா நிற்பன். இதனை நீ உண்மையாக வறியக் கடவாய்.* †

## பகவான் கூறிய உபதேசத்தைக் கேட்ட அர்ச்சுனன் யோகசித்தி பெறுவது எவர்க்கு முடியாததாமெனல்.

*அருச்சுனன் துளசிமாலையைத் தரித்த முடியையுடைய பகவானை நோக்கி, வல்லமை யமைந்த தோள்களையுடைய பகவானே! தேவரீர் எனக்குச் சர்வ பூதங்களையும் சமமாகக் காண்பதுவே யோகமாமென் றருளிச் செய்தீர்; இந்த யோகத்திற்கு ஸ்திரமான நிலையை மனமோய் வின்றி யலைதலால் யான் என்னிடத்துச் சிறிதுங் காணாதிருக்கிறேன். மனமென்று சொல்லப் படுகின்ற இது யாதோரிடத்தும் நிலைபெறுவ தின்றி யலையுமியல்புடையதாய்ச் சுரோத்திர முதலிய இந்திரியங்களைச் சப்தமுதலிய விஷயங்களில் செல்லுமாறு கலங்கச் செய்கின்றது.*

---

*மம் யதார்த்தமாகவும், பிரஹ்மத்தின்கண் சர்வபூதங்களும் கற்பிதமாகவு மிருக்கின் றனவென் றுணர்ந்த யோகி புருஷன் தான் பிரஹ்ம சொரூபமாகவே யிருப் பதையுள்ளவா றுணர்ந் திருப்பதினின்றுந் தவறாது கருமசாட்சியாகவே விளங்குவா னென்பதிங் குணர்தற்பாலதாம்.*

*கருமசாட்சியாக விளங்குகின்றவர் பிராரப்த கருமவலியால் யாஞ்ஞவல்கியர் முதலியோர் போலக் கரும மனைத்தையும் விடுத்தாயினும், வசிட்டர் - ஜனகர் முதலியோர் போல விகித (விதி) கருமங்களைச் செய்தாயினும், தத்தாத்திரேயர் முதலியோர் போல நிஷித்த (விலக்கு) கருமங்களைச் செய்தாயினு மிருப்பர்; அங்ஙனமிருப்பினும், யாம் பிரஹ்மமென்னும் தத்துவஞானத்தினின்றும் சிறி தும் தவறாதிருப்ப ரென்பது மிங்குணர்தற்பாலதாம்.*

*† யோகசித்தி பெற்றவன் சர்வப் பிராணிகளையும் தன்னுடைய சொரூப மாகக் காண்டலின், அவையடையும் சுகதுக்கங்களைத் தானுமடைதற்குரியவனாக விருக்கின்றானென்று பகவான் அருச்சுனனுக்குக் கூறினாரென்க. இதனால் யோகசித்தி பெற்றவன் சர்வசீவ தயாபர மூர்த்தியாக விளங்குவானென்பது பெறப்பட்டதென்க.*

அதனால், இம்மனத்தை யொருகண நேரமாயினும் ஒன்றன்கண் ஸ்திரமாக நிறுத்துதல் முடியாதென்றும், இதனை யடக்குதல் காற்றை யடக்குவதற் கொப்பாமென்றும் யானறிகின்றேன். *

அருச்சுனன் யோகசித்தி பெறுவது எவர்க்கும் முடியாததாமென்று தன்னனுபவத்தைக் கொண்டு கூறியதற்குப் பகவான் விடைகூறல்.

'பகவானே! இந்த யோகத்திற்கு ஸ்திரமான நிலையை மன மோய்வின்றி அலைதலால் யான் என்னிடத்துச் சிறிதுங் காணாதிருக் கின்றேன்;மனமென்று சொல்லப்படுகின்ற விது யாதோரிடத்தும் நிலை பெறுவதின்றி யலையு மியல்புடையதாய்ச் சுரோத்திர முதலிய இந்தி ரியங்களைச் சப்த முதலிய விஷயங்களிற் செல்லுமாறு கலங்கச் செய் கின்றது; அதனால், இம்மனத்தை யொருகண நேரமாயினும் ஒன்றன் கண் ஸ்திரமாக நிறுத்துதல் முடியாதென்றும், இதனை யடக்குதல் காற்றை யடக்குவதற் கொப்பாமென்றும் யானறிகின்றேன்' என்றிங்ங னம் அர்ச்சுனன் கூற, அதனைக் கேட்ட பகவான், அவனை நோக்கி, அருச்சுனா! நீ வினவியதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.

அருச்சுனா! சுரோத்திரம் (காது)- துவக்கு (தோல்)-சட்சு (கண்)- சிங்ஙுவை (நாக்கு) - கிராணம் (மூக்கு) என ஐந்து வகையாயுள்ள ஞானேந்திரியங்களையும், மனம்-புத்தி-அகங்காரம்-சித்தமென நான்கு வகையாயுள்ள அந்தக்கரணத்தையும் தத்தம் வியாபாரங்களைச் செய் யாவா றடக்குவது எவர்க்கு மிகவரியதாம்; அவை யடக்குவதற் கரிய னவா யிருப்பினும், ஒருவன் தான் கடைத்தேறுமாறு சர்வப் பிரகாரத் தாலும் செய்யும் யோகாப்பியாசத்தாலும், தம்முள் ஒவ்வாதுள்ள ஐவகை ஞானேந்திரியங்கள் வாயிலாக வருகின்ற விஷய இன்பமனைத் தையும் சீ! இவை துன்ப சாதனமாமென் றாராய்ந்தறிந்து வெறுப்பதா

* அருச்சுனன் பகவானை நோக்கி, தேவரீர் சர்வ பூதங்களையும் சமமாகக் காண்பதுவே யோகமாமென்று கூறினீர்; என்மனம் ஓயாதலைதலால், யோகஞ் செய்வது எனக்கு முடியாதென்று யானுணர்கின்றேன்; மனம் எதனிடத்தும் நிலைபெறுவதின்றி இந்திரியங்களை கலங்கச்செய்து சுழன்றுவருதலின், இதனை யடக்குவது காற்றை யடக்குவதற் கொப்பாமென்றுமறிகின்றேனென்று கூறினா னென்க.

இதனால் மனத்தை யடக்குவத னருமை காட்டப்பட்ட தென்க.

னும், தன் வசமாக விருப்பவரை வருத்துவதில் மிகக் கொடியதாயுள்ள அந்தக்கரணமானது தனதேவலைச்செய்யு மிந்திரியங்களுடனே அடங்குவதாம். அந்தக்கரணத்தை இந்திரியங்களுடன், யோகாப்பியாசம், விஷய வின்பங்களை வெறுத்தலாகிய வைராக்கியமென்னு மிவற்றிற்கு வேறாய சாதானங்களா லடக்குவ தருமையாம்; இவ்விஷயத்தில் சந்தேகம் சிறிதுமில்லையாமென் றருச்சுனா! நீ அறியக்கடவாய். அதனால், பையப்பைய ஞானேந்திரிய பஞ்சகம், கன்மேந்திரிய பஞ்சகம், அந்தக்கரண சதுஷ்டயமென்னும் இந்தப் பதினான்கு கரணங்களையும் வைராக்கியத்தால் தமது வசமாகச் செய்தவர், அவற்றை யடக்குதலோடு யோகசித்தியையும் பெறுதற் குரியவராவர். *

* மனம் அடக்குதற்கரியதாய்ச் சஞ்சல சுபாவமுடையதா யிருத்தலின், அதனை அதனேவலாள்போ லுள்ள இந்திரியங்களுட னடக்குவது எவர்க்கு மரிதா யிருக்கின்றது; யோகாப்பியாசமும வைராக்கியமு முடையவர் அதனை இந்திரியங்களுட னடக்குதல் கூடும்; இந்திரியங்களையும் மனத்தையும் வைராக்கியத்தா லடக்க முடியாதவர்க்கு எவ்வாற்றானும் யோகம் சித்தியாது; அவற்றை வைராக்கியத்தா லடக்குகின்றவர் யோகாப்பியாசஞ் செய்தற்குரியவராய் அதனை முடிவுபெறச் செய்வாரென்று பகவான் அருச்சுனனுக்குக் கூறினாரென்க.

இங்குக்கூறிய வைராக்கியம்-பர வைராக்கியம் அபர வைராக்கியமென விருவகைத்தாம்; அவற்றுள், அபர வைராக்கியம் யதமானம, வியதிரேகம், ஏகேந்திரியம், வசீகாரமென நால்வகைத்தாம். (1) இவ்வுலகத்தில் கொள்ளத்தக்கது யாது? தள்ளத்தக்கது யாது? என அவற்றைச் சற்குருமூர்த்தி வாயிலாகவும் சாஸ்திர விசார வாயிலாகவுமுணர முயலுதல் யதமான வைராக்கியமாம்; (2)நமது சித்தத்தின்கணுள்ள தோஷங்களுள் இவ்வளவு தோஷம் நாம் மேற்கொண்டுள்ள விவேகத்தால் நிவிர்த்தியாயிற்று; இன்னு மிவ்வளவு தோஷம் நிவிர்த்தியாகாதிருக்கின்ற தெனச் சித்த தோஷங்களின் தன்மையை யாராய்ந்தறிவது வியதிரேக வைராக்கியமாம்; (3) சித்தத்தின்கண் ஆசை ஸ்தூலமாகவிருந்தும், விஷயங்கள் துக்கசாதனமா மென்றவற்றை யாராய்ந்தறிந்திருத்தலால், அவற்றை யடைய முயலாதிருத்தல் ஏகேந்திரிய வைராகியமாம்; (4) சித்தத்தின்கண் ஆசை ஸ்தூலமாகவிராது, வாசனை மாத்திரமாக அடங்கி யிருத்தல் வசீகார வைராக்கியமாம். வாசனை மாத்திரமாய்ச் சித்தத்தின்க ணடங்கியுள்ள ஆசையும் ஒழிவதே பர வைராக்கியமாம். இவற்றுள், வசீகார வைராக்கியம் யோகாப்பியாசஞ் செய்பவர்க்கு அத்தியாவசியகமாக விருத்தற்குரியதாம். இவ் வைராக்கிய மில்லாதவர்க்கு யோகசித்தி வாய்ப்பதில்லையாம். பர வைராக்கியம் ஆன்ம சாட்சாத்கார

அருச்சுனன் யோகப் பிரிஷ்டனுக்குண்டாகும் பயன்
யாதென் றையுற்று வினவுதல்.

பகவான் சுரோத்திர முதலிய பதினான்கு கரணங்களையும் தமது வசமாகச் செய்தவர்க்கு யோகசித்தி யுண்டாமென்று கூறக்கேட்ட அருச்சுனன் பகவானை நோக்கி, பகவானே! ஒருவன் தன் மரணகால மளவும் யோகாப்பியாசஞ் செய்வதிலேயே நிலைத்திருந்து, தான் மரண மாகுங் காலத்தில் யான் பிரஹ்மமென்னும் தத்துவ ஞானத்தை மறந்து மரணமடைவானாயின், அப்போதவன் சென்றடைவது நற்கதி யோ? துர்க்கதியோ? *

அருச்சுனன் தான் ஐயுற்றதன் காரணத்தை வெளிப்படையாகக் கூறல்.

பகவானே! யோகசித்தியான தத்துவ ஞானத்தை யடைதற் பொருட்டு, பரலோக சாதனமாய கருமத்தையும் உபாசனையையு மொழித்தவன் யோகாப்பியாசஞ் செய்வதற்கு முன்னிருந்த மோகமா னது விசாரக் குறைவால் மீண்டும் பெருகுதலால், தான் செய்யத் தொடங்கிய யோகத்தை முற்றுப்பெறச் செய்யாதிறந்தானாயின், கரு மோபாசனைகளின் பயனையும் யோகத்தின் பயனையு மடையாதொழிவ னன்றோ? கருமோபாசனைகளின் பயனும் யோகத்தின் பயனும் தன் னைவிட்டு நிற்க வுள்ள அவன் காற்றால் சிதறுண்ட மேகம்போல நாச மா யொழிவானோ? பகவானே! என் மனத்தின்கணுள்ள சந்தேக மிது வேயாம். இச்சந்தேகத்தை யொழிக்க வல்லவர் தேவரீரை யன்றி வேறு யாவரிருக்கின்றனர்? தேவரீரே யான் கடைத்தேற இச்சந்தே கத்தை யொழிக்கும் விதத்தை யுரைத்தருளல்வேண்டும். என்றனன் †

---

முடையவர்க்கன்றி மற்றவர்க்கு வாய்ப்பதில்லையாம். வசீகார வைராக்கியம் பர வைராக்கிய மென்னு மிரண்டனுள், முன்னது சம்பிரஞ்ஞாத சமாதிக்கு அந்த ரங்க சாதனமாம், அசம்பிரஞ்ஞாத சமாதிக்குப் பகிரங்க சாதனமாம்; பின்னது அசம்பிரஞ்ஞாத சமாதிக்கு அந்தரங்க சாதனமாமென்பதிங் குணர்தற்பாலதாம்.

* பகவானே! யோகாப்பியாசஞ் செய்பவன் மரணகாலத்தில் யான் பிரஹ்மமென்னும் தத்துவ ஞானத்தை யோகாப்பியாசக் குறைவால் மறந்திறப் பானாயின், அவனடையும் கதி யாது என்று பகவானை நோக்கி அருச்சுனன் வின வினனென்க.

† மோகம்-ஜகத் சத்தியமென்னும் விபரீத புத்தியும், சரீரமே ஆத்மாவென் னும் விபரீத புத்தியுமாம்.

யோகப் பிரஷ்டன் இகபரமிரண்டிலும் கெட்டொழிவதில்லை யெனல்.

யோகத்தின் றன்மையை யுள்ளவாறுணர்ந்துள்ள பகவான் அருச்சுனனை நோக்கி, அருச்சுனா! உன் சந்தேகம் நிவிர்த்தியாமாறு யான் கூறுவதை நீ கவனமாய்க் கேட்கக் கடவாயெனக் கூறத்தொடங்கி,

அருச்சுனா! விசாரிக்குமிடத்து எவ்வாற்றானும் தனக்கென் றொருருவடிவ மில்லாது மித்தையாயுள்ள உலகாசாரத்தை மேற்கொள்வ தில்லாத அறிவினையுடைய யோகப்பிரஷ்டர் எப்போதும் சத்தியமாயுள்ள பிரஹ்மத்தை யடையு மார்க்கத் தொழுகுபவரா யிருத்தலின், இகலோகத்திலும் பரலோகத்திலும் காற்றால் சிதறுண்ட மேகம் கெடுவதுபோலக் கெடுவதிலராவர்; இவ்விஷயத்தை நீ செம்மையாக அறியக்கடவாய்; இன்னும் அவரது தன்மையைக் கூறுகின்றேன், கேட்கக்கடவாய். ‡

(அருச்சுனா! நீ பழிபாவங்கட் கேதுவாய கருமங்களைச் செய்யாது, புகழ் புண்ணியங்களுக் கேதுவாய கருமங்களையே செய்யும்

யோகாப்பியாசஞ் செய்பவன் மோசத்தின் பெருக்கால் யோகசித்தி பெறா திறப்பானாயின், தான்விட்ட கரும வுபாசனைகளின் பயனையும், தான் மேற்கொண்ட யோகத்தின் பயனையும் பெறாமையால், உபயப் பிரஷ்டனாய்விடுகின்றான்; அதனாலவன் காற்றால் சிதறுண்ட மேகம் கெடுவதுபோலக் கெட்டொழிவனோ என்று பகவானை நோக்கி அருச்சுனன் வினவினனென்க.

காற்றால் சிதறுண்ட மேகம் தான் முன் கூடியிருந்த மேகத்தினின்றும் பிரிந்து வேறுமேகத்தையுமடையாது இடையே கெடுவது போல, யோகப்பிரஷ்டனும் முந்திய கருமோபாசனைகளி னின்றும் நீங்கி, பிந்திய ஞானமார்க்கத்தையு மடையாது இடையே கெடுவானோ வென்பது இங்கு வினாவாம். யோகப் பிரஷ்டன் - யோகத்தினின்றுந் தவறியவன்.

‡ அருச்சுனா! நீ யோகப் பிரஷ்டன் இவ்வுலகத்தில் அபகீர்த்தியையும் பரலோகத்தில் நரகத்தையுமடைதல் கூடுமென் றையுற்றிருக்கின்றனை போலும்! யோகநூல் கூறியவா றொழுகிவந்து, யோகத்தை முற்றுப்பெறச் செய்யாதிறந்தவன் பழிபாவங்கட் கேதுவாய கருமங்களைச் செய்யாதவனா யிருத்தலின், அவன் இகலோகத்தில் பழியின் பயனாய அபகீர்த்தியையும், பரலோகத்தில் பாவத்தின் பயனாய நரகத்தினையு மடையான்; இது நிச்சயமாமென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினரென்க.

யோகப் பிரஷ்டன் இகலோகத்திலும் பரலோகத்திலும் கேடடைவ திலனாயின், அவனடையும் பயன்தான் யாது? என்று வினாவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.)

அருச்சுனா! தான் செய்யுமாறு மேற்கொண்ட யோகம் முடிவு பெறாதிருக்க, மத்தியில் மரணமடைந்தவன், மக்கள் உபாசனையோடு அசுவமேத முதலிய யாகங்கள் பலவற்றைச் செய்து, அவற்றா லடைதற்குரியதாயுள்ள சோகமில்நாடு என்னும் பிரஹ்ம லோகத்தை யடைந்து, அவ்வுலகத்தில் பல வருஷகாலம் சிறிதாகவேனுந் துன் பந் தன்னைத் தொடரா திருக்க, இன்பத்தை யனுபவித்திருந்து, பின் தானிருத்தற்குரிய அக்காலம் கழிந்தபின், செல்வம்-குணம்-சுத்த முதலியவற்றாற் சிறந்த அரசரது வம்சத்திலாவது, வித்தை (கல்வி)-விநயம் (அடக்கம்)-விவேகம்(பகுத்தறிவு)-விராகம்(வைராக்கியம்) முத லியவற்றால்சிறந்து மக்களுக்குத் தர்மோபதேசஞ்செய்யும்யோகிகளது வம்சத்திலாவது பிறந்து, அப்பிறப்பில் தான் பெறுதற்குரிய வித்தை-விநயம்-விவேகம்-வைராக்கிய முதலியவற்றை யெல்லாம் குறைவில் லாதடைந்து, பின்னர்த் தான் முற்பிறப்பின் மரணகாலத்தில் மோகத் தின் பெருக்கத்தால் மறந்துவிட்ட யோகத்தை வருத்தமில்லாது அநாயாசமாகச் செய்வான். *

---

* யோகத்தை முற்றுப்பெறச் செய்யாதிறந்த யோகப்பிரஷ்டன் உபாசனை யோடு அசுவமேத முதலிய யாகங்களைச் செய்தவ ரடைதற்குரிய பிரஹ்மலோக த்தை அர்ச்சிராதி மார்க்கமாக வடைந்து, அங்கு அளவிறந்த காலமிருந்து, போகத் தை யனுபவித்து,பின் அஜாத சத்துரு-ஜனகன்முதலாயினார் போன்றுள்ள அரசர் குலத்திலாவது, யாஞ்ஞவல்கியர் வசிஷ்டர் முதலாயினோர் போன்றுள்ள யோகி கள் குலத்திலாவதுபிறந்து, வித்தை விநயம் விவேக முதலாயினவற்றையெல்லாம் சம்பூரணமாகப் பெற்று, பின் தான் மறந்துவிட்ட யோகத்தைச் செய்யத் தொடங் குவானென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரென்க. இதனால் யோகப்பிரஷ்ட னுக் குண்டாகும் இருமைப் பயனுங் குறிப்பிட்டவாறறிக.

விஷய விச்சையுடைய யோகப்பிரஷ்டன் அரசர் குலத்தில் பிறப்பான்; வைராக்கியமுடைய யோகப்பிரஷ்டன் யோகிகள் குலத்தில் பிறப்பானென்ப திங் குணர்தற்பாலதாம்.

சூரிய மண்டலத்தைப் பேதித்துக் கொண்டு பிரஹ்ம லோகத்திற்குப் போகும் மார்க்கம் அர்ச்சிராதி மார்க்கமாம்; இது தேவயான மார்க்கமென்றும் சொல்லப்படும்.

(அருச்சுனா ! நீ யோகிகள் குலத்திற் பிறந்தவனுக்கு யோகாப்பியாசஞ் செய்வதற்கு இடையூறு யாதுமின்மையின், அவன் தான் மறந்துவிட்ட யோகத்தை மீண்டுந் தொடங்கிச் செய்தல் கூடும்; அரசர் குலத்திற் பிறந்தவனுக்கு யோகாப்பியாசஞ் செய்வதற்கு இடையூறு பல விருத்தலின், அவன் தான் மறந்துவிட்ட யோகத்தை மீண்டுந் தொடங்கிச் செய்வது எவ்வாறுமென்று வினவுதல்கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்)

அருச்சுனா ! அரசர் குலத்திற்பிறந்த யோகப் பிரஷ்டன் யோகாப்பியாசத்தை மேற்கொண் டொழுகுங் குணமில்லாதவனாயிருப்பினும், அவன் முற்பிறப்பில் யோகாப்பியாசத்தால் சீவப் பிரஹ்ம ஐக்கிய ஞானம் தெளிவாக வுண்டாமென் றுணர்ந்து மேற்கொண்ட யோகாப்பியாசமானது முற்பிறப்பில் யோகாப்பியாசஞ் செய்யப் பழகிய பழக்கமுடைய அவ்யோகப் பிரஷ்டனை விலகுதலில்லாது, இப்பிறப்பிலவன் யோகாப்பியாசஞ் செய்யத் தொடங்குதற்கு முன்னரேதானே அவனை யோகாப்பியாசஞ்செய்ய முயல்விப்பதாம். *

யோகஞ்செய்தல் வேண்டுமென்று விரும்புகின்றவனுக்கும் நற்கதி யுண்டாமெனல்.

அருச்சுனா ! யோகத்தின்கணுள்ள விருப்பத்தைப் பிரயத்தன பூர்வகமாக வொழித்து, அந்த யோகத்தை யானப்பியாசஞ் செய்வேனென்று கருதுகின்ற அந்த யோகப்பிரஷ்டனும் முறை தவறாது கரு

* அரசர் குலத்திற் பிறந்த யோகப் பிரஷ்டன் அரசபோகத்தால் யோகாப்பியாசஞ் செய்ய முயலாதிருப்பானாயினும், அவன் முற்பிறப்பிற் செய்த யோகாப்பியாசமானது அவனை இப்பிறப்பில் யோகாப்பியாசஞ் செய்யுமாறு செய்விக்கின்றது; அதனால், அவன் தான் முற்பிறப்பிற் செய்யத் தொடங்கி முடிவுபெறச் செய்யாதுவிட்ட யோகத்தை முற்றுப்பெறச் செய்ய முயல்கின்றானென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரென்க.

யாதாவதொரு காரியத்தைச் செய்து வருகின்றவன் தான் உறங்கி விழித்தவிடத்து அக்காரியத்தையே செய்ய முயல்வதுபோல, யோகப்பிரஷ்டனும் முற்பிறப்பிற் செய்த யோகாப்பியாசத்தையே செய்யத் தொடங்குகின்றானென்பதிங் குணர்தற்பாலதாம்.

மம் பலவற்றைச் செய்து, தான் மேற்கொண்ட வேள்வியை முடித்தவ னடையுங் கதியினும் மேலான கதியை யடைவான். *

தான் மேற்கொண்ட யோகத்தைச்செய்து முடித்தவன் வீடுபேறுவானெனல்.

அருச்சுனா ! விஷய சுகத்தை விரும்பி இந்திரியங்கள் வாயிலாக விரிந்தோடும் தன் மனமானது ஒரு நிலையிலே நிற்கப் பெறாதவனாயினும், அம்மனத்தை அலைந்தோடும் மார்க்கத்தில்விடாது வைராக்கியத்தாலடக்கி யோகாப்பியாசஞ் செய்பவன் துன்பமயமான பல பிறப்புக்களை யெடுத்த பின்னாயினும், யோகசித்தியாகிய தத்துவஞானத்தை யடைந்து, அதனால் மோட்ச மடைகின்றான். †

யோகி புருஷன் மக்களுள் மிகச் சிறந்தவனாவனெனல்.

அருச்சுனா ! கிருச்சிரம் சாந்திராயண முதலாகவுள்ள தவமனைத்தையும் செய்திருப்பவனினும், சாஸ்திரமனைத்தையும் கற்றுணர்ந்தவ

* சர்வ துக்க நிவிர்த்தி - பரமானந்தப் பிராப்தி வடிவ மோட்சத்தை யடைதற்கு நேர்சாதனமாயுள்ள தத்துவ ஞானத்தைப் பெறுதற்பொருட்டு, யோகாப்பியாசஞ் செய்தல் வேண்டுமென்றதனைப் போக விருப்பத்தை யொழித்துக் கருதுகின்றவனும், கர்மிகளடையும் கதியினும் மேலான கதியை யடைவானென்றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரென்க.

இதனால் மோட்சத்திற்குக் கருமமும் ஞானமும் நேர்காரணமாமெனல் கூடாதென்பது பெறப்பட்டதென்க. கருமம் மோட்சத்திற்குத் தத்துவஞானத்தை முன்னிட்டுக் காரணமாயிருப்ப தன்றி நேரே காரணமா யிருப்ப தில்லையாமென்பதிங் குணர்தற்பாலதாம்.

யோகாப்பியாசஞ் செய்ய வேண்டுமென்று கருதுகின்றவனுக்கே கருமிகளடையுங் கதியினும் மேலான கதி கிடைக்குமாயின், அதனைச் செய்து முடிப்பவன் முத்தனாவனென்பது சொல்ல வேண்டுவ தில்லையா மென்க.

† யோகாப்பியாசஞ் செய்பவன் மிகு முயற்சியோடு மனத்தைத் தன் வசமாகச் செய்தற்குரியவ னல்லனா யிருப்பினும் அதனை வைராக்கியத்தா லடக்கி யோகாப்பியாசஞ் செய்து வருவானாயின், அவன் பல பிறப்புக்களுக்குப் பின்னாவது தான் மேற்கொண்ட யோகத்தை முடிவுபெறச் செய்து அது வாயிலாகவுண்டாகும் தத்துவஞானத்தால் வீடடைகின்றானென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரென்க.

னிலும், தமது பயனைத் தந்தாலன்றி யொழியாத வேள்வி முதலிய கருமமனைத்தையுஞ் செய்தவனிலும், தத்துவத்தையறியும் வன்மை வாய்ந்த யோகிபுருஷன் சிறந்தவனாவ னென்பது எனது கொள்கை யாம். ஆதலால், யோகப் பிரஷ்டனாகிய நீ யான்கூறிய இந்த யோகத்தை மிக வருத்தமுற்றாவது மேற்கொண் டப்பியாசஞ் செய் வாயாக. *

யோகிகளுள் மேலான யோகி யிவனெனல்.

ஞானவடிவமா யிருத்தலால் ஆகாய முதலியனபோல அருவ மென்றாவது கடம் பட முதலியனபோல உருவமென்றாவது எவரும் அறிதற்கரிய பகவான் அருச்சுனனை நோக்கி, அருச்சுனா! அறம் பாவமென் றிரண்டு வகையாயுள்ள கருமங்களை யொழிக்கும் யோகி கள் யாவரினும் தன் மனத்தையும் அன்பையும் அடைவதற்கரிய என் னிடத்துத் தொடர்ச்சியாக வைக்கும் ஞானயோகியொருவனே யான் விரும்புவதற்குரியவனா யிருக்கின்றான். அவன் அந்த யோகிகள் யாவரினும் சிறந்தவனென்பது எனது கொள்கையாமென்றுகூறினார். ‡

சோக அத்தியாய முதல் யோக அத்தியாய மீறாயுள்ள இது காறும் தத்துவமசி மகா வாக்கியத்தின் துவம்பதார்த்த நிரூபணஞ் செய்யப்பட்டதென்க.

6—யோக அத்தியாயம் முற்றிற்று.

* தத்துவத்தை யறிந்த யோகி புருஷன் தவஞ்செய்வோரினும், சாஸ் திர ஞானிகளினும், கருமஞ்செய்வோரினும் மேலானவனாவ னென்பது எனது கொள்கையாம்; அதனால், நீ யான் கூறிய யோகத்தைச் செய்து, தவஞ்செய்வோர் முதலாயினோரினும் சிறந்தவனாகக் கடவாயென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினா ரென்க.

‡ சர்வேசுவரனாயுள்ள என்னைச் சகுணமாகவாவது நிர்க்குணமாகவாவது நிரந் தரம் சிரத்தையோடு சிந்திப்பவன் யோகிகளுள் மிகுசிரேட்டவனாவன்; அருச்சுனா! நீயு மங்ஙனஞ் சிந்திப்பாயாயின், யோகிகளுள் சிரேட்டனாவையென் றருச்சுன னுக்குப் பகவான் கூறினாரென்க.

## 7-வது மாயா ரூப அத்தியாயம்.

அருச்சுனனுக்குத் துவம்பதார்த்த (ஆன்ம) சொரூபத்தைத் திருவாய் மலர்ந்தருளிய (வைய முண்டுமறை நீர்மையுண் டிடையர் மாதருண்டி ட மலர்ந்திடும், செய்ய தண்பவள வாயையுடைய திருமாது கேள்வனாகிய) பகவான், அவனுக்குத் தத்பதார்த்த (பிரஹ்ம) சொரூபத்தைத் தெரிவித்தற்பொருட்டு, அவனை நோக்கி, அருச்சுனா! நீ தேவரீர் 'தன் மனத்தையும் அன்பையும் அடைவதற்கரிய என்னிடத்துத் தொடர்ச்சியாகவைக்கும் ஞானயோகி யொருவனே யான் விரும்புதற்குரியவனாக விருக்கின்றான்' என்றருளிச் செய்தீர்; பகவானாகிய உம்முடைய சொரூபம் எவ்வாறு சேவித்தற்குரியதாம்; உம்முடைய சொரூபத்தில் மனம் எவ்வாறு நிலைபெறுவதாமென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.

அருச்சுனா! தான் கடைத்தேறுதற் பொருட்டு, பேரன்போடு பரமேசுவரனான என்னையே யடைதற்குச் சாதனமாயுள்ள யோகாப்பியாசத்தையே செய்யும் யோகி புருஷன் சந்தேகமில்லாமலென்னை யெந்தப் பிரகாரம் அறிவானோ அந்தப் பிரகாரத்தைக் கூறுகின்றேன், அதனை நீயு முணரக் கடவாய்.

(அருச்சுனா! நீ பரமேசுவரனானவென்னை யறியுமறிவு சுவர்க்கமிருக்கின்றதென் றதனை யறியு மறிவுபோலப் பரோட்ச ஞானமேயாமென்று கருதுதல்கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

அருச்சுனா! தத்துவஞானத்தால் நிவிர்த்தியாதற்குரிய மாயையால் கலங்குதலில்லாத மனத்தினிடத்துச் சச்சிதானந்த நித்திய பரிபூரணமாயுள்ள எனதுண்மை வடிவத்தைச் சற்குருவினுபதேச வாயிலாகப் பொருந்துமாறு செவ்வையாக அறிந்தவர் இம்மாயாப் பிரபஞ்சத்தின்கண் அறியாத பொருள் யாதுமில்லையாம்; யான் என்னை யறிபவரது சொரூபமாயிருப்பினும், மின்னலைப் போலத் தோன்றியழியுமியல்புடைய மக்கள் பலருள்ளே என தனுக்கிரகத்திற்குப் பாத்திரமாயுள்ள ஒருவனே சற்குருவினிடத்து என்னை யாராய்ந்துணரவேண்டுமென்னு முயற்சியுடையவனாயிருக்கின்றான்; என்னை யாராய்ந்துணரவேண்டுமென்னு முயற்சியுள்ள அதிகாரி புருஷர் பலருள்ளே ஒரு

வனே என்னை யுள்ளவாறுணர்ந்து, என் வடிவமாக விளங்குதலால் கிருதார்த்தனாகின்றான். *

(அருச்சுனா! எனதுண்மை வடிவத்தை யறிந்தவர் இம்மாயாப் பிரபஞ்சத்தின்கண் அறியாத பொருள் யாதுமில்லையாம் என்று யான் கூறியதை விளக்கமாகக் கூறுகின்றேன், நீ கேட்கக் கடவாய்.)

கைவிடா வேலையுடைய அருச்சுனா! பிருதிவி-அப்பு-தேயு-வாயு-ஆகாயம்-மனம்-புத்தி, இவற்றின் கூட்டமாகிய தேகேந்திரிய முதலியவற்றில் யானெனும் அபிமானத்தைச் செய்யும் அகங்காரமென்னு மிவ் வெண்வகைப் பேதமாயிருப்பதன்றி, காரிய வடிவமாயுள்ள இவ் வெண்வகைப் பேதப் பொருள்களினும் மேலானதாய், உலகத்தில் சர்வ வியவகாரத்தையும் எனதென்று கொண்டு முன்வந்து, உடம்பி னிடத்து நிலைபெற்றுள்ள உயிருமாகிப் பரமேசுவரனான எனது மாயை யிருக்கின்றது. †

* மாயாப் பிரபஞ்சம்சத்தியமென்னும் விபரீத புத்தியால் கலங்குதலில்லாத சித்தமுடையவராய்ச் சச்சிதானந்த நித்திய பரிபூரணமாயுள்ள எனதுண்மை வடிவத்தை ஐயந்திரிபின்றித் தமது ஆத்ம சொரூபமாக வறிபவர், சாவப் பிரபஞ்ச மும் என்னிடத்துக் கற்பிதமாயிருத்தலின், என்னை யறிந்தபோது சர்வத்தையு மறிந்தவரே யாகின்றனர்; யான் என்னை யறிபவரது சொரூபமா யிருப்பினும், மக்களுள் எனதனுக்கிரக முடைய ஒருவனே என்னை யாராய்ந்தறிதற்குரிய அதி காரியாகின்றான்; அங்ஙனமுள்ள அதிகாரிகளுள் ஒருவனே என்னை யுள்ளவா றுணர்ந்து அதனால் யான் கர்த்தா-போக்தா வென்னும் பிராந்தியகன்று, கிரு தார்த்தனாகின்றானென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரென்க. இதனால் ஈசுவரானுக்கிரகமில்லாதவர் பிரஹ்ம விசாரத்திற் கதிகாரியாகா திருக்கின்ற னர்; அவருள்ளும் மிகச் சிலரே பிரஹ்ம விசாரத்தை முடிவுபெறச்செய்து, கிருதார்த்தராகின்றன ரென்பது பெறப்பட்டவாறறிக. கிருதார்த்தராதல்-செய் வதனைத்தையும் செய்து முடித்தவராதல்.

† பிரகிருதி-அபரப் பிரகிருதி பரப்பிரகிருதியென விருவகைத்தாம்; இவற் றுள், அபரப்பிரகிருதி: பிருதிவி-அப்பு-தேயு-வாயு-ஆகாயம்-மனம்-புத்தி-அகங் காரமென எண்வகைப் பேதமுடையதாம; பரப்பிரகிருதி—மலின சத்துவகுண மாயையென்னும் அவித்தையில் எனது பிரதிபிம்பமாயுள்ள சீவனும். இச்சீவனே உலக வியவகாரத்தைச் செய்தற்குரியவனா யிருக்கின்றான்; என்னிடத்துக் கற் பிதமாயுள்ள மாயை அபரப்பிரகிருதியாயும் பரப்பிரகிருதியாயு மிருக்கின்றதென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரென்க.

இப்பூதங்களனைத்தும் அவ்வபரப் பிரகிருதி - பரப்பிருகிருதிகளின் காரியமாம்; எனக் கன்னியமாக ஒரு பொருளுமின்றெனல்.

அருச்சுனா! நீ மண்ணுலக முதலியவற்றில் இயங்காப் பொருளென்னும் அசேதனம், இயங்கும் பொருளென்னும சேதனமனைத்தும் அபராப்பிரகிருதி - பரப்பிரகிருதி யென்னுமிவ் விருவகைப் பிரகிருதியாலும் *தோன்றும் காரியங்களாமென் றவற்றை யுன்னாராய்ச்சியா லாராய்ந் துணரக் கடவாயாக. உலகந் தனக்குக் காரணமாகப் பொருந்தியிருப்பது பரஸ்பரம் தம்முள் விபரீத சுபாவமுடைய அவ்விருவகைப் பிரகிருதிகளேயேயாம்; அக்காரணத்தால் உலகத்தினாசத்திற்கும் உற்பத்திக்கும் என்னிடத்துக் கற்பிதமாயுள்ள மாயையோடுகூடி ஈசுவரனென்னும் பெயரைப் பெற்றுள்ள நானே அப்பிரகிருதிகளின் வாயிலாகக் காரணமல்லாமல், வேறு காரணம் ஆராய்ந்தறியுமிடத் தறிவதற் கில்லையாம். மாயை முதலிய எந்தப் பொருளும் அம்மாயைக் கதிஷ்டானமாயுள்ள என்னிலும் வேறாக வுண்மையி லில்லையாம். ‡

---

*இங்குப் பிருதிவி-அப்பு-தேயு-வாயு-ஆகாயமென்று கூறிய இவ்வைந்தும் சூக்கும பூதங்களாம்; ஆங்கு மனமென்பதன்கண் சித்தம அந்தர்க்கதமாம். இங்குக் கூறிய அபரப் பிரகிருதி பரப் பிரகிருதி யென்னுமிரண்டனுள் முன்னது க்ஷேத்திர வடிவப் பிரகிருதி யென்றும, பின்னது க்ஷேத்திரஞ்ஞ வடிவப் பிருகிருதி யென்றும் சொல்லப்படும்.

‡ உலக வியவகாரத்திற்கு அபராப் பிரகிருதியும் சீவ வியவகாரத்திற்குப் பராப்பிரகிருதியும் காரணமா யிருக்கின்றன; உலகத்தின் நாசத்திற்கும் உற்பத்திக்கும நானே காரணமா யிருக்கின்றேன்; என்னைத் தவிர அவற்றிற்கு வேறு காரணம நிச்சயமாகவில்லை, யானே எல்லாப் பொருளுமாய் மாயையின் வாயிலாக விருக்கின்றேன்; எனக்கன்னியமாக ஒரு பொருளுமுண்மையிலில்லையாமென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரென்க.

சொப்பனங் காண்பவனுக்கு அவ்வுலகு உண்மையில் வேறாயிராமைபோல, பகவானுக்கு இவ்வுலகு உண்மையில் வேறாயில்லையாம்; சொப்பன வுலகத்திற்கு அதனைக் காண்பவன் முதற்காரணமாயும் நிமித்த காரணமாயு மிருத்தல்போல இவ்வுலகிற்குப் பகவான் முதற்காரணமாயும் நிமித்த காரணமாயு மிருக்கின்றா ரென்பதிங் குணர்தற்பாலதாம்.

உலகத்தின் நாசத்திற்கும் உற்பத்திக்கும் பகவான் காரணமா யிருக்கின்றமையின், அதன் ஸ்திதிக்கும் அவரே காரணமாயிருக்கின்றா ரென்பதுமிங் குணர்தற்பாலதாம். இதனால் உலகத்தின் தோற்றம, நிலை, கேடென்னு மூன்றற்கும பகவானே காரணமா யிருக்கின்றா ரென்பது பெறப்பட்டதென்க.

### நான் உலகத்தின் நாசத்திற்கும் உற்பத்திக்கும் எனது மாயாசத்தி வாயிலாகக் காரணமா யிருப்பதன்றி, அதன் ஸ்திதிக்கும் காரணமா யிருக்கின்றேனென்று பகவான் கூறல்.

அருச்சுனா! உலகமிருத்தற்கும் விளங்குதற்கும் காரண வடிவமாயுள்ள யானேயல்லாமல், உலகத்தில் வியவகார நோக்கத்தால் எனக்கு வேறாகத் தோன்றும் ஆகாய முதலிய பூதங்களைத் தாங்க என்னினும் வேறாயிருப்பவரில்லை. தேவரீர் ஆகாய முதலிய பூதங்களைத் தாங்குவது எங்ஙனமாமென்று நீ வினவுவாயாயின், அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய். யான் ஆகாய முதலிய பூதங்களைத் தாங்குவது முத்து - பவள முதலிய பல இரத்தினங்களில் நுழைந்து, அவற்றைத் தாங்குகின்ற கோவையாயுள்ள ஒரு நூலின் தன்மை போலவதாம். தம்முள் பேதமாயுள்ள ஆகாய முதலிய பொருள்தோறும் யானுழைந்து, அவற்றைத் தாங்கும் தன்மையை யினி விரிவாயக் கூறுவேன், கேட்கக் கடவாய். *

(அருச்சுனா! நீ நூலிடத்து மணிகள் கோக்கப்பட்டிருத்தல் போல, தேவரீரிடத்துப் பூதங்கள் கோக்கப்பட்டிருக்கின்றனவென்பது எங்ஙனமாமென்று வினவுதல் கூடும், அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

அருச்சுனா! ஆகாயத்தி லிடைவிடா தியங்குகின்ற சூரிய சந்திரரிடத்து விளங்குகின்ற ஒளியும் நானே, நான்கு வேதங்களுள்ளும்

* ஒவ்வொரு பதார்த்தமும் இருத்தற்கும் விளங்குதற்கும் யானே காரணமா யிருக்கின்றேன், எனக்கன்னியமாக அதற்குக் காரணமா யிருப்பவர் எவருமில்லை, நூலொன்றே முத்துப் பவள முதலிய பல இரத்தினங்களில் நுழைந்து அவற்றைத் தாங்குவதுபோல, யான் சர்வ பூதங்களினும் நுழைந்து அஃதாவது வியாபித்து, அவற்றைத் தாங்குகின்றேனென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினரென்க

கடம் இருப்பதற்கும் விளங்குவதற்கும் மண் காரணமாயிருத்தல்போல உலகம் இருப்பதற்கும் விளங்குவதற்கும் பகவான் காரணமாயிருக்கின்றார், மணி மாலையில் ஒவ்வொரு மணியிலும் நூல் நுழைந்து அதனைத் தாங்குவது போல, உலகத்தில் ஒவ்வொரு பூதத்திலும் பகவான் வியாபித்து அதனைத் தாங்குகின்றாரென்பது இங்குணர்தற்பாலதாம்

அழகாக விளங்குகின்ற அரிதற்கரிய ஓம் என்னும் பிரணவமும் நானே; சர்வப் புருடரிடத்துமுள்ள புருஷத்தன்மையும் நானே; அப்புவிலுள்ள சுவையும் நானே; பிருதிவியிலுள்ள வாசனையும் நானே; அக்கினியிலுள்ள சூடும் நானே; ஆகாயத்துள்ள ஓசையும் நானே; வாயுவிலுள்ள பரிசமும் நானே. *

அருச்சுனா! கலவி கேள்வி ஒழுக்கங்களால் மேம்பட்ட அறிவுடையாரிடத்துள்ள புத்தியும் நானே; தவஞ் செய்வாரிடத்துள்ள மேலாய தவமும் நானே; நற்குண நற்செய்கை யுடையாரிடத்துள்ள சிறந்த புகழும் நானே; மிகுதியாகத் தோன்றும் பலமுடையாரிடத்துள்ள காமமும் ராகமுமில்லாத பலமும் நானே; சராசர வடிவமாகவுள்ள சர்வப் பிராணிகளிடத்தும் ஆயுள் வடிவமாக நிலைத்துள்ள சீவனமும் நானே. †

* மணிமாலையில் நூல் சேர்ந்து அதனைத் தாங்குவதுபோல, சூரிய சந்திரரிடத்து ஒளிவடிவமாகவும், வேதத்தினிடத்துப் பிரணவ வடிவமாகவும், ஆகாயத்தினிடத்து ஒலி வடிவமாகவும், வாயுவினிடத்துப் பரிசவடிவமாகவும், தேயுவினிடத்து ரூப வடிவமாகவும், அப்புவினிடத்து ரச வடிவமாகவும், பிருதிவியினிடத்துக் கந்த வடிவமாகவும் புருஷரிடத்துப் புருஷத் தன்மை வடிவமாகவும் நான் வியாபித்து, அவற்றைத் தாங்குகின்றேனென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரென்க.

யான் ஒளி வடிவமாகச் சூரிய சந்திரராகவும், பிரணவ வடிவமாக வேதமாகவும், சப்த ஸ்பரிச ரூப ரச கந்த வடிவமாக ஆகாய முதலிய பூதமாகவும், புருஷத் தன்மை வடிவமாகப் புருஷராகவு மிருக்கின்றேன்; அதனால், என்னைத் தவிர அவற்றிற்கு வேறு பொருளில்லை யென்று பகவா னருளிச்செய்தாரென்பது இங்குணாதற்பாலதாம்.

† நான் அறிவுடையாரிடத்துப் புத்தி வடிவமாகவும், தவஞ் செய்வாரிடத்துத் தவ வடிவமாகவும், நற்குண நற்செய்கை யுடையாரிடத்துப் புகழ் வடிவமாகவும், பலமுடையாரிடத்துப் பல வடிவமாகவும், சர்வப் பிராணிகளிடத்தும் சீவன வடிவமாகவு மிருக்கின்றேனென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரென்க.

இங்குப் புத்தி யென்றது நித்தியா நித்தியவஸ்து விவேகத்தை. தவம்-பாஹியத் தவம் ஆந்தாத் தவமென் றிருவகைத்தாம்; பாஹியத்தவம்-சுரோத்திர முதலிய இந்திரியங்களை யடக்குதலாம்; ஆந்தாத்தவம்—மனத்தை யடக்குதலாம். சத்துருக்களை யடக்குதல், இரப்போர்க் கில்லையென்று ஈதல் முதலியவற்றால் வரும்

பகவான் இவ்வுலகம் முழுதும் என்னிடத்திருக்கின்றதன்றி யானதனிடத்திலில்லை யென்ல.

விவேக மிக்க அருச்சுனா! நீ சத்துவம் இராசதம் தாமதமென்னும் முக்குண சுபாவ முடையனவாய்த் தோன்றியிருக்கின்ற பொருள் முழுதும் தோன்றுவதும் பரமேசுவரனான என்னிடத்தேயாம், அவையிருப்பதும் என்னைப்பற்றியேயாமென் றுணர்க்கடவாய், அப்பொருளிடத்துப் பரமேசுவரனாகிய யானுண்டாவதில்லை, யான் அப்பொருள்களுக்குச் சாட்சியாக விருக்கின்றேனல்லாமல், அப்பொருள்களை யாதாரமாகக் கொண்டு ஆசேதப வடிவமாக விருப்பதில்லை *

---

கீர்த்தி புகழாம். இஃதெனக்கு வேண்டுமென்னும் விருப்பம் காமமாம். என்னிடத்துள்ள இது கேட்டையாதிருத்தல் வேண்டுமென்னும் விருப்பம் ராகமாம்

* முக்குண சுபாவமாயுள்ள பொருளனைத்தும் என்னிடத்தே தோன்றியிருக்கின்றனவல்லாமல், யான் அவற்றின்கண் தோன்றியிருப்பதில்லை அவற்றிற்குச் சாட்சியாக விருக்கின்றேனென்ன றருச்சுனனுக்குப் பகவான் கூறினாரெனக்

மண்ணிற்றோன்றிய கடத்தில் அம்மண் தனக்காதாரமாயிராமைபோல பகவானிடத்திற் றோன்றிய வுலகத்தில் பகவான் தனக்காதாரமாக விருப்பதில்லையா மென்பதிங் குணர்த்தற்பாலதாம்

மனவடக்கமென்னும் சாந்தி—இந்திரிய வடக்கமென்னும் தாந்தி முதலியன சத்துவகுண சுபாவமாம் களிப்பு காவ முதலியன இராசதகுண சுபாவமாம் சோகம் மோகம் முதலியன தாமதகுண சுபாவமாம் பிராணிகள் தத்தம் கருமவசத்தால் சத்துவகுண சுபாவமுடையனவாகவும் இராசதகுண சுபாவமுடையனவாகவும் தாமதகுண சுபாவமுடையனவாகவும் தோன்றுகின்றனவென்பதிங் குணர்த்தற்பாலதாம்

(1) சத்துவகுண சுபாவமுடைய உயர்திணைப் பொருள்கள் தேவர் ரிஷிகள் பிராமணர் முதலியோராவரென்றும் சத்துவகுண சுபாவமுடைய அஃறிணைப் பொருள்கள் சாகசரை பால் முதலியனவாமென்றும் இராசதகுண சுபாவமுடைய உயர்திணைப் பொருள்கள் கந்தருவர் பட்சர் க்ஷத்திரியர் முதலியோராவரென்றும், இராசதகுண சுபாவமுடைய அஃறிணைப் பொருள்கள் மிளகாய்-சுக்கு முதலியனவா மென்றும், தாமதகுண சுபாவமுடைய உயர்திணைப் பொருள்கள் ராட்சதர் குறவர் வில்லியர் முதலியோராவரென்றும் தாமதகுண சுபாவமுடைய அஃறிணைப் பொருள்கள் வெள்ளைப்பூண்டு வெங்காயம் முதலியனவாமென்று மிங்குணர்த்தற்பாலனவாம்

(அருச்சுனா! சர்வ காரணராயுள்ள தேவரீரை உலகத்தா ரேககாரணத்தா லறியாதிருக்கின்றனரென்று வினவுதல் கூடும், அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்)

விளங்குகின்ற வேலையுடைய அருச்சுனா! இருளைப்போல மயக்கத் தக்க குணங்களென்றே யானுனக்கு முன்னர் வகுத்துக்கூறிய சத்துவம் - இராசதம் - தாமதமென்னு மிம்மூன்று குணங்களாலும் மயக்கப்பட்டு இஃதழிவது இஃதழியாதென்னும் விவேகக்கண் கெட்டு, உடம்போடுகூடி வசிக்கின்ற இவ்வுயிரனைத்தும் அம்முக்குணங்களைப் புறங்கடந்து யாதொரு விகாரமுமின்றிச் சொப்பிரகாசமாயுள்ள என்னை யறிதற் குரியனவாமோ? ஆகாவாம். *

(அருச்சுனா! நீ அநாதிசித்தமான மாயையின் சத்துவ முதலிய குணங்களால் மயக்கப்பட்டுள்ள உயிர்கள் சுதந்தரமற் றிருத்தலின், அவர்களுக்கு அம்முக்குண வடிவ மாயையை நீக்கும் சாமர்த்திய முண்டாகவில்லையா மென்று வினவுதல் கூடும், அதற்கு விடை கூறுகின்றேன் கேட்கக் கடவாய்)

வேலையுடைய அருச்சுனா! சீவர்கள் சர்வ காரணனாயுள்ள என்னையே யெப்போதும் மெய்யன்போடு தியானிக்கின்ற மனமில்லாதவரா யிருப்பாரா யின், இத்தன்மையினவாய சத்துவ முதலிய குணங்களின் வடிவ முடைத்தாய் யாவராலும் செய்யப்பட்ட தல்லாததா யுள்ள எனது மாயையினால் மயக்கப்பட்டிருந்தொழிந்து, இச்சம சாவு காலத்தில் பிழைப்பது அவர்களுள் எவர்க்கும் அரியதாம். †

* சீவர்கள் முக்குணங்களால் மயக்கப்பட்டு, இது நித்தியம் இஃதநித்திய மென்னும் விவேகக்கண்ணை யிழந்து தேகமே ஆத்மா - போகமே மோட்ச மென்றவற்றைக் கருதியிருத்தலின், குணாதீதனாய் யாதொரு விகாரமுமின்றிச் சொப்பிரகாசமாயுள்ள என்னை யறியாதிருக்கின்றனர். பரமேசுவரனாகிய யான் அச்சீவர்களின் சொரூபமாயிருந்தும் அவர்கள் என்னை யறியாமைக்குக் காரணம் முக்குணங்களால் மயக்கப்பட்டிருத்தலேயாமென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினரெனக்.

† சர்வ காரணனாயுள்ள வென்னையே யெப்போதும் மெய்யன்போடு தியானித்து, அதனால் என்னை யறிந்து என் வடிவமாக விளங்குகின்றவர்களன்றி மற்றவர்க்கு முக்குண வடிவமாய் அநாதியாய் என்னிடத்துக் கயிற்றின்கண் அரவு போலக் கற்பிதமாயுள்ள மாயையினை யொழிப்பது எவ்வாற்றானும் முடியாதென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினரெனக்.

(அருச்சுனு! நீ தேவரீரைத் தியானஞ் செய்வது வாயிலாக மாயை நிவிர்த்தியாமாயின், சர்வ அநர்த்தத்திற்குங் காரணமாயுள்ள அதனை நீக்குதற்பொருட்டு, யாவருமேன் உம்மை யடைக்கலமாக அடையவில்லை யென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

அருச்சுனு! சுபாசுப கருமங்களாலே சரீர இந்திரிய முதலியன வாகப் பரிணுமத்தை யடைந்து வருகின்ற இம்மாயையினுலே தமது மனம் தெளிவென்பதின்றிச் சூனியமாக, தக்க தின்னது—தகாத தின்னதென் றுணரு முணர்வுகெட்டு, இவ்வுலகத்தில் ஆசுரபாவத் தில் நிற்பவரும், தமது பயனுய துன்பங்களைத் தந்தாலன்றி நீங் குவதில்லாத பாவ கருமங்களையே தமக்குத் தொழிலாகக் கொண்டு செய்கின்றவரும் ஆகிய நராதமரென்னும் கீழ்மக்கள் பரமேசுவரனை என்னைத் தியானஞ் செய்வதிலராவர்; என்னைத் தியானஞ் செய்வாரும் சிலருளர்; அவரைக் கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.

இருள் வீட்டை யாசிரயித்து நின்று அதனையே மறைப்பதுபோல, மாயை தெய்வத்தை யாசிரயித்து நின்று அதனையே மறைத்தலின், அது தெய் வீகமாயை யென்று கூறப்படுகின்றதென்க.

எப்போதும் மெய்யன்போடு தியானித்தலாவது உறக்கம் வருமளவும் அல் லது மரணம் வருமளவும் அகம்பிரஹ்மாஸ்மி யென்று பாவனை செய்தலாம்; இப்பாவனையின் பயன் தன்னை அஃதாவது சரீரத்திரய விலட்சணமாய் அவஸ் தாத்திரய சாட்சியாயுள்ள ஆத்மாவைப் பிரஹ்ம வடிவமாக வுணர்தலாம்; இதன் பயன் மாயை நீங்குதலாம்; இதன் பயன் பிறவி நீங்குதலாம்.

சர்வ காரணமாயுள்ள பிரஹ்மத்தைத் தமது நிஜவடிவ ஆத்மாவாகத் தியானிப்பவர், அதனுல் பிரஹ்மத்தைத் தமது நிஜவடிவ ஆத்மாவாக வுணர் ந்து, அதனுல் மாயை நீங்கி, மயக்கமற் றிருப்பரென்ப திங்குணர்தற்பாலதாம்.

* ஆசுரபாவ முடையவராயும், தீவினைகளையே செய்து இடம்ப முதலிய தீக்குணமுடையவராயு முள்ள நராதமரென்னும் கீழ்மக்கள் மாயையால் மயக்கப் பட் டிருத்தலினின்றும் நீங்கப் பிரயத்தனஞ் செய்யாதிருத்தலின், அவர்கள் என் னைத் தியானவாயிலாக அடைய முயலாதிருக்கின்றனரென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினுரென்க.

ஆசுரபாவம் - தேகமே யாத்மா, போகமே மோட்சமென்று கருதி யிருத்த லாம்,

(பகவான ஆசுரபாவ மிலலாதவா தீவினை செயவது, இடமப முதலிய தீககுணஙகளை மேறகொளவ தெனபவறறினகண தம கருததினைச செலுககாது, தககது இனனது, தகாதது இனனதென றுணருமுணாவுடையவராய, தமது புணணிய கருமததின தாரதமமியததிறகேறறவாறு பரமேசுவரனாய எனனை நானகு திறததினராக விருநது தியானஞ செயகினறன ரெனல)

அருசசுனா! ஐசுவரியமடைய விருமபுகினறவராய ஆததாாததிகளும, துனபமடைநதவராய ஆாததரும, ஜனன மரண வடிவததுககததைக கெடுததறபொருடடுப பரமேசுவரனான வெனனைத தியானஞ செயவது வாயிலாகத தததுவஞானததை யடைய விருமபுகினறவராய சிஞஞாசுககளும, 'நலலது' எனனும எனனுடைய வாஸதவ சொருபததை யறிநத ஞானிகளுமாகிய இநநாலவரே தமதாறறலுக கேறறவாறு பரமேசுவரனாகிய வெனனைத தியானஞ செயயுந தவமுடையோராவா. ‡

---

‡ செலவததைத விருமபுகினறவா, துனபததை யடைநதவா, ஞானததை யடைய விருமபுகினறவா, ஞானததை யடைநதவரெனனு மிநநாலவரே எனனைத தியானிததற குரியவரா யிருககினறனரென றருசசுனனுககுப பகவான கூறினரெனக

மனைவி, மககள, மாடு முதலிய போக சாதனஙகள ஆாததமாம, அவறறை விருமபுமவா ஆாததாாததிகளாவா ஆாததததை விருமபிப பகவானைத தியானஞசெயதவா துருவன, சுககிரீவன, விபீஷணன முதலியோராவா பாமபு புலி, பிணி முதலியவறறால வரும துனபம ஆாததியாம, அதன வசமானவா ஆாததராவா தமககு வநத ஆபததை நீககுதறபொருடடுப பகவானைத தியானஞசெயதவா துரோபதை, கஜேநதிரன முதலியோராவா எபபோதும ஆதமஞானததை யடைய விருமபுகினறவா சிஞஞாசுககளாவா, அதனை யடையப பகவானைத தியானஞ செயதவா ஜனகா, உததவா முதலியோராவா சாவ பரிபூரண அதவிதீய பரமாதமாவை நானெனறுளளவா றுணரு முணாவு ஞானமாம, அதனைப பெறறவா ஞானிகளாவா, அவா தமது பரமாாதத சொரூபததை மறவா திருததலே இஙகுப பகவததியானமாம, அவா சுகா - வாமதேவா முதலியோராவா இநநாலவருள ஞானிய ரொழிநதவா சகாம புருஷராவா, ஞானியா நிஷகாம புருஷராவா கமசன, சிசுபாலன முதலியோா பயததாலும துவேஷததாலும பகவானையே தியானஞ செயதிருநதாராகலின, அவரும ஒரு வகைப பததாாவரெனப த னாக

(அருசசுனு! நீ தேவரீாககு ஆாததாாததி முதலிய பததா நாலவருள யாவா சிரேஷ்ட ராவரெனறு வினவுதல கூடும; அதறகு விடை கூறுகின்றேன், கேட்கக கடவாய்.)

நறகுண நறம்செயலகைகளையுடைய அருசசுனு!
ஆர்ததன்-சிஞ்ஞாசு-ஞானியென்னு மிநநால்வருள ஞானி பரபபிரஹ்ம சொரூபமாயுளள எனனேடு சிதாநநத சொரூபமாகிய தனனை வேற்றுமையாகக கருதாமல ஒற றுமையாகச கருதுதலின, அவனே சிரேட்டனுவன்; அநத ஞானி எனது சொரூபமாக விருததலின், எனககு அத்தியந்தம பிரியனுவன்; யான அவனது சொரூபமா யிருததலின, அவனுககு நானும அததியநதம பிரியனுவன. *

(அருச்சுனு! நீ தேவரீாக்கு ஆாத்தாாத்தி-ஆாத்தன்-சிஞ்ஞாசு என்னும மற்ற மூவரும் பிரியாலலர் போலுமென்று வினவுதல்கூடும; அதற்கு விடை கூறுகினறேன, கேட்ககடவாய்)

அருச்சுனு! (ஆாததார்ததி-ஆாததன-சிஞ்ஞாசுவென்னு மூவரும பரமேசுவானுய எனனிடத்துப பததியிலலாத மற்றவரினும மிகச் சிரேட்டரே யாவா, ஆயினும,) குறிபபிட்டுரைததறகரிய பெருமையுடைய ஞானி (எனனையே சாவததினும மேலாகிய பல வடிவமா

* ஆாததாாததி முதலிய நாலவருள பரிபூரண அததுவிதீயப பிரஹ்மமே நானெனனும தததுவஞானி சிரேட்டனுவன, அவனெனது சொரூபமா யிருததலால், அவனெனககு அததியநதம பிரியனுவன, யானவனது சொரூபமா யிருததலின், அவனுககு நானும அததியநதம பிரியனு யிருககினறேனென றருசசுனனுககுப பகவான கூறினுரெனக

ஞானி நிராசையுடையவனு யிருததலின அதனுல சிதத விகாரக கலககஞ் சிறிது மின்றித தனது நிஜ வடிவமாயுளள ஆதம வடிவப பிரஹமம அலலது பிரஹ்ம வடிவ ஆதமாவை மறவாதிருககினருன, அதனுல, ஆாததாாததிமுதலியோருள சிரேட்டனு யிருககினருனெனபதாம பிரீதி சோபாதிகப பிரீதி, நிருபாதிகப் பிரீதியென் றிருவகைததாம எபபொருளில பிறவறறின பொருட்டுப பிரீதி யுணடாகின்றதோ அது சோபாதிகப பிரீதியாம, அது தனதானம சுகததின் பொருட்டுக காணி மனை முதலியவறறி லுணடாகும பிரீதியாம. எபபொருளில பிறவறறின பொருட்டுப பிரீதி யுணடாவ திலலையோ அது நிருபாதிகப் பிரீதியாம், அது தனதானமாவிலுளள பிரீதியாம ஞானிககும பகவானுககுமுள்ள பிரீதி நிருபாதிகப பிரீதியாமெனபதின குணாததறபாலதாம.

க்கொண்டு,) எனது வாஸ்தவ சொரூபத்தினிடத்திலேயே அகம் பிரஹ்மாஸ்மி (யான் பிரஹ்மமா யிருக்கின்றேன்) என்னும் பாவனை யுடையவனுயிருத்தலின், (அங்ஙனமில்லாத ஆர்த்தார்த்தி-ஆர்த்தன-சிஞ்ஞாசு என்பவர்களும் சிரேட்டர்களா யிருக்கின்றனர், அங்ஙனமிருத்தலின், அந்த ஞானி) என் தானமாவென்பதே எனது நிச்சயமாம் முத்தி பெறுதற்குரியவரென்னும் மக்களுள்ளே ஒருவன் இப்படிப் பட்ட ஞானிபாதலும் அவன் அளவிறந்த ஜன்மங்களில் பயன் கருதாது செய்துவந்த கருமங்களாலேயாம் †

ஞானி என்னையே பல வடிவமாகக் காண்டிருத்தலின், என்னையே அபேதமா யடைவன; அப்படிப்பட்ட ஞானியாவான் மிக அரியனென்று பகவான் கூறல்.

கூர்மை பொருந்திய வேலையுடைய அருச்சுன! காணப்படுகின்ற இவ்வுலகத்திலும் கேட்கப்படுகின்ற சுவர்க்காதி அவ்வுலகத்திலும் விஸ்தாரமாக வுணர்ந்த சிறந்த பொருளனைத்தும் சர்வ காரணனென்று கூறத்தகுந்த வாசுதேவனுனவென்னைப் பன்றி யில்லாதிருத்தலைக் காரணகாரிய ஆராய்ச்சி வாயிலாகத் தெளிவாக வறிந்து, பரமேசுவர ருபனவென்னைத் தனது ஆத்மசொரூபமாகப் பாவித்து வருகின்றவன் வாசுதேவனுகிய என்னையே அபேதமாக வடைவன், அம்மகாத்மா மக்களால் அடைவதற்கு மிக அரியவனுவன் ‡

† ஆர்த்தார்த்தி முதலியோர் சகாம புருஷராயினும் அவர்கள் என்னிடத்து பத்தியில்லாத மற்றவரினும் சிரேட்டராவர் அவர்கள் எப்போதும் என்னை நினைப்பதில்லை என்ற நீயே என்னை எப்போதும் நவர்திருக்கின்றனர் அதனுலவன் அவர்களிலும் சிரேட்டனும் அதனுல் அவர்களிடத்து எனது பிரீதி அவரவாதம் பிரீதிக்கேற்றவாறிருக்கின்றது ஞானி என்னானமாவாகவே யிருத்தலின் யானவனிடத்திற் கொள்ளு பிரீதி நிரூபாதிகமா யிருக்கின்றது ஒருவன் ஞானியாவது அவன் அளவிறந்த ஜன்மங்களில் செய்துவந்த நிஷ்காம கர்மங்களாலென்று அருச்சுனனுக்குப் பகவான் கூறினுரென்க பலம் பிரயோசனம்

‡ காணப்படுகின்ற இகலோகத்திலும் கேட்கப்படுகின்ற பரலோகத்திலுமுள்ள இழிந்த பொருளேயல்லாமல் உயர்ந்த பொருளும் சர்வ காரணனென்னும் என்னைத் தவிர்வில்லையென்று அவற்றைக் காரண காரிய ஆராய்ச்சி வாயிலாகத் தெளிவாக வுணர்ந்து, இடைவிடாது தன்னையே தன்னுடைய சொரூபமாகப் பாவனை செய்கின்றவன் ஆர்த்தார்த்தி முதலியோர்போலப் பிறப்பினை படைதற்குரியவனுகாது என்னையே அபேதமாக வடைந்து யானுகவே விளங்குகின்றனன், அப்படிப்பட்டவன் மிக அரியனுவனென அருச்சுனனுக்குப் பகவான் கூறினுரென்க

மனைத்திலும் நிறைந்து விளங்குகின்ற அசங்க சுபாவமுடைய ஆகாயத்தின்கண் எவ்விடத்திலும் நெருங்கிச் சஞ்சரிக்கும் சலன சுபாவம் பொருந்திய காற்றினது இருப்புப்போல்வதாம். ¶

பிரபஞ்சத்தை யுண்டாக்குங் காலத்திலும் பாதுகாக்குங் காலத்திலும் அதனோடு தனக்குச் சம்பந்தமில்லாமையைக் கூறிய பகவான் பிரளயகாலத்திலும் அதனோடு தனக்குச் சம்பந்தமில்லையெனக் கூறல்.

மலையையொத்த அருச்சுனா! இங்கே காணப்படுகின்ற ஆகாய முதலிய பதார்த்த மனைத்தும் பிரளய காலத்தில் பரமேசுவரனாகிய எனது முக்குண வடிவமா யுள்ள பிரகிருதியினிடத்தே சூட்சும ரூபமாக லய பாவத்தை யடைகின்றன; சிருஷ்டிகாலத்தில், பிரளய காலத்தில் பிரகிருதியில் சூட்சும ரூபமாக லயபாவத்தை யடைந்திருந்த அவ்வாகாசமுதலிய பதார்த்தங்கள் உண்டாகுங் கிரமப்படியே பரமேசுவரனையவென்னால் மீண்டு முண்டாக்கப் படுவனவாம்; அதனால், உண்மையாக ஆராய்ந்து நோக்குமிடத்து, எவ்விடத்தும் பூதங்களை உண்டாக்கிக் காத்தழித்து வருகின்றவன் யானே யாவன். *

¶ காற்று ஆகாயத்தை யிடமாகக்கொண் டிருப்பதுபோல, சர்வப் பிரபஞ்சமும் பரமேசுவரனாகிய வென்னை யிடமாகக் கொண் டிருக்கின்றனவென்று பகவா னருச்சுனனுக்குக் கூறினரென்க.

அசங்க சுபாவ முடைய ஆகாயத்தில் உண்மையில் காற்றின் சம்பந்த மில்லாதிருந்தும், காற்று ஆகாயத்திலிருக்கின்றதென்று கூறப்படுதல் போல, அசங்க சுபாவமுடைய பிரஹ்மத்திலும் உண்மையில் பிரபஞ்சத்தின் சம்பந்த மில்லாதிருந்தும், பிரபஞ்சம் பிரஹ்மத்தி லிருக்கின்றதென்று கூறப்படுகின்ற தென்பதிங்குணர்தற்பாலதாம்.

பிரஹ்மம் சர்வப் பிரபஞ்சத்திற்கும் ஆதாரமா யிருக்கின்றதென்பதும், சர்வப் பிரபஞ்சமும் பிரஹ்மத்தின்கண் ஆதேயமா யிருக்கின்றதென்பதும், வியவகார திருஷ்டியினா லன்றிப் பாரமார்த்திக திருஷ்டியினா லன்றுமென்பது இங்குணர்தற்பாலதாம்.

* பிரளயகாலத்தில் ஆகாயாதி பூத மனைத்தும் பரமேசுவரனைய என்னுடைய எனது சக்தியான சத்துவம் இராசசு தமசு என்னும் முக்குண வடிவப் பிரகிருதியின்கண் சூட்சும வடிவத்தால் லயபாவத்தை யடைகின்றன ; மீண்டும் சிருஷ்டி காலத்தில் சீவர்களின் கருமத்தை யனுசரித்து அவற்றை யானுண்டாக்குகின்றேன் ; ஆகாசாதி பூதங்களின் சிருஷ்டி முதலியவற்றைச் செய்பவர்

சொப்பன திருஷ்டாவாகிய புருஷனுக்குச் சொப்பன வுலகத்தின் தோற்றம் நிலை ஒடுக்க மென்பன பந்த காரண மாகாமை போலப் பரமேசுவரனாகிய எனக்கும் இவ்வுலகத்தின் தோற்றம் நிலை ஒடுக்க மென்பன பந்த காரணமாவ தில்லையா மென்ப பகவான் கூறல்.

அருச்சுனா! யான் பலத்தில் இச்சையும், ஒருவனிடத்து விருப்பும் மற்றொருவனிடத்து வெறுப்பும் ஆகிய இவற்றை யொழித்து, மித்தியா வடிவமா யுள்ள சிருஷ்டி முதலிய கருமங்களைச் செய்து வருகின்றேன், அக் காரணத்தால் பரமேசுவரனாகிய என்னை அச் சிருஷ்டி முதலிய கருமங்கள் பந்தப் படுத்துவன வன்றாம், கோசகாரப் புழு தன் வாயால் நூல் நூற்று அந்த நூலால் தான் பந்திக்கப்படுவதுபோலக் கருத்திருத்துவ அபிமானத்தோடு கூடித் தாம் செய்யும் கருமங்களின் பயன்களை யடையக் கருதுகின்றவர் அக்கருமங்களால் பந்திக்கப்பட்டு, அக்கரும பலங்களி லகப்பட்டுத் துன்புறுவர் †

என்னை யன்றிப் பிறரில்லை யென்று பகவான் அருச்சுனனுக்குக் கூறினா னென்க

சொப்பன திருஷ்டாவாகிய புருஷன் கற்பனா மாத்திரத்தால் சொப்பன வுலகத்தின் தோற்றம் நிலை ஒடுக்க மென்பவற்றிற்குக் காரணமா யிருத்தல் போல், பரமேசுவரனும் கற்பனா மாத்திரத்தால் இவ்வுலகத்தின் தோற்றம் நிலை ஒடுக்கமென்பவற்றிற்குக் காரணமா யிருக்கின்றான் உண்மையில் அவனுக்கு எதனோடுஞ் சம்பந்த மின்றா மென்ப தீங்குணர்தற்பாலதாம்

† இதனால் நான் செய்கின்றவ னென்னும் கருத்திருத்துவ அபிமானமும், தான் செய்யும் கருமத்தின் பயனில் விருப்பமு மில்லாதவன் எக்கருமத்தைச் செய்யினும், அதனாலவன் பந்திக்கப்பட்டு வருத்த முறுவதில்லை னென்பது பெறப்படுமாறுணர்க

கோசகாரப்புழு உலண்டு என்பன ஒரு பொருட்கிளவிகளாம்

பலத்தில் இச்சை, விருப்பு வெறுப்பு என்பன வின்றி யான் சிருஷ்டி முதலியவற்றைச் செய்கின்றேன், அதனால், அக்கருமங்கள் என்னைப் பந்த முடையவனாகச் செய்வதற்குத் தகுதியற் றிருக்கின்றன, பலத்தி லிச்சை முதலியவற்றோடு கருமங்களைச் செய்பவர்தாம் அவற்றால் கட்டுப்பட்டு வருத்த முறுதற் குரியவரா யிருக்கின்றன ரென்று பகவான் அருச்சுனனுக்குக் கூறினா னென்க

சொப்பன திருஷ்டாவாகிய புருஷன் சொப்பனத்தில் பலவேறு கருமங்களைச் செய்யினும் அவற்றால் பாதப்படுவ தில்லையா மாறுபோல், பரமேசுவர

### நித்திய - சுத்த - புத்த - முக்த சுபாவமும், சர்வப் பிராணிகளின் ஆத்மாவும், ஆநந்தகனமும், தேச கால வஸ்து பரிச்சேத ரகிதமுமா யுள்ள பரமேசுவரனாகிய என்னை அவிவேகி புருஷர் மானுடனாகக் கருதி, அன்பு செய்யாது நிந்திக்கின்றன ரென்று பகவான் கூறல்

சராசர வடிவமாகப் பிரபஞ்சத்தைப் படைக்கின்ற பரமேசுவரனாய என்னை எல்லாவற்றினும் மேலாகிய உண்மைப் பொருளாகத் தாம் மேன்மை படைய அறியாத அவிவேகிகள், இந்தக் கிருஷ்ணனும் நம்மைப் போல மானுடருள் ஒருவனேயென்று கருதி நிந்தை செய்து வருகின்றனர், (இவர்கள் எப்போதும் நரகத்திலே வசித்தற் குரியவரர்) அருச்சுனா! நீ அவர்கள் யாரென்று வினவுவாயாயின், அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்

அவர்கள் நரக மடைதற்குக் காரணமாகத் தம் மனத்தின்கண் ஆசைகளையும் கருமங்களையும் மிகுதியாகச் செய்து வருபவரர்; அவர் தாம் இராக்கதரும் அசுரருமாவர் ‡

ஆகிய யானும் பலவேறு கருமங்களைச் செய்யினும் அவற்றால் பந்தப்படுவதில்லை, யானெப்போதும் அசங்கனாகவே யிருக்கின்றேன் என சந்நிதான விசேடத்தால் எனது மாயாசக்தி சிருஷ்டி முதலியவற்றைச் செய்கின்ற தென்பதைப் பகவா னிங்கு விளக்கி யருளினரென்க

‡ சராசர வடிவமாகப் பிரபஞ்சத்தைப் படைக்கின்ற பரமேசுவரனான என்னைச் சர்வத்திலும் மேலாகிய வுண்மைப்பொருளென் றுணராத அவிவேகிகள் இவன் நம்மேனுருள் ஒருவனேயாவனென்று கருதி யென்னை யலட்சியஞ் செய்து வருகின்றனர் அவர்கள் இராக்கத சுபாவ முடையவரும் அசுர சுபாவ முடையவருமா யிருப்பர், எப்போதும் ஆசைக்கும் கருமங்களுக்கும் அடிமையா யிருந்து, நரகமடைதற் குரியவரா யிருக்கின்றனர் என்று பகவான் அருச்சுனனுக்குக் கூறினரென்க

பகவான் நம்மனோரைக் காத்தற் பொருட்டு, இராம கிருஷ்ணாதி யவதாரங் கொண்டமையை யறியாதவர்கள், அவ் வவதார விசேடங்களை நிந்தித்து, தம் பிறப்பின் பயனை யடையா தொழிகின்றன ரென்பதிங் குணர்தற் பாலதாம்.

இங்கே ஆசை யென்றது, பரமேசுவரன் வேண்டிய தில்லை, கேவலம் கருமமே பலத்தைக் கொடுக்கின்றது என்று கருதி, அப்பலத்தை விரும்புதலாம். கரும மென்றது, பரமேசுவர னுண்டென நம்பாது செய்யும் அக்கினி ஹோத்

## என்னை விரும்பி யொழுகுகின்றவரோ புருஷோத்த மனைதது மடைநது வருத்தமுரு திருபபரெனய பகவான் கூறல.

அருசசுன ! சறகுருவின கருணையோடு சறசாஸ்திரஙகளின விசாரததா லுணடாகும பகுதகறிவினுல பரமேசுவரனுகியவெனனைச சாவ பூதஙகடகுங காரணனுகவும நாசமறறவனுகவு முணாநது, இராசத தாமத குணஙகளடஙகி யுளள மனததினுலே சபதாதி விஷயஙகளிற செலலும சுரோததிராதி இநதிரியஙகளை யடககி, எபபோதும சறகுரு வடிவமாயுளள எனனையே காயததா லாசசிதது வணஙகி, வாககால சுருதி கூறிய வழியால துதிகது, பரபபிரஹம வடிவமான எனனையே மனததாற றியானஞ செயது, பரமப பிரேம வடிவப பகதியோடு கூடியிருககும இம மகாதமாககளே தேவாகள போல விளஙகுதறகுரியவ ராவா §

---

திராதி கருமஙகளாம இராககத ரெனபாா தாமத குண முடையவ ராவாா அசுரரெனபாா இராசத குண முடையவராவா இராககதா இமசைக கேதுவாய செயலகளையும, அசுரா விஷயபோகததிற கேதுவாய செயலகளையும செயது வருவ ரெனபதிங குணாதற பாலதாம

§ பல பிறபபுககளிற செயத புணணிய கருமஙகளால சுததமானதும, காமக குரோத முதலியவறறின வசமாகாததுமாய சிததததை யுடையரெ இஙகு மகாதமாவாவ ரெனக

குரு சாஸதிரஙகளா லுணடாகும விவேகததால பரமேசுவரனுய வெனனைச சாவ பூதஙகடகுக காரணனுகவும நாச மிலலாதவ னுகவு மறிநது, மனததையும இநதிரியஙகளையு மடககி, காயததால வணஙகியும வாககால துதிததும மனததால தியானிததும வருபவா மாகாதமாவாவா இவாகள தேவாகள போலச சாவ புருஷோததததையு மடைநது வருதத மினறி யிருபபரெனப பகவான அருசசுனனுககுக கூறினுரெனக

இஙகு மனததினுலே இநதிரியஙகளை யடககி யெனபது சிரவணுதிகளின சாதனததையும எனனையே வணஙகி யெனபது குரு சேவையையும, வாககால துதிதது மனததால தியானஞ செயதெனபது ஞான சாதனஙகளான சிரவண மனன நிதிததியாசனஙகளையுங குறிபபிதது நினறனவெனக

பல பிறபபுககளிற செயத புணணியஙகளை யுடையவாகளே தெயவ சமபததுடையவ ராவா, அவாதாம மனவடகக முதலியவறறை யுடையவராய, சறகுருவை யடுத்தொழுகிச செயயும சிரவண மனன நிதிததியாசனஙகளின வாயிலாகத தததுவ ஞானமடைநது, சாவ துககு நிவிரததி பரமாநநதப பிராபதி வடிவ மோடசமடைதற குரியவ ராவரெனபதிங குணாதறபாலதாம

தத்துவ ஞான சாதனமான சிரவண மனன நிதித்தியாசனங்களைச் செய்தற்குரிய சாமர்த்திய மில்லாதவர் உத்தமர், மத்திமர், மந்தரென மூவகையராய்த் தத்தம் புத்தியி னனுசாரமாகப் பரமேசுவரனாகிய வென்னையே சிந்தனை செய்கின்றன ரென்று பகவான் கூறல்.

அருச்சுன! நித்தியமா யிருத்தலின் காலத்தாலும், வியாபகமா யிருத்தலின் தேச (இட) த்தாலும், சர்வாத்மாவா யிருக்கலின் வஸ்துவாலும் பரிச்சின்ன (கண்ட) மாக்கச் சற்றுக்கற் கரியதாகிய பிரஹ்ம சொரூபமா யுள்ள என்னை உலகத்துள் தம்முள் வேற்றுமை யுடையவரா யுள்ள அதிகாரி புருஷர்கள் பரமார்த்த தரிசனத்தால் அபேதமாகவும், சூரியன் முதலிய வடிவங்களால் பேதமாகவும், தம் மனத்துட்கொண்டு, ஸ்துதிக்கற்கரிய ஞான யாகங்களாலே மிகு பிரியமாகச் சிந்தனை செய்திருக்கின்றனர், அவர்கள் தன்மையினைக் கூறுகின்றேன், நீ கேட்கக்கடவாயாக $

$ கால தேச வஸ்து பரிச்சேத மின்றிப் பிரஹ்ம சொரூபமாயுள்ள என்னைச் சிலர் பரமார்த்த தரிசனத்தால் அபேதமாகவும் சிலர் சூரியன் முதலிய வடிவங்களால் பேதமாகவும் சிந்தனை செய்கின்றனர், இதுவே அவர் செய்யும் ஞானயாகமாமென்று பகவான் அருச்சுனனுக்குக் கூறினரெனக்

(1) பரமார்த்த தரிசனத்தால் பகவானை (அகம்பிரஹ்மாஸ்மி யென்று) பேதமாகச் சிந்தனை செய்தல் அகங்கிரக வுபாசனையாம்

(2) சூரியன் முதலிய வடிவங்களால் பகவானைப் பேதமாகச் சிந்தனை செய்தல் பிரதீக வுபாசனையாம்

(3) இவ்விரண்டனுள் எதையேனும் செய்யச் சாமர்த்திய மில்லாதவர் பலவகையாகப் பரமேசுவரனைச் சிந்தனை செய்கின்றன ரென்பதிங் குணர்த்தற்பாலதாம்

தியேய ஸ்வரூபத்தைத் தன்னோடபேதமாகத் தியானஞ் செய்வது அகங்கிரக வுபாசனையாம், அந்நிய வஸ்துவை அன்னிய வடிவமாகத் தியானஞ் செய்வது பிரதீக வுபாசனையாம்

காணப்படுவன வனைத்தும் பிரஹ்ம சொரூபமே யென் றுணரு முணர்வே இங்கு ஞான யாகமாம், அதுபற்றி நிகழும் உபாசனைகளும் இங்கு ஞான யாகமாமென்று கூறப்படுகின்றன வென்பதிங் குணர்த்தற்பாலதாம்

### பகவான் உபாசகர்கள் தத்தம் புத்தியி னனுசாரமாகப் பலவகையாக உபாசனே செய்யினும் அவர் யாவரும் என்னையே உபாசனே செய்கின்றன ரேன்பதற்கேது கூறல்.

அருச்சுனு! சுருதிகள் கூறும் சிரௌத கரும மென்னும் அக்னிஷ்டோமாதி யாக வடிவக் கிருதுவும், ஸ்மிருதிகள் கூறும் ஸ்மார்த்த கருமமென்னும் வைசுவ தேவாதி மகா யக்ஞமும், பிதிர்க்களின் பொருட்டுக் கொடுக்கும் சிரார்த்த முதலியனவும், ஆகவநீய முதலிய அக்கினி நெய் அந்நமென்னு மிவற்றினுற் சிரத்தை மிக்க அதிகாரி புருஷர்கள் செய்கின்ற கிரியைகளும் ஆகிய இவையனைத்தும் மந்திர முதலிய பதார்த்தங்களும் பரமேசுவரனுகிய நானேயாம்.

அருச்சுனு! இன்னு மாராய்ந்து நோக்குமிடத்துப் பிராணிகளை யுண்டாக்கிச் செவ்வையாக வளர்க்கும் மாதாவும் பிதாவும் அவர்தம் பிதாமகரும் பரமேசுவரனுகிய நானே யாவன். முற்பிறப்பிற் செய்த புண்ணிய பாவ கருமங்களின் பயனுன சுகதுக்கங்களைப் பிராணிகளுக்குக் கொடுப்பவனும் நானேயாவன்; அதர்வண வேதத்தோடு கூடியுள்ள இருக்கு யசுர் சாம வேதங்களுடன், ஓம் என்னும் பிரணவாட்சரமும் நானே யாவன். அருச்சுனு! யாவர்க்கும் கதி வடிவமா யிருப்பவனும் நானே யாவன்; நல்வினை தீவினை யென்னும் இருவினையின் வழியே யாவரையும் போஷணஞ் செய்பவனும் நானே யாவன்; யாவர்க்கும்

சூரியன் முதலியோரைப் பிரஹ்மமாகத் தியானஞ் செய்யும் பிரதீக வுபாசனே நான் பிரஹ்மமா யிருக்கின்றே னென்று தியானஞ் செய்யும் அகங்கிரக வுபாசனைக்கும், அது காணப்படுவன வனைத்தும் பிரஹ்ம சொரூபமே, அது நானே யென்றுணரும் தத்துவ ஞானத்திற்கும் காரணமாம்; பிரதீக வுபாசனைக்குப் பல வகையாகப் பரமேசுவரனைத் தியானஞ் செய்வது காரணமா மென்பது மிங் குணர்தற் பாலதாம்.

¶ சுவாகா, சுவதா என்னும சப்தங்கட் கிடையிலுள்ள எவ் வேத வாக்கியங்களைக் கூறித் தேவதைகட்கும் பிதிர்கட்கும் ஹவிசு கொடுக்கப்படுமோ அவ்வாக்கியங்கள் இங்கு மந்திரமாம். முதலிய பதார்த்தங்களும் என்றமையால் நோய் நீக்கும் ஔடத முதலியவற்றையுங் கொள்க.

கிரியைகளும் அவற்றின் காரணங்களும் அவற்றின் பயன்களும் பரமேசுவரனது சொரூபமேயா மென்பதிங் குணர்தற் பாலதாம்.

பிரபுவா யிருப்பவனும் நானே யாவன்; சர்வப் பிராணிகட்கும் சாட்சியா யிருப்பவனும் நானே யாவன்; யாவர்க்கும் போகஸ்தானமாயிருப்ப வனும் நானே யாவன்; யாவர்க்கும் துன்பத்தை நீக்குகின்றவனும் நானே யாவன்; யாவர்க்கும் சுகிருதுவாயிருப்பவனும் நானே யாவன்; எவ்வகைப் பொருட்கும் பீஜமாயிருப்பவனும் நானே யாவன். *

அருச்சுனா! இங்குண்மையாக ஆராய்ந்து நோக்குமிடத்து முன் வருஷித்தமையால் பூமியிலுள்ள நீரை யெல்லாம் சூரியனாய் அப்பூமியி லிருந்து கிரகிப்பவனும் மீண்டும் அந்நீரை மழையாகக் கொடுக்கின்ற வனும் நானே யாவன். நான் இங்ஙன மிருத்தலால், மிக இழிவான எந்தத் தெய்வத்தையேனும் ஆராதனை செய்கின்றவரும் என்னையே ஆராதனை செய்கின்றனரென்று நீ யறியக் கடவாயாக. †

அகங்கிரக உபாசனை, பிரதீக உபாசனை, இவற்றிலும் வேறாய உபாசனை யென்பனவற்றுள் எதனாலேனும் பரமேசுவரனாகிய வென்னை நிஷ்காமமாகச் சிந்தனை செய்யாது, சகாமராய்த் தாம் விரும்பிய சுவர்க் காதிபோக வடிவுப் பயனை யடைதற்பொருட்டு, காமிய கருமங்களைச் செய்பவர் சித்தசுத்திக் கேதுவாய நிஷ்காம கருமத்தின் அபாவத்தால், தத்துவஞான சாதனமாயுள்ள சிரவண மனன முதலியவற்றைச் செய் வதற்குத் தகுதியற்றவராய், அடிக்கடி ஜனன மரண வடிவச் சம்சா ரத்தை யடைகின்றனரெனப் பகவான் கூறல்.

அருச்சுனா! அசுப கரும மொழியப்பெற்றுள்ள புருஷர் சொப்பிர காச வடிவமாய் ஏகமாயுள்ள பரமேசுவரனான வென்னையே இந்திரன் - வசு-ருத்திரன்-ஆதித்திய னென்னும் பல வடிவமாக அக்கினிஷ்டோம முதலிய காமிய யக்ஞத்தால் ஆராதனஞ் செய்து, அவ்வாராதனத்தால் சுவர்க்கத்தை யடைந்து, அங்குள்ள திவ்விய போகங்களை யனுபவித்து வாழ்ந்திருந்து, அவ்வாராதன வடிவப் புண்ணிய கருமம் நாசமான

* கருமத்தா லடையும் சுவர்க்க முதலிய பயன்கள் இங்குக் கதியாம்; கைம் மாறு கருதாது உதவி செய்பவன் சுகிருது வாவன்; உற்பத்திக் கேதுவா யிருப்பது பீஜமாம்.

† நான் எல்லாப் பொருளுமாயிருத்தலின், மக்கள் எதனை ஆராதனை செய் யினும், அஃதெனது ஆராதனையேயா மென்று பகவான் அருச்சுனனுக்குக் கூறினரென்க.

போது, அங்கிருந்து மண்ணுலகத்திலே வீழ்ந்து, மீண்டும் அத் திவ்விய போகங்களின் மீதுள்ள இழிவாகிய இச்சையினாலே அக் காமிய யக்ஞத்தைச் செய்து, அடிக்கடி இம் மண்ணுலகத்திலிருந்து அச் சுவர்க்க லோகத்திற்குப் போவதும், அச் சுவர்க்கலோகத்தி லிருந்து இம் மண்ணுலகத்திற்கு வருவதுமாக அலையா நிற்பர். ‡

**தத்துவ ஞான மில்லாத சகாம புருஷரின் கதியைக் கூறிய பகவான் தத்துவ ஞான முடைய நிஷ்காம புருஷரின் கதியைக் கூறல்.**

மின்னலை யொத்து விளங்குகின்ற வேலை யுடைய அருச்சுனா! பரப்பிரஹ்மரூபமான வென்னைத் தமது ஆத்மாவாக வுணர்ந் திடைவிடாது சிந்தனை செய்கின்றவர் விரும்பிய அன்ன பானாதி யனைத்தையும் பின்னர்க்கொடுப்போமென்று கருதாது அப்பொழுதே அவர்க்குக் கொடுத்து, அவற்றைப் பரமேசுவரனான யானே காப்பாற்றுகின்றேன்.

(அருச்சுனா! நீ உமக் கன்னியமாயொரு பொருளு முண்மையி லின்மையின், அவ்விந்திரன் முதலியோரும் உமது சொரூபத்திலும் வேறானவ ரல்ல ராவர்; அதனால், உமது பக்தர்க்கும் அவ்விந்திரன் முதலியோரது பக்தர்க்கும் சிறிதும் வேற்றுமை யில்லையாம்; ஆகவே, அவ்விந்திரன் முதலியோரது பக்தர் அடிக்கடி ஜனன மரண வடிவச் சம்சாரத்தை யடைகின்றனரென்று தேவரீர் கூறுத லெவ்வாறு பொருந்துமென்று நீ வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.)

அருச்சுனா! தேவ ராஜனாகிய இந்திரன் முதலியோரைச் சிரத்தையோடு அக்கினிஷ்டோம முதலிய காமிய யக்ஞத்தால் ஆராதனை

‡ மக்களுக்குக் கிடைக்காத போகம் திவ்விய போகமாம்; அது பிராணிகள் தேவ சரீரத்தாலேயே அனுபவித்தற் குரியதாம்.

சகாம புருஷர் இந்திரன் முதலியோரை அக்கினிஷ்டோம முதலிய காமிய யக்ஞத்தால் ஆராதனை செய்வதும் அவ் விந்திரன் முதலியோரது வடிவமாக வுள்ள பரமேசுவரனது ஆராதனையா மென்பதும், சகாம புருஷர் காமிய கருமத்தால் சுவர்க்கத்தை யடைகின்றனர்; அக் கருமம் நாசமான பின் அங்கிருந்து மண்ணுலகத்திற்கு வந்து பூர்வ சம்ஸ்காரத்தால் மீண்டும் அக் கருமத்தைச் செய்து சுவர்க்கத்தை யடைகின்றனர்; மீண்டும் மண்ணுலகத்தை யடைகின்றனர்; இவ்வாறவர்க்குக் கருப்பவாச முதலிய பல்வேறு திறத்ததாய துக்கப் பிரவாகம் தொடர்ச்சியா யிருக்கின்றதென்பது மிங்குணர்தற் பாலனவாம்.

செய்கின்றவரும், அவ்விந்திரன் முதலியோரது சொரூபமா யுள்ள என்னையே தாம் அறியாமலே ஆராதனை செய்கின்றனர். இதனை நீ ஆராய்ந் தறிவாயாக. §

### இந்திரன் முதலிய அன்னிய தேவதைகளை ஆராதனஞ் செய்பவர்க்குச் சம்சார மில்லா திருக்கும் பயனில்லை யாயினும், அத் தேவதைகள் ஆராதனையி னனுசாரமாக அற்பப் பயனுண்டாமெனவும் எனது பக்தர்க்கு மகத்தான பயனுண்டா மெனவும் பகவான் கூறல்.

இந்திராதி தேவதைகளை ஆராதனஞ் செய்பவர் அந்தேவதைகளே யாவர்; அக்கினிஷ்வாத்தாதி பிதிர்க்களைப் பொருந்துமாறு ஆராதனஞ் செய்பவர் அந்தப் பிதிர்க்களாய் விளங்கா நிற்பர்; எவர் மாதிர்கணாதி பூதங்களுள் எந்தப் பூதத்தினிடத் தன்புடையவராய் அதனை ஆராதனஞ் செய்கின்றனரோ அவர் அப்பூதமே யாவரென்று கூறப்படுமாயின், பரமேசுவரனாகிய என்னை ஆராதனஞ் செய்

§ எங்கும் அத்துவிதீய ப்ரஹ்மத்தையே யறிந்து யாதொரு போகத்திலு மிச்சை யில்லாது, வாசுதேவனென நானே சர்வான்ம ரூபன், எனக் கன்னியமாக உண்மையி லொன்று மில்லை யென்று நிச்சயஞ் செய்து, நிச்சயஞ் செய்தவாறே சிந்தனை செய்து வருகின்றவர் விரும்புகின்றனவற்றைப் பகவா னுடனே அவர்க்குத் தந்து, அவற்றைப் பாதுகாத்து வருகின்றன ரென்பதும், இந்திரன் முதலியோரை ஆராதனஞ் செய்பவரும் தாமறியாமலே பரமேசுவரனை ஆராதனஞ் செய்கின்றன ரென்பதும், அவர் அவ்விந்திரன் முதலியோரைப் பரமேசுவரனுக் கன்னியமாகக் கற்பித்து ஆராதனை செய்து வருதலினால் சம்சாரத்தை யடைந்து வருகின்றன ரென்பதும், பரமேசுவரன் ஞானிகளுக்கு முயற்சியைத் தோற்றுவியாமலே அவர் விரும்பியவற்றைத் தருகின்றனர், மற்றவர்க்கு முயற்சியைத் தோற்றுவித்தே அது வாயிலாக அவர் விரும்பியவற்றைக் கொடுக்கின்றன ரென்பதும், எல்லாவற்றையும் பரமேசுவர வடிவமாகக்கண்டு பலனை விரும்பாது அக்கினிஷ்டோம முதலிய கருமங்களைச் செய்து, அவற்றைப் பரமேசுவரனுக் கர்ப்பணஞ் செய்பவர் அக்கரும பலத்தால் அர்ச்சிராதி மார்க்கமாகப் பிரஹ்ம லோகத்தை யடைந்து, அங்குத் தத்துவ ஞானத்தைப் பெற்று, அவ் வுலகத்திற்கு முடிவுண்டாம்போது கைவல்லிய மோட்ச மடைகின்று ரென்பது மிங்குணர்தற்பாலனவாம்.

பவர் பரமாநந்த வடிவினனான யானே யாவதற்கு யாதேனும் சந்தேக முண்டோ? இல்லையாம். †

### அந்நிய தேவதைகளி னாராதனத்தில் திரவியச் செலவு முதலிய பல துன்பங்க ளிருத்தல் போல என தாராதனத்தில் துன்பங்க ளில்லை ; அதன்கண் ஆயாசமின்றென்று அது செய்யும் பிரகாரத்தினைப் பகவான் கூறல்.

அருச்சுனா ! சுத்த மனமுடைய பக்தர்கள் சுலபமாகக் கிடைத்தற்குரிய பத்திரம் புஷ்பம் பழம் தோய (ஜல) முதலியவற்றுள் தாம் பெற்ற தெதுவோ அதனைக் கொண்டு, பரமேசுவரனாகிய என்னை ஆராதனஞ் செய்து, நிரதிசய பக்தியோடு எனக்கர்ப்பணஞ் செய்ததையே யான் மிகு பிரியமா யேற்றுக்கொள்வன் ; அதனால், (எவ்வாராதனத்தால் யான் பிரசன்ன மாவேன், அஃ தெவ்வாறு செய்வதாமெனச் சிந்தனை செய்யாது,) நீ ஈவன நோற்பன உண்பன என்ற இவற்றினையே ஆராதனஞ் செய்தற்குரிய திரவியமாகக் கொண்டு, இவற்றை யெல்லாம் என்னிடத் தன்புடையவனாய் எனக் கர்ப்பணஞ் செய்வையாயின், கரும பந்தத்தினின்றும் நீங்கிப் பரப்பிரஹ்மமாயுள்ள என்னையே யடைதல் கூடும். $

† (1) இந்திராதி தேவதைகளை அக்கினிஷ்டோம முதலிய கருமங்களின் வாயிலாக ஆராதனஞ் செய்பவர் தெய்வ விரதிகளென்று சொல்லப்படுவர் ; இவர் அத்தேவதைகளையே யடைவர் ; இவர் சாத்துவிக ராவர் ; (2) அக்கினிஷ்வாத்தாதி பிதிர்க்களைச் சிரார்த்த முதலிய கருமங்கள் வாயிலாக ஆராதனஞ் செய்பவர் பிதிரு விரதர்களென்று சொல்லப்படுவர் ; இவர் அப்பிதிர்க்களையே யடைவர்; இவர் இராசத ராவர்; (3) யட்ச ராட்சச மாதிர்கண முதலிய பூதங்களை ஆராதனஞ் செய்பவர் பூதபூஜகரென்று சொல்லப் படுவர்; இவர் அப்பூதங்களையே யடைவர்; இவர் தாமத ராவர். இந்திராதியோரிடத்தும் மற்றெவ்விடத்தும் பரமேசுவரனை வியாபகமாகப் பார்த்து, இடைவிடா தாராதனஞ் செய்பவர் அப் பரமேசுவரனையே அபேதமா யடைவர்; இவர் மத்யாஜி என்றுசொல்லப்படுவ ரென்ப திங்குணர்தற்பாலதாம்.

$ சுத்த மன முடையவர் அன்போடர்ப்பணஞ் செய்கின்ற எதனையும் பகவான் மிகு பிரியமா யேற்றுக்கொள்ளுகின்றன ரென்பது ஸ்ரீதாமப் பிராமணர் அன்போடளித்த நெல்லையும், சபரர் அன்போடளித்த நெல்லிப் பழத்தையும் பகவான் மிகு பிரியமா யேற்றுக்கொண்டாரென்று புராணங் கூறுவதால் நன்கு விளங்குவதாம்.

(அருச்சுன ! நீ தேவரீர் உமதன்பர்க் கனுக்கிரகஞ் செய்து, மற்றவர்க் கனுக்கிரகஞ் செய்யா திருப்பீராயின், தேவரீரும் எம்ம னோர் போல இராகத் துவேஷ முடையீ ராவீர் ; அதனால் நீவீர் பர மேசுவரராதல் யாங்ஙனமா மென்று வினவுதல் கூடும் ; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

அருச்சுன ! பரமேசுவரனாகிய நான் என்னிடத் தன்புள்ள அல்லது அன்பில்லாத சர்வப் பிராணிகளிடத்தும் வேற்றுமை யின்றி யிருத்தலால் எனக்கு யாவரும் சமான முடையவரே யாவர் ; அதனால் இவர் என் பிரியத்திற்கு விஷயமானவர் ; இவர் என் பிரியத்திற்கு விஷய மாகாதவரென ஒருவரும் எனக்கில ராவர். அங்ஙன மிருப்பி னும், என்னை யிவ்வாறறிந்து ஆராதனஞ் செய்யும் பக்தரிடத்து யானும் அவர்க்கனுக்கிரகஞ் செய்திருப்பன் ; அவ்வாறென்னை ஆரா தனஞ் செய்கின்ற அப்பக்தரும் என்னிடத்து அவ்வாறே பொருந்தி யிருப்பார். *

இங்கு ஈவனவென்பது அதிதியர் பிராமணர் முதலியோர்க்குக் கொடுக்கும் அன்னம் சுவர்ண முதலியனவும், நோற்பன வென்பது பாப நிவிர்த்தியின் பொருட்டுச் செய்யும் சாந்திராயண விரத முதலியனவும், உண்பன வென்பது திருப்தியின்பொருட் டுண்ணும் அன்ன முதலியனவுமாம்.

இந்திரன் முதலிய தேவதைகளி னாராதனத்தில் திரவியச் செலவு சரீர வருத்த முதலியன விருத்தல் போல, பகவானது ஆராதனையில் அன்பொன்றே யிருத்தல் வேண்டும்; மற்றையவை வேண்டுவன வன்றா மென்பதிங் குணர் தற்பாலதாம்.

* அவ்வாறே பொருந்தி யிருத்தலாவது கருமபந்த நீங்கிப் பிரஹ்ம சொரூப மா யிருத்தலாம். வேற்றுமையின்றி யிருத்தலாவது, பகவான் தனது சுவபாவிக மான அஸ்தி பாதிப் பிரியமென்னும் சச்சிதாநந்த வடிவத்தாலும், மயோபாதியா லாகிய அந்தர்யாமி வடிவத்தாலும் எல்லாப் பிராணிகளிடத்தும் கடங்களில் மண்போலவும், மணிகளில் நூல்போலவு மிருத்தலாம் ; இவ்வாற்றால் பகவா னுக்கு எவரும் பிரீதிக்கு விஷயமானவரு மன்றாம், அப்பிரீதிக்கு விஷயமான வரு மன்றாம். பகவா னங்ஙனமிருப்பினும், சூரிய வொளி கண்ணாடி முதலிய வற்றி லன்றி மற்றவற்றில் பிரதிபிம்ப ரூபமாக விளங்காமைபோலப் பக்தரிடத் தன்றி மற்றவரிடத்து ஆநந்த வடிவமாக விளங்கா திருக்கின்றா னென்பதும், அக்கினியும் கற்பக விருட்சமும் எவரிடத்தும் ராகத் துவேஷமில்லா திருப்ப னவாம் ; அங்ஙன மிருப்பினும், அக்கினி தன்னை யடைந்தவர்து சீதத்தைப்

சாவப் பிராணிகளிடத்தும் சமானமா யுள்ள எனக்
தன்மையைக காட்டுவது எனது பகதியின் பிரபாவமா மென்று
அதனைப பகவான் கூறல.

வலலமைவாயநத தோளகளையுடைய அருசசுனு! எபபோதும தாம அனுபவிததறகுரிய உணவு முதலாகவுள்ள பொருளகளைப பரமேசுவரனுன எனனிடத தாபபணஞ் செயது, அநநநிய சிததமுடையவராய எனனை ஆராதனஞ செயகினறவா நாணகதை யொழிததுச செயயும துராசார முடையவரா யிருபபினும, அவாகள சாதுககளே யாவா. (அருசசுனு! நீ அவாகள சாதுககளாவ தெவவாறுமெனறு சஙகிககல கூடும, அதறகு விடை கூறுகினறேன, கேடகசகடவாய)

அருசசுனு! வெகுகாலம துராசாரமுடையவரா யிருநத அவாககு எனது ஆராதனததின பிரபாவததால எனறுங கெடுத லிலலாத நிரதிசயாநநதவடிவ மோடச முணடாவதே யலலாமல, எவவிடததும யாதொரு துாககதியு முணடாவதிலலையாம, இது சததியமாம ‡

போககுவதனறி, அடையாதவரது சீததததைப போககாததாயும, கறபகவிருகூம தனனை யடைநதவரது தரிததிரததைப போககுவதனறி அடையாதவரது தரிததிரததைப போககாததாயு மிருககினறன, அஙஙனமே எவரிடததும ராகத துவேஷ மினறி யிருககும பகவானுந தனனை யடைநதவாகளுக கனுககிரகஞ செயதும, அடையாதவாகளுக கனுககிரகஞ செயயாது மிருககினறுன அதனுல பகவான சீவாகளபோல இராகத துவேஷ முடையவனுகா னெனபதுமிங குணாததறபாலனவாம

சாவப பிராணிகளிடததும யான வேறறுமை யினறி யிருததலால, எனக கிவா நலலவா, இவா கெடடவ ரெனனும வியவகாரம சிறிது மிலலையாம, அஙஙன மிருபபினும, யானிவவா றிருககினறே னெனபதை யுணாநது, எனனை யனபோ டாராதனஞ செயகினறவ ரிடதது யானிருககினறேன அவரும என னிடத திருககினறன ரெனறு பகவா னருசசுனனுககுக கூறினுரெனக

‡ அஜாமிளன, கஜேநதிரன முதலியோா துராசார முடையவரா யிருநதும, பகவானது ஆராதனததால பரமபத மடைநதனரெனறு புராணஙகூறுவதும, பூாவ புணணிய பரிபாகததால அநநநிய சிததமுடையவராயப பகவானை ஆராதனஞ செயகினறவா துராசார முடையவரா யிருபபினும அவா அவவாராதனத தின பிரபாவததால துராசாரததை யொழிதது, சாதுவாய நறகதியை யடைவ தனறித தாககதியை யடைவதிலலையெனபதும இஙகுணாததறபாலனவாம

என்னை ஆராதனஞ் செய்பவர் யாவராயிருப்பினும் அவர்க்குக் கேடுண்டாவ தில்லை யென்று பக்தியின் பிரபாவத்தைப் பகவான் கூறல்.

அருச்சுனா! வணிகரும், வேளாளரும், மகளிரும் பக்தியுடனே பரமேசுவரனான என்னை ஆராதனஞ்செய்து, எனது பக்தியின் பிரபாவத்தால் கரும பந்தத்தை யொழித்துப் பரகதி யடைவாரென்று சொல்லப்படுமாயின், மணிமுடி யரசரும் மேன்மை பொருந்திய அந்தணரும் எனது பக்தராய் என்னை ஆராதனஞ் செய்வாராயின், அவர்கள் எனது பக்தியின் பிரபாவத்தால் நீக்குதற்கரிய பிறவி யொழிந்து பரகதியடைவ ரென்பதுபற்றிச் சொல்லவேண்டுவது மிருக்கின்றதோ? இல்லையாம் †

இவ்வுலக வாழ்வு மின்னலை யொத்ததாகலின், நீ விரைந்து என்னை ஆராதனஞ் செய்தடையக்கடவாயென்று பகவான் கூறல்.

இலக்குவாட்கண் பின்னையேய் முறுவலோடும் பேய்முலையுண்ட பெம்மானாய பகவான், அருச்சுனா! மின்னலை யொத்துப் பொய்யாயுள்ள இவ்வுலக வாழ்வில் அதனை நம்பி யிருக்கின்ற நீ பக்தியுடனே என்னையே வணங்கி, என்றும் என்னையே தியானஞ் செய்வாயாயின், முடிவில் பரமானந்த வடிவனான என்னையே அபேதமா யடைவாய் என்று கூறினார் *

(பின்னை-இலக்குமி, பேய்-பூதகி, முறுவல்-புன்சிரிப்பு )

**9** - மாயாவிகார அத்தியாயம் முற்றிற்று

† பகவானை ஆராதனஞ் செய்பவர் யாவராயிருப்பினும் அவர்க்கு நற்கதி உண்டாவதன்றித் துர்க்கதி உண்டாவதில்லையா மென்பதிங்குக் கவனித்தற்குரியதாம்

* உயிர்கள் மோட்சமடைதற்குரியதாயுள்ள மானுட சரீரத்தை நிலையென்று கருதுதல் வேண்டாம், அது மின்னலைப்போன்று விரைந்து கெடு மியல்புடையதாம், அதனால் நீ விரைந்து என்னை வணங்கித் தியானித்தென்னை யடையக்கடவாய், என்னை யடையாவிட்டால் மானுடசரீரம் பெற்றது பயனில்லாததாமென்று பகவான் அருச்சுனனுக்குக் கூறினாரென்க

# 10 - விபூதியோக அத்தியாயம்.

7-8-9-வது அத்தியாயங்களில் தத்துவமசி யென்னும் மகா வாக்கியத்தி லுள்ள தற்பதப் பொருளான பரமேசுவரனுடைய சோபாதிக வடிவத்தையும் நிருபாதிக வடிவத்தையும் திருவாய்மலர்ந் தருளிய பகவான், அத் தத்பதப் பொருளான பரமேசுவரனுடைய விபூதிகள் சோபாதிக வடிவத் தியானத்திலும் நிருபாதிக வடிவ ஞானத்திலும் காரணமா யிருத்தலின், ஏழாவ தத்தியாயத்திலும் ஒன்பதாவ தத்தியாயத்திலும் சுருக்கமாகக் கூறிய அவ்விபூதிகளைத் தியானத்தின் பொருட்டும் ஞானத்தின் பொருட்டும் விஸ்தாரமாகக் கூற விரும்பி, அருச்சுனன் தமது விபூதிகளை வினவாதிருக்கவும், அவற்றை அவனுள்ளத்தி லுற்சாக முண்டாகுமாறு அவனுக்குப் பத்தாவ தத்தியாயத்தில் கூறுகின்றார்.

வேதத்தி னுச்சியில் வீற்றிருக்கும் கருமுகில் போன்ற நிற முடைய பகவான் அருச்சுனனை நோக்கி, தமது செந்தாமரை மலர் போன்ற வாயினால், அருச்சுனா! எவரு மறிதற்கரிய பரமேசுவரனான எனது விபூதியை முன்பு சுருக்கமாகக் கூறினேன்; அதனைக் கேட்டு உன் வசமாக நின்ற மனத்தின்கண் சாந்த மிருமாறு சந்தோஷமடைந் துள்ள உனக்கு இப்போதவ் விபூதியை விஸ்தாரமாகக் கூறுகின்றேன்; அதனை நீ கேட்கக் கடவாயென்று அதன்கண் அவனுக் கன்பு மிகுமாறு கூறுவாரானார்:—

## பகவான் மீண்டும் தனது பிரபாவத்தைக் கூறுதற்குக் காரணங் கூறல்.

அருச்சுனா! இந்திரன் முதலிய தேவர்களும் - பிருகு முதலிய மகரிஷிகளும் - அசுரர்களும் - சித்தர்களும் மற்றவர்களும் எனது பழைமையான சொரூபத்தின் காரியமாயிருத்தலின், எனது பிரபாவத்தை யறியார்கள்; (எனது சொரூபம் அவர்கட்குக் காரணமாயிருப்பதால் காரியமாயுள்ள அவர்கள் எனது கிருபையா லன்றி யெனது பிரபாவத்தை யறிதற்குரியவராகார்.) (அருச்சுனா! நீ தேவரீரது பிரபாவத்தை அறிவதால் வரும் பயன் யாது என வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

சாதலும் பிறத்தலு மில்லாது சர்வலோகங்கட்கும் மகேசுவரனு முள்ள என்னைத் தமதான்மாவோடு அபேதமாக அறியத்தக்கவர் பாவ கருமங்களனைத்தையும் கடமைவிட்டொழிப்பாராய் நீக்கி நிரதிசயானந்த வடிவ மோட்சத்தை யடைவர் †

பகவான் தனது மகேசுரத் தன்மையை விரித்துக் கூறல்

அருச்சுனா! புத்தி, பொறுமை, தவம், ஞானம், புகழ், பழி, தீக்கொலை யொழிவு, சத்தியம், சமை, தமை, ஜபம், தானம், மரணம், ஜனனம், நிறைவு, சுகம், துக்கம், அஞ்சுதல், அஞ்சாமை யென்னும் லோகப்பிரசித்தமான இவ்வளவு காரிய விசேஷங்களும் சர்வப்பிராணிகட்கும் பரமேசுவரனான என்னிடத்திருந்தே தத்தமது காரணங்களோ டுண்டாகின்றனவென்பதை நீ உணரக்கடவாய் ¶

† பரமேசுவரனது பிரபாவம் உலகனைத்திற்கும் காரணமாதல் சிஷ்டரைக் காத்தல் துஷ்டரை யொழித்தல், மச்ச—கூர்மாவதார முதலிய விசேஷங்கள் முதலியனவாம்

¶ (1) சூக்ஷ்மப் பொருளை ஆராய்ந்துணரும் அந்தக்கரணத்தின் விசேட வடிவம் புத்தியாம், (2) சித்தம் விகாரமடையா திருத்தல் பொறுமையாம், (3) விரதங்களால் சரீரத்தையும் இந்திரியங்களையும் இளைக்குமாறு செய்தல் தவமாம், (4) நித்தியா நித்திய விவேகம் ஞானமாம், (5) தருமவடிவ நிமித்தத்தா லுண்டாகுங் கீர்த்தி புகழாம் (6) அதரும வடிவ நிமித்தத்தா லுண்டாகும் அகீர்த்தி பழியாம் (7) மனம் வாக்குக் காயமென்னு மிவற்றுள் எதனாலும் எப்பிராணிக்குந் தீமை செய்யா திருத்தல் தீக்கொலை யொழிவாம், (8) தனக்கும் பிறர்க்கும் தீமை தருவ தில்லாத சொற்களைக் கூறுதல் சத்தியமாம், (9) அந்தக்கரணத்தை விஷயங்களில் செல்லாவாறு தடுத்தல் சமையாம், (10) சுரோத்திர முதலிய இந்திரியங்களைச் சத்த முதலிய விஷயங்களி னின்றுந் திருப்புதல் தமையாம், (11) ஈசுவரநாம முதலியவற்றை வாயாற் சொல்லுதல் அல்லது மனத்தால் சிந்தித்தல் ஜபமாம், (12) உத்தமமான தேசத்தில் உத்தமமான காலத்தில் தக்கார்க்குச் சிரத்தையோடு அன்னம் சுவர்ணம் முதலியவற்றை ஈதல் தானமாம், (13) ஸ்தூல வுடம்பை விடுதல் மரணமாம், (14) ஸ்தூலவுடம்பைப் புதுவதாக அடைதல் ஜனனமாம் (15) பெற்றது கொண்டு மகிழ்தல் நிறைவாம், (16) சுகம் இன்பமாம், (17) துக்கம் துன்பமாம், (18) பயமடைதல் அஞ்சுதலாம், (19) பயமடையாமை அஞ்சாமையாம்

புத்தி முதலியவற்றிற்குக் காரணமா யிருத்தலினால் மாத்திரம் என்னிட த்துச் சர்வலோக மகேசுரத் தன்மை யில்லை; மற்றோ, பிருகுமுதலிய மகரிஷிகளுக்கும் மற்றவர்க்கும் காரணமாவதாலும் என்னி டத்துச் சர்வலோக மகேசுரத் தன்மை உண்டெனப் பகவான் கூறல்.

அருச்சுனா ! எவ்வகைத்தாய தவத்தினையு முடைய பிருகு முத லிய சப்த மகரிஷிகளும், உலகனைத்தையும் நிற்பன நடப்பனவாகப் படைத்த சுவாயம்பு முதலிய பதினான்கு மனுக்களும், சநகர் முத லிய நான்கு மகரிஷிகளும், சிருஷ்டியி னாதிகாலத்தில் இரண்ணிய கர்ப்ப ரூபனான எனது சங்கற்ப மாத்திரத்தா லுண்டாயின ரென்ப தையும் நீ யறிவாயாக. *

சர்வலோக மகேசுரத் தன்மை யென்னிடத் துண்டென்பதை யறிந்தவர் என்னை இவ்வாறு பஜிப்பரெனப் பகவான் கூறல்.

அருச்சுனா ! யானே சர்வ லோகத்திற்குங் காரணன்; அவை யென் சந்நிதான விசேஷத்தாலேயே நடைபெறுகின்றனவென் றிவ் விதமாகச் சர்வ லோகத்திற்கும் மகேசுவரனான என்னைச் சற்குரு வாயிலாகவும் சற்சாஸ்திர வாயிலாகவு முள்ளவா றறிந்த அதிகாரி புருஷர்கள் என்னிடத்திலேயே தமது பிராணனுடன் சிந்தையை வைத்துத் தியானஞ் செய்வர் ; என்னை யறியாதுள்ள தமது மாணாக் கர்களையும் தாம் தியானஞ் செய்யும் அவ்விதமாகவே தியானஞ்செய்யு மாறு செய்வர்; தம்மை யொத்தார் வரின் அவருடன் என்னையே சுருதி

* இந்திரன் முதலிய தேவர்களும் பிருகு முதலிய மகரிஷிகளும் பிறரும் என்னிடத்துத் தோன்றி யிருத்தலினாற்றான், எனது பிரபாவத்தை யறியா திரு க்கின்றனர் ; என்னுடைய கிருபையா லென்னைத் தமக் கபேதமாக அறிந்தவர் சர்வபாவாகிதராய்ப் பரகதி யடைவர் ; நான் புத்தி பொறை முதலியவற்றிற்கே யன்றி, பிருகு முதலிய சப்த மகரிஷிகளுக்கும், சுவாயம்பு முதலிய பதினான்கு மனுக்களுக்கும், சநகர் முதலிய நான்கு மகரிஷிகளுக்கும் காரணமா யிருத்த லின், சர்வலோகத்திற்கும் ஈசனா யிருக்கின்றே னென்று பகவான் அருச்சுன னுக்குக் கூறினானென்க.

யுக்தி வாயிலாக வெடுத்துப் புகழ்ந்து பேசுவர், இவ்வாறு பஜிப்பதினால் சந்தோஷமடைந்து, இன்பவடிவமாக விளங்குவர் †

## இவ்வாறென்னைப் பஜிப்பவர் எனது நிர்க்குண வடிவத்தை அடைவரெனப் பகவான் கூறல்

அருச்சுனா! இவர் நெப்போதும் பரமேசுவரனான என்னைப் பிரீதி பூர்வமாகப் பஜனஞ் செய்பவராகலின், யான் அவர்கண் கிலேசத்தை யொழிக்க, என்று வாஸ்தவ சொரூபமாகிய நிர்க்குண வடிவத்தை ஆராய்ந்தறிதற்குரிய புத்தியைக் கொடுத்துக் காத்து, அவர் விரும்பும் வரங்களையுங் குறைவறத் தந்து, அவ்வாறு தந்த வரங்களால் அவர் அறியும் பொருளாய், (யானே பரவாசுதேவனென்று சிந்தனைசெய்யும் அவரது சித்தத்தின்கண் நிலைபெற்று நின்று), அவரது மனத்தின்கணுள்ள அஞ்ஞானத்தா லுண்டாய ஆவரண வடிவ இருளனைத்தையும் மறைதலில்லாத (யானே பரவாசுதேவனென் றுணரும் தத்துவ) ஞான வடிவ விளக்கின் பிரகாசத்தினாலே நாசமாகுமாறு செய்வேன், (அதனால், அவர்கள் பரவாசுதேவனான யானாகவே விளங்குவர்) என்று கூறியருளினார் §

---

† பிராணனுடன் சிந்தையை வைத்துத் தியானஞ் செய்தலாவது யோகாப்பியாசத்தோடு பகவானைத் தியானஞ் செய்தலாம். யோகாப்பியாச முடையவர் இந்திரிய வியவகாரஞ் செய்வ தொழிந் திருப்பரென்பதிங் குணர்த்தற் பாலதாம்.

§ கிலேசமென்பது இங்கு அதற்கேதுவான காம வெகுளி மயக்கங்களை. ஆவரணம் மறைப்பு அஃதிங்கு ஆத்மா இல்லை இருந்தால் தோன்றாதா வென்பதாம். அவர் விரும்பும் வரங்கள் - சிரவண மனன - நிதித்தியாசனங்களாம். விளக்கின் பிரகாசத்தாலே ஓரறைக்க ணிருந்த இருள் முற்றுங் கெடுவதுபோல யானே பரவாசுதேவனென் றுணரும் தத்துவ ஞானத்தின் திடத்தாலே ஒரு சித்தத்தின்க ணிருந்த அஞ்ஞான காரியமான ஆவரண முற்றும் கெடுவதாமென்பதும், விளக்கால் இருள் கெட்டபோது அவ்விருளா லறியாதிருந்த பொருளே விளங்குதல் போலத் தத்துவ ஞானத்தால் ஆவரணங் கெட்டபோது, அவ்வாவரணத்தா லறியாதிருந்த பரவாசுதேவ வடிவ ஆத்மாவே விளங்குகின்றதென்பதும் இங்குணர்த்தற் பாலனவாம்.

### இவ்வாறு பகவானது விபூதியையும் சர்வஞ்ஞத்துவ முதலிய ஐசுவரியமாகிய யோகத்தையும் சாமானியமாகக் கேட்ட அருச்சுனன் அவற்றை விசேஷமாகக் கேட்க விரும்பி, பகவானைத் துதித்தல்.

*பகவானே! தம்முள் வேற்றுமையுடைய பிறப்பில்லாதவன், நிரு சியப் பொருள்களுள் எதனிடத்திலும் நீங்காதுள்ள வியாபகன், பேரானந்த வடிவினன், சர்வ ஜகத்திற்குங் காரணமாயுள்ள சொப்பிரகாசன், பரபிரஹ்மம், நாசமற்றவன், வேதங்கள் குறிப்பிட்டுக் கூறுதற்கரிய புருஷோத்தமன், எல்லாவற்றையும் பெற்றவன் என்றிவ்வாறு தேவரீரை நாரதர்-அசிதர்-தேவலர்-வியாசர் முதலிய ஞான நிஷ்டையுடைய முனிவர் யாவரும் என்னிடத்துக் கூறிய அனைத்தையும் தேவரீரே அடியேனிடத்து நேரே கூறியருளிச் செய்தீர்.*

### குரு சாஸ்திரங்கள் கூறும் பொருளில் அதிகாரி புருஷன் ஒரு போதும் சந்தேக மடைதல் கூடாது; அப்பொருளுண்மையேயென்று கொள்ளல் வேண்டும் என்று அருச்சுனன் குறிப்பிக்க, அப்பொருளில் தனக்குள்ள சத்தியத்துவ புத்தியைக் கூறல்

*சர்வ பூதங்கட்கும் ஒப்பிலாதுள்ள காரணனே! சர்வ பூதங்கட்கும் ஈசனே! உத்தமர்கள் துதிக்கின்ற சூரியன் முதலிய தேவதைகட்கும் உலகங்களுக்கும் தலைவனே! 'நிருபாதிகனும் சோபாதிகனுமான என்னை யானறிவித்தா லல்லாமல், அறிதற் குரியவர் எவர்? குருவின் உபதேச மின்றி என்னை யானே யறிவன்' என்று தேவரீர் அருளிச் செய்த வாக்கியங்களாலுணரத்தக்கனவாகவுள்ள அப் பொருளனைத்தும் உண்மையேயாம்; அடியேனும் அவ் வுண்மையை நிச்சயித் துணர்ந்து சந்தேகத்தினின்றும் நீங்கினேன்.* †

### எவ்வெப் பொருள்களை உமது விபூதியென்று சிந்தனைசெய்தால் என் சித்தம் ஒரு முகமாமோ அவ்வப் பொருள்களை விரிவாகத் திருவாய் மலர்ந்தருளல் வேண்டுமென்று அருச்சுனன் பிரார்த்தித்தல்.

*பகவானே! உலகத்தின்கண் தம்முள் வெவ்வேறு தன்மையனவாக விருக்கும் பொருள்களுள் எப்படிப்பட்ட வடிவங்கள் உண்மை*

† ஈசன் - நியமிப்பவன். பகவானது நிர்க்குண வடிவம் நிருபாதிக வடிவமாம்; சகுண வடிவம் சோபாதிக வடிவமாம். மாயா ரகித சேதனம் நிருபாதிகப் பிரஹ்மமாம்; மாயா சகித சேதனம் சோபாதிகப் பிரஹ்மமா மென்பதிங்குணர்தற்பாலதாம்.

*யாக வுள்ள தேவரீரது விபூதிகளாமென்பதை மந்த புத்தியுள்ள யான் உணரா திருக்கின்றேன்; அப்படிப்பட்ட தேவரீரது விபூதி அனைத்தையும் தேவரீரையே தஞ்சமாக நம்பியுள்ள எனக்குச் சிறிதும் மறைக்காது யான் சிந்தனை செய்து கடைத்தேறும் மார்க்கமாகத் திருவாய் மலர்ந்தருளல் வேண்டும்.*

பகவான் **7**-வது அத்தியாயத்திலும் **9**-வது அத்தியாயத்திலும் சுருக்கமாகக் கூறிய விபூதியோகங்களை விரிவாக அருளிச்செய்தல் வேண்டுமென்று தான் பிரார்த்தனை செய்ததற்கு அருச்சுனன் காரணங் கூறல்.

*பகவானே! மொழிக்குமொழி தித்திக்கும் உமது திருவாக்காகிய மேன்மையுடைய அமிர்தத்தைக் காதிந்திரிய வாயிலாகப் பானஞ்செய்கின்ற எனக்கு அகமலர் ஒருபோதும் திருப்தி உண்டாகாமலிருக்கின்றது, அக்காரணத்தால் தேவரீரது விபூதி யோகங்களை அடியேனுக்குத் தேவரீர் விரிவாகக் கூறியருளல் வேண்டும்.*

இறப்பு எதிர்வு நிகழ்வு என்னுங் கால மூன்றிலும் சங்கோச விகாசமில்லாதுள்ள பகவான் அருச்சுனன் வினவியதற்கு விடை கூறல்.

*அறஞ்செய விரும்பும் அந்தக்கரணத்தையுடைய அருச்சுனா! விஸ்தாரமாயுள்ள எனது விபூதிகட்கு ஓரளவில்லையாம்; அதனால், தோன்றியுள்ள அவ்விபூதிகளை முடிவுபெறக் கூறுதல் கூடாததாம்; அக்காரணத்தால், அவ்விபூதிகளில் சிறந்தனவாயுள்ள சிலவற்றைக் கூறுகின்றேன்; அவற்றை நீ உன் சித்த மொருமுகமாதற் பொருட்டுக் கேட்கக்கடவாய்.*

சிறந்தனவாக வுள்ள விபூதிகளுள் உத்தம - மத்திம - மந்த அதிகாரிகள் சிந்திக்கத்தக்கனவற்றை முறையாகப் பகவான் கூறல்.

*அருச்சுனா! (சிறந்தனவாயுள்ள எனது விபூதிகளுள் முன்னர் முக்கியமாகச் சிந்தனை செய்தற்குரிய விபூதி யாதோ அதனைக்) கூறுமிடத்து, அஃது எங்கும் பரவியுள்ள பிராணி அனைத்திற்கும் இருதயத்தின்கணுள்ள பிரத்தியகாத்மாவாம்; அது நானேயாம்; தம்முள் வேறுபாடுடையனவாயுள்ள இப்பிராணி அனைத்திற்கும் உற்பத்தியும் ஸ்திதியும் நாசமும் பரமேசுவரனாகிய நானேயாவன்; பன்னிரண்டு சூரியர்களுள் விஷ்ணுவென்னும் பெயருடைய சூரியனும் நானேயாவன்; தேவதைகளுள் ஒரு வகுப்பாயுள்ள சப்த மருத்துக்களுள் மரீசியென்னும்*

மருத்துவும் நானேயாவன்; அக்கினி முதலிய ஒளிப் பொருள்களுள் எங்கும் பிரகாசிக்கின்ற சூரியனும் நானேயாவன். †

பகவான் பாகியத் தியானங் கூறல்.

அருச்சுனா ! அசுவினி முதலிய நட்சத்திரங்களுள் அவற்றிற்குத் தலைவனா யுள்ள சந்திரனும் நானே; இருக்கு-யசுர்-சாமம்-அதர்வண மென்னும் வேதம் நான்கனுள் கானத்தின் மதுரத் தன்மையால் மிகப் பிரியமா யுள்ள சாமவேதமும் நானே; அக்கினி-வாயு முதலிய தேவதைகளுள் அத் தேவதைகட்குத் தலைவனா யுள்ள இந்திரனும் நானே; சுரோத்திர முதலிய இந்திரியங்களுள் அவற்றிற்குத் தலைமையா யுள்ள மனமும் நானே; யந்திரம்போலச் சுழலுகின்ற சரீர வடிவமா யுள்ள பூதங்களுள் புத்தி விருத்தி வடிவச் சேதனமும் நானே; ஏகாதச (பதினொரு) உருத்திரருள் தன தன்பர்க்கு நிரதிசய வடிவ மோட்சத்தைத் தரும் சங்கரனென்னும் மந்திர ரூபமான உருத்திரனும் நானே; யட்ச ராட்சதருள் சர்வ தனத்திற்குந் தலைவனாயுள்ள குபேரனும் நானே. ‡

(இரத்தின மயமான சிகரங்களையுடைய) மலைகளுள் மகாமேரு மலையும் நானே; அஷ்ட வசுக்களுள் அக்கினியும் நானே; சேனாபதிகளுள் தேவ சேனாபதியான சண்முகனும் நானே; நீர்நிலைகளுள் கட

† இங்குப் பிரத்தியகாத்மா பிரஹ்மமே; அஃதாவது நானே பிரஹ்மமென்று அபேத சிந்தனஞ் செய்வது உத்தமாதிகாரிக் குரியதென்றும், பிராணிகளின் உற்பத்தி - ஸ்திதி - நாசங்களுக்குக் காரணன் பரமேசுவரனென்று காரணகாரிய நோக்கம் பற்றிச் சிந்தனஞ் செய்வது மத்திம அதிகாரிக் குரியதென்றும், சூரியருள் விஷ்ணுவா யிருக்கின்றான் பகவானென்றற் றொடக்கத் தனவாகப் பாகியமாய்ச் சிந்தனஞ் செய்வது மந்தாதிகாரிக் குரியதென்றும் இங்குணர்தற் பாலனவாம். இனி இவ்வத்தியாய முற்றும் கூறப்படுவன மந்தாதிகாரியின் தியானத்திற் குரியனவாம்.

‡ ஆதித்தியருள் விஷ்ணுவும், மருத்துக்களுள் மரீசியும், ஒளிப் பொருள்களுள் சூரியனும, நட்சத்திரங்களுள் சந்திரனும், வேதங்களுள் சாமவேதமும், தேவர்களுள் இந்திரனும், இந்திரியங்களுள் மனமும், சரீரரூபமாயுள்ள பூதங்களுள் புத்தியும், உருத்திரருள் சங்கரனும், யட்ச ராட்சதருள் குபேரனும், பரமேசுவரனது விபூதிகளுள் சிறந்தவரா யிருத்தலின், அவ்விஷ்ணு முதலியோர் பரமேசுவர வடிவமாகத் தியானஞ் செய்வதற் குரியவரென்பதும், இனிக் கூறப்படுவனவும் பரமேசுவரனது விபூதிகளுள் சிறந்தனவாம்; அவையும் பரமேசுவர வடிவமாகத் தியானஞ் செய்தற் குரியனவாமென்பது மிங்குணர்தற்பாலனவாம்.

னும் நானே; தமது பயனைத் தருவதில் கெடுதலில்லாத அசுவமேதம் சோதிஷ்டோம முதலிய யாகங்களுள் ஹிம்சை முதலிய தோஷங்களுள் யாதொன்றுமில்லாமையால் மிக்க சுத்தமாயுள்ள ஜபவடிவ யாகமும் நானே; உலகத்தினுள் நிலைபெற்றிருப்பனவென்று கூறப்படுகின்ற ஸ்தாவரப் பொருள்களுள் இமாலய பர்வதமும் நானே, பிரஹ்ம புத்திரராய மகரிஷிகளுள் பிருகு மகரிஷியும் நானே, மண்ணுலக விண்ணுலக வேந்தரின் புரோகிதருள் இந்திரனது புரோகிதரான பிருகஸ்பதியும் நானே, அர்த்த வாசகமாகப் பொருந்திய பதவடிவ வாக்குக்களுள் பிரஹ்மவாசகமாகிய ஓம் என்னும் ஏகாட்சரவடிவப் பிரணவ பதமும் நானே, வனஸ்பதி யென்னும் விருட்சங்களுள் பிப்பல விருட்சமென்னும் அரச மரமும் நானே, தேவர்களாயிருந்து வேத மந்திரத்தின் தரிசனத்தால் ரிஷிகளாகிய தேவரிஷிகளுள் தமக்கு உவமை சொல்லற்கரிய நாரதரும் நானே, கானஞ்செய்யும் பாக்கியத்தைப் பெற்ற கந்தருவருள் சித்திரரதனும் நானே, இப்பிறப்பின்கண் யாதொரு முயற்சியும் செய்யாதிருந்தும் சன்மாந்தரத்திற் செய்துள்ள முயற்சியாலே தரும-ஞான-வைராக்கிய-ஐசுவரியத்தன்மை முதலிய குணங்களைப் பெற்றுப் பரமாத்மாவை நிச்சயித்துணர்ந்திருப்பவராய சித்தர்களுள் கபில முனிவரும் நானே, குதிரைகளுள் பாற்கடலை அமிர்தம் பெறுதற்பொருட்டுத் தேவாசுரர்கள் கடைந்த காலத்தில் அதி லுண்டாய உத்தம சாதியாய உச்சைச்சிரவமென்னும் குதிரையும் நானே; யானைகளுள் பாற்கடலிற் பிறந்த ஐராவதமென்னும் யானையும் நானே, மன வுணர்வுடைய மக்களுள் யாவரையும் அறநெறியிற் செலுத்தி-மறநெறியிற் செல்லாவாறு தடுக்கும் வேல்வேந்தரும் நானே; பகைவரை அழித்தற்குரிய ஆயுதங்களுள் ததீசி முனிவரின் எலும்பினின்றுமுண்டாய வச்சிராயுதமும் நானே, சர்ப்பங்களுள் சர்ப்ப ராஜனான வாசுகியும் நானே; சிறந்த நாகங்களுள் தனக்குவமை சொல்லற்கரிய நாகராஜனான அநந்தனென்னும் ஆதிசேஷனும் நானே, பசுக்களுள் விரும்பியவற்றைக் கொடுக்கும் காமதேனுவும் நானே இவை அனைத்தையும் யான் கூறிய முறையாக யானென்றே நீ அறிவாயாக. ¶ •

¶ சர்ப்பம் விஷமுடையது, நாகம் விஷமின்றியது. காமதேனு வசிஷ்டருக்குரியதா யிருப்பது.

போர்செய்யும் வன்மை பொருந்திய தோளையுடைய அருச்சுனா! நீர்நிலைகளில் வசிக்கும் பிராணிகளுள் அப்பிராணிகளுக்கு அரசனான வருணனும் நானே! கண்டுஞ் செய்பவருள் யமனும் நானே, புணரும் வேட்கைவடிவ எல்லை யில்லாத காமங்களுள் புத்திரோற்பத்தியின் பொருட் டுண்டாகும் காமமும் நானே, திதியின் வமசத்திற் பிறந் துள்ள தைத்தியருள் தனது சாத்துவிகத் தன்மையால் யாவர்க்கும் மேன்மையைச் செய்கின்ற பிரகலாதனும் நானே, மிகுதியாகப் பொருள்களைக் கணக்கிடும் பொருள்களுள் காலமும் நானே

அருச்சுனா! பறவைகளுள் தனது பசையைப் போர்செய்தழித்து வருகின்ற பறவை வேந்தாகிய கருடனும் நானே, மிருகங்களுள் பிறர் நெருங்குதற்கரிய மிருக வேந்தாகிய சிங்கமும் நானே, வேகமுடைய பொருள்களுள் வாயுவும் நானே, போரில் மிகு பிரிய முடையவராய்த் தம் பகைவர் மீது பிரயோகிக்கின்ற ஆயுதபாணிகளா யுள்ள வீரருள் தசரத புத்திரனான ஸ்ரீராமனும் நானே, மீன்களுள் சுறாமீனென்னும் மகரமச்சமும் நானே, யமுனை - கோதாவரி முதலிய புண்ணிய நதிக ளுள் மிகு சிரேட்டமா யுள்ள கங்கையும் நானே, வாதம் - ஜல்பம் - விதண்டை யென்னும் கதைகளுள் மேலா யுள்ள வாதமும் நானே, வித்தைகளுள் அதிகாரி புருஷரன்றி மற்றவர் பெறுதற்கரிய அகம் பிரஹ்மாஸ்மி (நான் பிரஹ்மமா யிருக்கிறேன்) என் றுணர்வதாகிய பிரஹ்ம வித்தையும் நானே, வர்ண வடிவமாகவுள்ள அட்சரங்களுள் சர்வ வாக்குக்களின் வடிவமா யுள்ள அகரமும் நானே, (முற்கூறிய நாசமுடைய காலமேயன்றி) நாசமில்லாத காலமும் நானே, நான் அங் ஙனமாக விருப்பதன்றி, வேற்றுமைத் தொகை முதலிய அறுவகைத் தொகையுள் மேலாய உம்மைத் தொகையும் நானே, பயன் தருபவ ருள் இருவினைப் பயன்களையும் சீவர்க்குத் தரும் அநந்தாயாமி யென்னும் ஈசுவரனும் நானே, சம்மாரஞ்செய்பவருள் நிலைபெற்ற உயி ர்களைத்தையும் சம்மாரஞ் செய்யும் யமனும் நானே, அவ்வுயிர்களைப் பிறக்கச் செய்பவனும் நானே §

§உண்மைப் பொருளை யறியும் விருப்பமுள்ளாரிருவரிடத் துண்டாகும் வினா விடையாகிய கதை வாதம். யுக்திப் பிரமாணங்களில் வல்ல பண்டிதர்களின் வாதம் ஜல்பம். யுக்திப் பிரமாணங்களில்லாத மூடாது வாதம் விதண்டை யாம். சொல்வார் பலரை யுடையதாய்ப் பூர்வோத்தரப் பட்சத்தைப் பிரதிபாதிக்கும்

எனக கனபனு பிருபப கனறி கணபனுயு மிருககும அருச சுனு! பெணகளுள புகழ - திரு - வாககு - மேதை - பொறை - திணமை - நினைபபு எனறெணணபபடுகினற சபத மாதருமநானே, கார - கூதிர - முனபனி - பினபனி - இளவேனில - முதுவேனில எனனும பெருமபொழு தாறனுள ஈறு மண முராா மலாகளுக கிடமாச வருகினற இளவேனிற கால மெனனும வசநத ரிதுவும நானே, கானஞ் செயததறகுரிய சாமமேழனுள சிறநத பிருகத சாமமும நானே, காம செயயும உபகாரததால உலசககாா சளிபபடையுமாறு வருகினற சிததிரை முதலிய மாதஙகளுள மிசக கடபவெபபஙகள ளினமையால சுகததிறசேதுவாய யாவரும புகழ வருகினற மாாசழி மாதமும நானே, பின கூறபபடும விபூதிகளும நானே ¶

பின் கூறபபடுமே விபூதிகளும் நானே யென்பதைப் பகவான் கூறல்

மலைபோலும தோளையுடைய அருசசுனு! சநதசுககளுள காயததிரிச சநதசும நானே, வஞசனை செயயும தொழிலகளுள பழைமையாயுள்ள சூதாடுந தொழிலும நானே, தாம மேறகொணட காரியததைச் செயது முடிகக நிசசயிததிருபபவரது முயறசிகளுள தவறுது பயனையடைவிததற சேதுவாயுள்ள முயறசியும நானே, தமபகைவரை வெலவாரிடததுள்ள சததுரு ஜயமெனனும வெறறியும நானே, மிகக வல

வாககியக கோவை கதையாம நாசமிலலாத காலமெனறது இஙகு க்ஷணம-கடிகை முதலிய வடிவமாயுள்ள காலமனைததையுமறியும காலகாலனுயுள்ள பரமேசுவரனையாம வேறறுமைத தொகை முதலிய அறுவகைத தொகையுள உமமைத தொகை அனைததுமொழியினும பொருள சிறபபுடையதாயிருததலின, அது மறறத தொகையினுள சிறபபுடையதாயிறறு உமமைத தொகைககு உதாரணம —கபிலபரணா, புலிவிறகெணடை எனறறறொடககததனவாம

¶புகழ - கீரததியாம அஃதாவது பிரககியாதியாம, தாம ஆதத காம மூனறும திருவாம இது ஸ்ரீ எனபபடும, சாவாாததததையும விளககும சமஸகிருத பாஷைவடிவச சரஸவதி வாககாம, பனனூறபொருளையும கிரகிககும சகதி மேதையாம, மகிழசசியுறற காலததிலும வாட்டமுறற காலததிலும சிததம விகாரமடையாதிருததல பொறையாம, பல திறததனவாய துனபஙகள நேரிட்டகாலததினும தேகேநதிரியஙகளை ஸதிரமாகச செயயுஞ சகதி திணமையாம, இது திருதியெனபபடும, முனனனுபவிதத பொருளகளைபபினனா நினைபபது நினைபபாம, இது ஸமிருதி யெனபபடும சாவததையும ஈசுவரவடிமாக இநதிரன துதிசெயத சாமவேதததின ஒருபாகம இஙகுப பிருகத (பெரிய) சாமம.

லமை யுடையாரிடத் துள்ள வல்லமையும நானே, சத்துவ குண முடையா ரிடத்துள்ள (அகத் குணத்தின் காரியமான) காம - ஞான - வைராக்கிய - ஐசுவரியங்களும் நானே, ஞானிகளிடத் துள்ள சீவப பிரஹ்ம ஐக்கிய ஞானமும நானே *

யாதவர்களுள் வசுதேவனது புத்திரனெனப் பிரசித்தமாகச் சொல்லப்பட்டு, உனக்குப் பிரஹ்ம வித்தையைப் போதிக்கின்ற இந்தக் கிருஷ்ணனும் நானே, சூக்ஷுமமாக நற்பொருள்களைப் பகுத்தறியும் தன்மையுள்ள கவிகளுள் சுக்கிரனென்னும கவியும நானே, பெருஞ் சருணை பொருந்திய பாண்டவருள் அருச்சுனனென்னும் நீயும நானே, பெருமை பொருந்திய மனனசீலரெனனும முனிவருள் வேதவியாச முனியும நானே, எண்ணுதற்கரிய இரகசியப பொருள்களுள் வாக்கிந் திரிய நிக்கிரகவடிவ மௌனமும நானே $

அருச்சுனா! மிகப பெரிய இவ்வுலக மனைத்திற்கும சேதனவடிவச காரணமும நானே, பரமேசுவரனான என்னைத் தவிர யாதொரு பொருளு மில்லை சராவுஞ்சரா யிருப்பவைசகும வருசதமுமமுமுபினும பரமேசுவரனாகிய என்து திவ்விய விபூதிகளின முடிவை யறிதலும முடியாது, சொல்லுதலும முடியாது எனது முடிவில்லாத விபூதிகளை யானுனக்கு ஏகதேசமாய வகுத்துக் கூறினேன இவ்வுலகத்திலே பெருமை பொருந்திய ஐசுவரியத்தை யுடையன இவை, மெய்யமமை யான பெருமுயற்சி யுடையன இவை யென்று கூறப்படும இவ்வரிய பிராணி யனைத்தும என்து சக்தியி னமசத்தா லுண்டாயினவாமென்று நீ அறியக்கடவாயாக ¶

* நியமமாக அட்சரங்களையும பாதங்களையு முடையன சந்தசுக்களாம அவற்றுள இருபத்துநான்கு அட்சரங்களையுடையது காயத்திரிச சந்தசுவாம இச் சந்தசுக்களனைத்தும மந்திரங்களாம இதனால வேத மந்திரங்களுள காயத்திரி மந்திரமாகப பகவானிருக்கின்றானென்பது பெறப்பட்டதெனக

$ வாக்கிந்திரிய நிக்கிரகமெனனும மௌன(பேசாவிரத) முடையவனது உட் கருத்து எவர்க்கு மரிதற்கரியதாயிருத்தலின அது மிக இரகசியமானதாமெனக

¶ விருட்சங்க ளுண்டாதற்கு விதைகள் காரணமா யிருத்தல போல இவ்வுலக முண்டாதற்குப பகவான காரணமா யிருக்கின்றான பகவான தமது காரியமாயுள்ள உலகத்தில இருத்தல விளங்குதல வடிவமாகவியாபித்திருந

அருச்சுனனுக் கிவ்வாறு தமது விபூதிகளை யேகதேசமாகக் கூறிய பகவான் உலகனைத்தும் எமது விபூதியேயாமெனக் கூறல்.

"கஞ்சன் ஆருயிர் போய்த் துஞ்ச (சாவ), அலைகடல் வளராதே போந்து (வந்து) ஆயர் (இடையர்) பால் வளர்ந்த" பகவான் அருச்சுனா! இனிப் பலவாறாக என்னுடைய விபூதிகளை யெடுத்துரைப்பதால் எனது உத்தம பக்தனா யுள்ள உனக்கு யாது பயனும்? இந்தப் பல திறத்தனவாக வுள்ள பிராணியனைத்தும் உலகனைத்தும் பரமேசுவரனான எனது அவித்தியாபாத மென்னும் ஏகதேச பாகத்திலே அடங்கி யிருப்பனவாம்; (அதனா லவை யனைத்தும் எனது விபூதிகளேயாம்); (கயிற்றின் ஏகதேச பாகத்தில் தோன்றும் பாம்போடு கயிறு உண்மையில் கலவா திருத்தல்போல) நான் அவற்றோடு கலவா திருக்கின்றேன் என்றருளிச் செய்தனர். *

**10 — விபூதியோக அத்தியாயம்**

*முற்றிற்று.*

---

தலின், அவரைத் தவிர யாதொரு பொருளுமில்லை; பகவானது விபூதிகள் எல்லையற்றனவா யிருத்தலின், அவற்றைச் சர்வஞ்ஞரா யுள்ள முனிவர்க்கும் அறிதலு முடியாது, உரைத்தலு முடியாது; பெருஞ் செல்வமுடையவரும் பெரு முயற்சி யுடையவரும் பகவானது சக்தியின் அம்சத்தா லுண்டா யிருப்பவ ராவரென்பன இங்குணர்தற்பாலனவாம்.

* பரமான்மாவிற்கு நான்கு பாதமுண்டு; அவற்றுள், மூன்று பாதம் சத்-சித்-ஆநந்தமாம்; நான்காவது பாதம் அவித்தையோடுகூடி உலக காரணமா யுள்ள சேதனமாம். இஃது அவித்தியாபாதமென்று சொல்லப்படுகின்றது.

நிரவயவ-நிராகாரமா யுள்ள ஆத்மாவிற்குப் பாதம் அஃதாவது அம்சம்-அல்லது பாகம் உண்டென்பது பொருந்தாதாம்; ஆனால் கடமென்னும் உபாதி (தடை) நோக்கத்தால் ஆகாயத்திற்குக் கடாகாயம் மகாகாயமென்னும் கற்பனை சம்பவித்திருத்தல்போல, அவித்தை யென்னும் உபாதி நோக்கத்தால் ஆத்மாவிற்கும் அவித்யா பாதம்-சத்-சித்-ஆநந்தபாத மென்னும் கற்பனை சம்பவித்திருக்கின்றதென்ப திங்குணர்தற் பாலதாம்.

ஆதித்தியருள் விஷ்ணுவென்னுஞ் சூரியன் நானே யென்றற்றொடக்கத்தனவற்றைக் கூறியது மந்தாதிகாரியை நோக்கியாம்; நீ இவ்வாறு நோக்குவதொழிந்து, உலகு உயிரனைத்தும் எனது விபூதிகளேயாமென்று என்னைத் தியானஞ் செய்வாயாக வென்று பகவான் அருச்சுனனுக்குக் கூறினரென்க.

# 11 — விசுவரூப அத்தியாயம்.

**பத்தாவது அத்தியாயத்தில் பகவான் தமது நாநாவிதமா யுள்ள விபூதிகளை யருளிச் செய்து முடிவில் உலகு உயிரனைத்தும் எனது ஏகதேசபாகத்தில் ஒடுங்கி யிருப்பனவாம், யானே அவற்றோடு கலவாதிருக்கின்றே னென்று தமது சர்வ விசுவான்மக சொரூபத்தை யருளிச் செய்தமையைக் கேட்ட அருச்சுனன் அதனால் பரமானந்த மடைந்து, பகவானது சர்வ விசுவான்மக சொரூபத்தைத் தரிசித்தல் வேண்டுமென்று மிச்சை கொண்டு பகவான் பூர்வம் அருளிச்செய்த பொருளை வியந்து துதித்தல்**

*துளசிமாலை யணியப்பெற்றுச் சுருளாகப் பொருந்தி யிருக்கின்ற முடியை உடையவரே! சொல்லும் மனமுஞ் சென்று பற்றுதற் கரிய வரே! வண்டி வடிவமாக உருண்டு வந்த சகடா சுரனைச் சாமாறு உதைத்துக் கொன்றவரே! உயிர் அனைத்திற்கும் அந்தரான்மாவா யிருப்பவரே! சோக மோகங்கள் நிறைந்துள்ள சமுசாரக் கடலில் முழுகி வருந்துகின்ற என்னிடத் திரக்கங் கொண்டு தேவரீர் கூறி யருளிய உமது திருவாக்காகிய அரிய அமிர்தத்தை யெனது சாதிந் திரியமாகிய வாயினால் நிறைய உண்டு, அதனால் மோகம் நீங்கினவ னானேன்.* *

**விசுவரூப தரிசனத்தில் விருப்பம் மிக்க அருச்சுனன் பகவானை நோக்கி அவ் விசுவ ரூபத்தைக் காட்டல் வேண்டுமென்று பிரார்த்தித்தல்**

*வாக்கும் மனமும் எட்டி அறிதற்கரிய புருஷோத்தமரே! நீர் எவ ரது திருஷ்டிக்கும் தோன்றாவாறு எவ்விடத்தும் வியாபித்து, ஞானம் - ஐசுவரியம் - சக்தி - பலம் - வீரியம் - தேஜசு என்கிற ஆறுடைக்கத் தகு குணங்களோடு கூடி யிருக்கின்ற அநந்த திருக்கோலமானது உள்ளபடி அடியேனுக்கும் தரிசித்தற் குரியதாமோ? உரியதாமாயின், தேவரீர் எனக்கு அதனைக் காட்டி யருளல் வேண்டும்.* †

---

* *இங்கு மோகமாவது யான் இந்தப் பீஷ்மர் துரோணர் முதலாயினோரைக் கொல்வேன், அவர்கள் என்னால் கொல்லப்படுவ ரென்கிற ஆறுடைக்கத்து விப ரீத புத்தியாம்.*

† *புருஷோத்தமர் - புருஷர்களுள் மேலாக இருப்பவர் அநந்த திருக்கோல மென்றது பகவானது விசுவரூபத்தை*

பழமறைத்தோர் கர்யானுன பகவான் விசுவ ரூபத்தைத் தரிசித்தல் வேண்டுமென்னும் பிரியத்தால் வருந்துகின்ற மனமுடைய அருச்சுனனுக்குத் தமது விசுவ ரூபத்தைக் காட்ட விரும்பிக் கூறல்

அருச்சுனா! உற்பத்தி ரஹிதத்துமாய் விளங்கும் எனது விசுவரூபம் பல திறத்தனவாய அளவின்றியுள்ள அவயவ விசேஷங்களையுடையதாம், அளவின்றியுள்ள நீல பீதாதி நாநா வர்ணங்களையுடையதாம், ஒருவரால் கற்பித்துண்டாக்கப்படாததாம், ஆகாயத்தின் வியாபகம் தன்னை நோக்க வியாப்பியமாமாறு வியாபகமாயிருப்பதாம், கண்ணுற் காண்டற்கரிதாயிருப்பதாம் இவ்வாறாய எனது விசுவரூபத்தைக் காட்டுகின்றேன், நீ காண்பாயாக ¶

பகவான் மேற்குறிப்பிட்டுக் கூறிய தமது விசுவ ரூபத்தில் சிலவற்றைக் குறிப்பிட்டுக் கூறல்

அருச்சுனா! (எவ்வேழு வகையாயுள்ள) நாற்பத்தொன்பது மருத்துவரும், பன்னிரண்டு சூரியரும், அஷ்ட வசுக்களும், ஏகாதச ருத்திரரும், (அசுவினிகுமாரர் இருவரும்) என் விசுவரூபத்திலேயே யிருக்கின்றனர், பூர்வம் காணுமையால் யாவரும் காண விரும்பும் அற்புதமாய பல வடிவங்களும் என் விசுவ ரூபத்திலேயே யிருக்கின்றன, அந்த மருத்துவர் முதலாயினோரையும் அற்புதமாய வடிவங்களையும் உன் மனத்துடன் பொருந்தக் காணக் கடவாய். $

¶ எனது விசுவரூபம் விசித்திரமாய அளவு கடந்த அவயவங்களையும் வர்ணங்களையுமுடையதாம், எனக்கு வேறொரு கர்த்தா வின்மையின், எவராலும் சிருஷ்டிக்கப்படாததாம் ஆகாயமும் அணுவென்று கூறும்படி வியாபகமாயிருப்பதாம் கண்ணுற் காண்டற்கரியதாம், அதனை யான் காட்டுகின்றேன், நீ காண்பாயாகவென்று அருச்சுனனுக்குப் பகவான் கூறினரென்க

$ அற்புதமாய வடிவங்களென்பது மருத்துவர் முதலாயினோர் ஒழிந்த இந்திரன் முதலாயினோரும், மேருமலை முதலாயினவும் வெற்றித் தோலவிகளும் பிறவுமாம்

நூறுகோடி வருஷ பரியந்தம் தேடிச் சென்று காண முயற்சி செய்தாலும் காண்டற்கரிய சராசரப் பொருள்களனைத்தையும் எனது திருமேனியிலுள்ள ஒரு நுனி மாத்திரமான அவயவத்தின்கண் காண்பாயாகவென்று அருச்சுனனுக்குப் பகவான் குறிப்பிட்டுக் கூறினரெனக.

### சஞ்சயன் திருதராஷ்டிரனுக்குப் பகவான் தமது விசுவ ரூபத்தை அருச்சுனன் காண, அவனுக்கு ஞானக்கண் தந்தமையைக் கூறல்

திருதராஷ்டிரரே! மகா யோகீசுவரனான கிருஷ்ணபகவான் என்றிவ்வாறு கூறி, அவ்வருச்சுனனது பிரகிருதி சம்பந்தமாயுள்ள கண் இரண்டும் தமது விசுவ ரூபத்தை நன்றாக அறியமாட்டா வென்று கருதி, அவனுக்குத் திவ்விய நேத்திர மென்னும் ஞானக் கண்ணைக் கொடுத்து, அப்போ தவனுக்குக் கூறியவாறே விசுவ ரூபராய அருச்சுனன் தவிர, அங்குள்ள மற்றவர்க்கு விளங்காவண்ணம் நின்றனர்.

### பகவான் அருச்சுனனுக்குத் தமது விசுவ ரூபத்தைக் காட்டிய விதத்தைச் சஞ்சயன் கூறல்

திருதராஷ்டிரரே! அக் குருக்ஷேத்திரத்தில் பகவான் அருச்சுனன் பொருட்டுக் கொண்டருளிய விசுவ ரூபத்தை இங்கு எவர்க்கும் அளவு செய்து கூறுதல் ஒருவாற்றானும் முடியாததாம்; ஆயினும், யான் சிறிது கூறுகின்றேன்; பகவான் வண்டுகள் கங்கித் தேனுண்ணும் புஷ்ப மயமாயுள்ள திவ்விய மாலைகளும், பீதாம்பர முதலிய திவ்விய வஸ்திரங்களும் சந்தனம் கருப்பூர முதலியசல்வைப பூசசுக்களும் தரித்துள்ள விசுவ ரூபத்தைக் கொண்டு அருச்சுனனுக்கு அதனைக் காட்டியருளினா. அவ் விசுவ ரூபம் எல்லையில்லாமல் எவ்விடத்தும் நிறைந்திருந்தது. அதன் பிரகாசம் அளவில்லாத பலகோடிசூரியர்கள் மேக முடைய ஆகாயத்தில் ஏக காலத்தில் வந்து உதயமாவதை யொத்திருந்தது. அவ் விசுவ ரூபத்தினது நலவிலக்கண மமைந்து பொருந்தி யிருக்கின்ற கால்களும் கைகளும் அளவிறந்தனவாம், அழகமைய அணிந்துள்ள ஆபரணங்களும் அளவிறந்தனவாம்; வாய்களும் அளவிறந்தனவாம்; மிகப் பிரகாச முள்ள முகங்களும் அளவிறந்தனவாம்; சக்கரம் கதை முதலிய ஆயுதங்களும் அளவிறந்தனவாம்; இன்னு முயர்வான அற்புத வஸ்துக்களும் அளவிறந்தனவாம்.*

பகவான் கொண்ட விசுவ ரூபத்தை அளவிட்டு முற்றுங் கூறல் எவர்க்கு முடியாது, பகவான் மலர்மாலை, மணிமாலை, பீதாம்பரம், கலவைக் குழம்புக ளணிந்த வடிவமாகத் தமது விசுவ ரூபத்தை அருச்சுனனுக்குக் காட்டி யருளினா; அவ் வடிவம் எல்லையின்றி யெங்கும் வியாபகமா யிருந்தது, அதன் பிரகாசத்திற்கு எண்ணில் கோடி சூரிய பிரகாசமும் ஒப்பாகாது, அவ் வடிவம் அளவிறந்த கால் கை முதலியவற்றை உடையதா யிருந்ததென்று திருதராஷ்டிரனுக்குச் சஞ்சயன் கூறினனெனக

**பகவானது கட்டளையின்படி, அவர்தம் விசுவரூபத்தைத் தரிசித்த அருச்சுனனது செயலைச் சஞ்சயன் கூறல்**

திருதராஷ்டிரரே! பகவான் மேற்கூறியவாறு கொண்டருளிய அவ்விசுவரூபத்தின் ஏகதேச பாகத்திலே எப்படிப்பட்ட தன்மையுமுடையனவாயுள்ள பொருள்களனைத்தையும் அருச்சுனன் நேரே தரிசித்து, இனி யான் பிழைக்குந் தன்மையனல்லேனென்று கூறி, ஆநந்தம் பெருக்குண்டாக, அதனால் தான் செய்யத்தக்கது இன்னதென்றுணராமல், அவ்விசுவரூபங்கொண்ட பகவானை, தனது சிரசு பூமியிற் பொருந்துமாறு விழுந்து வணங்குவான்; தன்னுடம்பு முற்றும் மயிர்சிலிர்ப்ப நிற்பான்; தன் கண்ணும் மனமும் கரைந்து உருகுமாறு தன்னிரண்டு கைகளையும் குவித்து உலகனைத்தையும் உயிரனைத்தையும் சிருஷ்டி காலத்திலே சிருஷ்டித்த பகவானெதிரே நின்று, இந்திரன் முதலிய இமையவர்யாவரும் வணங்குங் கடவுளே! உமது விசுவரூபத்திலே எத்தன்மையுடையாரும் அளவிட்டு எல்லை காண்பதில்லாத சராசரப் பொருளனைத்தையுஞ் செவ்வையாகக் காணுகின்றனன்; அயனரியரனென்னும் மும்மூர்த்திகளுள் உலகத்தைப் படைத்தலாற்றி முதலாகவுள்ள பிரமனை வசிஷ்டர் முதலிய முனிவர்களுடனே காண்கின்றனன்; பிறர் நெருங்குதற்கரிய வாசுகி முதலிய சர்ப்பங்களையும் காண்கின்றனன்; வசு - உருத்திரர் - ஆதித்தியர் முதலிய தேவதைகளையும் காண்கின்றனனென்று கூறினான்; பின்னர் அவன் பகவானை நோக்கி, சர்வேசுவரனே! தண்ணிய கிரணத்தையுடைய இரத்தின கிரீடத்தையும், கதாயுதத்தையும், சக்ராயுதத்தையும் தரித்துப் பிரகாசத்தால் சூரியனையும் அக்கினியையும் ஒத்து ஏகமாய் விளங்குகின்ற உமது விசுவரூபத்திலே ஆராய்ந்து நோக்கி, கண்களும் வயிறுகளும் தோள்களும் முகங்களும் அநேகமாக உடையனவாகிய உருவங்கள் பலவற்றையும் யான் காண்கின்றேன் என்று கூறினான். இங்ஙனங் கூறிய அருச்சுனன் பின்னரும், பகவானே! தேவரீர் அடியேன் பொருட்டுக் கொண்ட இந்த வடிவம் இத்தன்மையதாய வடிவமென்பதைக் குறிப்பிட்டு அறிதற்கியலாதவனாயிருக்கின்றேன்; இவ்வடிவத்தின் முடிவு - நடுவு - முதலனைத்தையும் அறியாதிருக்கின்றேன்; தனையிறையினிடமும் நடுவுமில்லாததும், நான்கு வேதங்களும் ஆராய்ந்து நிச்சயித்து அதிகாரி புருஷர் அறியுமாறு

உபஜீவிக்கத்தக்கபொருளும், ஜகத்தைத் தருகின்ற மாயைக்கு அதிஷ்டானமாயிருப்பதும், எக்காலத்து மிருப்பதும், சாசுவதமான தரும மனைத்தையும் தம் நிலையினின்றும் வேறாகாதவாறு நிலைபெறச் செய்யுமாக்கமாயிருப்பதாகிய வாழ்வும், ஒரு காலத்திற் பெருகி மற்றொரு காலத்திற் சுருங்காதிருப்பதுமாகிய எனது அநாதியாயுள்ள தெய்வத்தைக் கன்றைத் தொடர்ந்து நிற்கும் பசுவைப் போலத் தொடர்ந்து நின்று என்னெதிரே காணுகின்றேன்.

பகவானே! யான் வெற்றியைத் தரும் பராக்கிரம முடையதும் பூமண்டலத்தைச் சுற்றி வருகின்ற சூரிய சந்திரர்களையே விரிந்தெழுமாறு கண்களாகக் கொண்டு விழிப்பதும், தன்னைச் சேர்ந்தாரைச் சுடும் நெருப்பைப் பலாந்து விளங்கும் முகமாக உடையதும், உலக முற்றும் மயங்குமாறு வியாபித்து, அடைந்த தனது தேஜசால் தகிப்பதுமாயுள்ள உமது விசுவரூபத்தை வியப்படைந்து என்னெதிரே காணுகின்றேன்.

பகவான் தந்த திவ்ய சக்ஷுவால் அவரது விசுவரூபத்தைத் தரிசித்த அருச்சுனன் அவ்விசுவரூபம் சர்வவியாபகமாக இருக்கின்றதெனக் கூறல்.

ஐயனே! தேவரீர் மண்ணுலகும் விண்ணுலகும் நிறையுமாறு வியாபித்து, திக்குகளில் நேரே சென்று விலக்க வில்லாவாறு உமது திருமேனியை விரிப்பச் செய்வீராயின், அற்புதமாயும் உக்கிரமாயு முள்ள உமது திருமேனியைக் கண்டு துன்பமடையாதவர் யாவர்? உலக முற்றும் உமது திருமேனியின் தரிசனத்தால் கலக்க மடைந்திருக்கின்றன, உலக முற்றும் கலக்கமடைந்திருக்கக் கண்டு காணுவீராக. †

யான் பூபாரந் தீர்க்கும்பொருட்டே அவதாரஞ் செய்திருக்கின்றேனென்பதைத் தமது விசுவரூபத்தால் வெளிப்படையாகக் காட்டும் பகவானை அருச்சுனன் நோக்கி யான் உமது விசுவரூபத்தில் இன்னாரின்னாரைக் காண்கின்றேனெனக் கூறல்.

பகவானே! உமது விசுவரூபத்தில் தேவகணங்கள் பய
ந்து தேவரீரைச் சரணமாக அடைந்து வணங்கவும், அருமையான பெருந

† இங்ஙனம் அருச்சுனன் கூறியது பகவான் தாம் கொண்ட விசுவரூபத்தை மறைத்தருளல் வேண்டுமென்பதைக் குறிப்பித்து நின்றது.

நலத்தினையுடைய நாரதர் முதலிய முனிவர்கள் தமது கரங்களைக் கூப்பி நின்று உலகத்தார்க்கு நன்மை யுண்டாமாறு உம்மை ஸ்துதிக்கவும், கூட்டமாகக் கூடிநின்று ஜய ஜய என்று உம்மை வியந்து புகழ்ந்து பேசுகின்ற கபிலர் முதலிய சித்தர் குழாங்களையும் (அவர்களோடு) காண்கின்றேன்; சோர்வடையா முயிரை யுடைய விரோசனன் முதலிய அசுர கணங்களையும், கந்தருவர்களையும், இத்தன்மையரென்று நெருங்கி அறியத் தகாதவர்களையும் என்னெதிரே காண்கின்றேன்.

**பகவானது விசுவரூபத்தைத் தரிசித்த அருச்சுனன் அதனால் தனக்குண்டாய பயத்தை வெளிப்படையாகக் கூறல்.**

ஏமது தந்தையா யுள்ள பகவானே! ஆகாய முற்றும் வியாபித்ததாய், பல நிறங்களை உடையதாய், பேயின் நடையை விரும்பினதாய், பிறை மதிபோல் வளைவான பற்களையும் பெரிய வாய்களையு முடையதாய், பல முகங்களையு முடையதாய்ப் பலவாக விரியா நிற்கும் இவ் விசுவரூபம் யான் பய மின்றி அடைதலாகும் தன்மையின தன்றாம். ¶

**எனக்கருள் செய்தல் வேண்டுமென்று பகவானை நோக்கி அருச்சுனன் பிரார்த்தித்தல்.**

உலகனைத்துமாய் விளங்கும் எமது தந்தையே! சராசர வடிவமாயுள்ள இவ் வுலகனைத்திற்கும் தேவரீர் ஆதாரமா யிருக்கின்ற தன்மையை யானிப்போது இவ்விசுவ ரூபதரிசனத்தா லறிந்தனன்; இவ் விசுவ ரூப தரிசனத்தால் சோக மோகங்களி னின்றும் நீங்கிக் கடைத்தேறினவ னானேன்; அங்ஙனமாயினே னாயினும், உம்முடைய இவ் விசுவ ரூபத்தை உற்றுப் பார்க்கப் பார்க்கச் சிவனோடு போர் செய்த காலத்தும் அஞ்சாத என் மனமும் நடுங்கி உடம்பைத் தாங்கி நிற்கத் தைரிய மடையா திருக்கின்றது; அதனால், யான் இது வடக்கு, இது கிழக்கென்று யாதொரு திசையையும் அறியா திருக்கின்றேன். அருசுன! நீ இவ் விசுவ ரூபத்தைக் கண்டு பயமுறல் வேண்டா மென்று தேவரீ ரெனக் கருள் செய்தல் வேண்டும்.

¶ பேயின் நடையை விரும்பினதாதல் - பேரச்சத்தைத் தருதற்குக் காரணமாதல். அருச்சுனன் இங்ஙனம் கூறியதால், அவன் தைரியமும் சாந்தமுமடையாது கலக்கமுற்றன னென்பது பெறப்படுவதாம்.

பகவானே! உமது விசுவரூபத்தில் எனது வெற்றியையும் எனது பகைவரது தோல்வியையும் யான் காண்கின்றேனென் றருச்சுனன் கூறல்.

பகவானே! திருதராஷ்டிரனது புத்திரராய துரியோதனன் முதலிய நூற்றுவரும், அவரது சேனைகளும், அந் நூற்றுவர் பொருட்டுப் போர் செய்தலை மேற்கொண்டு எங்களை யெதிர்த்து வந்துள்ள சல்லியன் முதலிய அரசரும், திருஷ்டத்துய்மன், சிகண்டி முதலாயினோரைப் பிரதானமாகக் கொண்டுள்ள எனது சேனைகளும் தேவரீரது யமனை யொத்துள்ள கோரப்பற்களி லகப்பட்டுப் பின்னமடைந்த உடம்புடையவராய் நின்று, காற்றோடு கூடிய நெருப்பை யொத்து விளங்குகின்ற உம்முடைய முகங்களில் (வாய்களில்) விழுகின்றமையை அடியேன் காண்கின்றேன்.

துரியோதனன் முதலாயினோர் புத்தி பூர்வகமாகவும் அபுத்தி பூர்வகமாகவும் தேவரீரது வாயில் விழுகின்றனரென் றருச்சுனன் திருஷ்டாந்தத்தோடு கூறல்.

பகவானே! இவ்வளவினவாய மகிமை யுடையனவென்று குறிப்பிட்டுச் சொல்லுதற்கரிய கங்கை யமுனை முதலிய நதிகளெல்லாம் அபுத்தி பூர்வகமாகக் கடலை நோக்கிச் சென்று அதனையடைதல்போல, உம்மிடத்தினின்றுந் தோன்றியுள்ள துரியோதனன் முதலிய சூரவீரர் யாவரும் அபுத்தி பூர்வகமாகத் தேவரீரது வாய்களை நோக்கிச் சென்று அவற்றை யடைதலை அடியேன் காண்கின்றேன்; திருமகள் தலைவனே! கொழுந்துவிட் டெரிகின்ற அக்கினியில் மிகு வேக முடையனவாய்த் தமது நாசத்தின்பொருட்டுப் புத்தி பூர்வகமாக விட்டிற் பறவைகள் விழுவதுபோல, தேவரீரது வாய்தம்முள்ளே மிகு வேக முடையவராய்த் தமது நாசத்தின்பொருட்டுப் புத்தி பூர்வகமாகத் துரியோதனன் முதலிய சூரவீரர் யாவரும் விழுந்து சாதலையும் அடியேன் காண்கின்றேன்

பகவானது வாய்தம்முள் துரியோதனன் முதலாயினோர் விழுந்து மடிகின்றன ரென்று கூறிய அருச்சுனன், அவர் விழுந்து மடியும் போது பகவான் செய்யும் செயலைக் கூறல்.

எங்கும் வியாபகமாக வுள்ள பகவானே! நீர் அக்கினிபோலப் பிரகாசம் பொருந்திய உம்முடைய முகங் (வாய்) களால், மிகு வேகமா

* ஒன்றனிடத் தொருவர் இஃதின்னதென்றுணராது பிரவேசித்தல் அபுத்தி பூர்வகமாம்; உணர்ந்து பிரவேசித்தல் புத்தி பூர்வகமாம்.

கத் தமது நாசத்தின்பொருட்டு விழுகின்ற துரியோதனன் முதலிய சூரவீரர் யாவரையும் உணவாக உண்டொழித்து, அவர் யாவரும் பூரண உணவாதற்குப் பற்றாமையால் வெளியே நாக்கை நீட்டி நீட்டி உதட்டை நக்கி நக்கி வெறுஞ்சுவை கொள்ளுகின்றீர். யான் இத்தன் மை வாய்ந்த உக்கிரவடிவங் கொண்டுள்ள உம்மைக் குறிப்பிட்டு இன்னு ரென்று தெளிவாக அறியாதிருக்கின்றேன்; தேவரீரது செயலையும் குறிப்பிட்டு அறியாதவனா யிருக்கின்றேன்; (தேவ தேவரே! உமக்கு நமஸ்காரஞ் செய்கின்றேன்; நீர் யார்? தேவரீரை அறிய விரும்பி யுள்ள) அடியேனுக்கு உம்மை இன்னு ரென்று தேவரீர் கிருபை வைத்து உள்ளபடி கூறுவீராக.

நீர் யார்? உமது செயல் எத்தன்மையது? என்று நமஸ்காரஞ்செய்து
வினவிய அருச்சுனனுக்கு எல்லாப் பொருளுமாயும் எல்லை
இல்லாது வியாபகமாயு முள்ள பகவான் தமது
சொரூபத்தையும் செயலையும் கூறல்.

அருச்சுனா! நான் உன்னைத் தவிர, பூமிக்குப் பாரமாயுள்ள துரியோதனன் முதலாயினோ ரனைவரையும் கொன்று அவர்தம் முயிர்களை உண்ண முயற்சி செய்திருக்கின்றேன்; யுகாந்தமானது கிட்டிய அப் போது உலகனைத்தையும் அழிக்கும் காலரூபமான பரமேசுவரன் யானே யாவேன்; இவ்வாறாய என்னையும் எனது செயலையும் நீ அறி வாயாக.

(யான் யுத்தஞ் செய்யாவிடினும், துரியோதனன் முதலாயினோர் தேவரீரால் கொல்லப்பட்டவராக விருக்க, தேவரீர் யாது பற்றி என க்கு அடிக்கடி யுத்தத்திற் பிரவிர்த்திக்குமாறு கூறுகின்றீரென்று அரு ச்சுனா! நீ வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

---

யுக முடிவில் உலகனைத்தையுமழிக்கும் காலரூப பரமேசுவரனாகிய யான் இப்போது பூமிக்குப் பாரமாயுள்ள துரியோதனன் முதலாயினோ ரனைவரையுங் கொல்ல முயற்சி செய்திருக்கின்றேன்; நீ யுத்தஞ் செய்யாவிட்டாலும் இவர் ணிப் பிழைத்திருத்தல் முடியாதென்று பகவான் அருச்சுனனுக்குக் கூறினா ரென்க.

அருச்சுனா ! நீ இந்த யுத்த பூமியிலுள்ள துரியோதனன் முதலிய உனது சத்துருக்கள் யாவரும காலரூபமென்னும் பரமேசுவரனாகிய என்னால் கொல்லப்பட்டவரே யாவரென் றுணரக் கடவாய்.(இவர்தம் மரணத்திற்கு நீ நிமித்தமாத்திரமே யாவாய் ; இவ்வாறு நிமித்தமாத்திரமாய் நின்று துரோணர் - பீஷ்மர் - ஜயத்திரதன் - கர்ணன் முதலாகவுள்ள) இப்பகைவரை நீ கொல்வாயாயின், அந்தச்சத்துரு ஜயமானது உனக்குத் தர்மமும், இராசசிய லாபமும், சாசுவதமான கீர்த்தியுமாம்; அதனால்,ஐசுவரியங்களுள் சிறப்புடையதாய இராச்சியலாபத்தையும், ஜயலட்சுமியையும், மண்ணுலகிற் பிறரெவரா ரடையாத பெரும் புகழினையும் இந்த யுத்தத்தா லடைய விரும்பக்கடவாய்.

துரியோதனன் தான் வெற்றிபெறுதற்குக் காரணபூதராகக் கருதி யிருக்கும்
துரோணர், பீஷ்மர், ஜயதத்ரதன், கர்ணன் முதலாயினோர் போர்
முகத்தில் விழுந்தபின், நிச்சயமாக இறந்து போவா
னென்றும், இந்திருதராஷ்டிரன் தான் வெற்றிபெற
வேண்டுமென் னும் விருப்பத்தை யொழித்து,
பாண்டவரோடு சிநேகங் கொள்வானாயின், இந்த யுத்தம் நின்றுபோம்;
அதனால், பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் சாந்தி யுண்டாகு
மென்றும் சிந்தனை செய்திருக்கின்ற சஞ்சயர், தம்மை
நோக்கிப் பின் நடைபெற்ற விருத்தாந்தம்
யாது என்று வினவிய திருதராஷ்டிரனை
நோக்கிக் கூறல்.

திருதராஷ்டிரரே ! (பூமிக்குப் பாரமாயுள்ள இத் துரியோதனன் முதலாயினோர் யாவரையும் யான் கொல்ல முயற்சி செய்திருக்கின்றேன்; நீ அதற்கு நிமித்தமாத்திரமாக நிற்கக்கடவாய்; அதனால்,பூமி-புகழ்-புண்ணிய முதலியவற்றை யடைவாயென்று) இவ்வாறு பகவான் கூற, அதனைக் கேட்ட அருச்சுனன் தனது கையிரண்டையும் தலைமீது கூப்பி, வார்த்தை தடுமாற, கண்ணீர் முத்து முத்தாக மெல்ல மார்பின்மீது விழ, அச்சத்தோடும் அன்போடும், கோவர்த்தன கிரியைக் குடையாக வெடுத்த பகவானது பெருமையைத் துதிக்கத் தொடங்கினவனாகி, சுரோத்திர முதலிய ஞானேந்திரிய பஞ்சகம் - வாக்கு முதலிய கர்மேந்திரிய பஞ்சகம் - மன முதலிய அந்தக்கரண சதுஷ்டய மனைத்திற்கும் தலைவராயிருந்து, அவற்றை நடத்துகின்ற

வரே! குற்றம் பொருந்திய வினை விலங்கை அன்பாகக் கொழிப்பவரே! உமது புகழைக் கேட்டவிடத்து இந்திரன் முதலிய தேவர்களும், கபிலர் முதலிய சித்தர்களும், அகமலர்ச்சி யடைந்து சந்தோஷமடைகின்றனர், அசுரரும் இராக்கதரும் மரண துக்க மடைகின்றனர். கையும் காலும் வாயுங் கண்ணுஞ் செந்தாமரை மலர்போலச் சிவந்துள்ள கடவுளே! பூதபஞ்சகம்-ஞானேந்திரிய பஞ்சகம் - கர்மேந்திரிய பஞ்சகம் - பிராணாதி பஞ்சகம் அந்தக்கரண சதுஷ்டயம்-இவற்றிற்குக் காரணமாயுள்ள மூலப் பிரகிருதியென்னும் இருபத்தைந்து தத்துவங்களாலும் அறிதற்கருமையா யிருப்பவரே! பிரஹ்மாவிற்குங் காரணரா யிருப்பவரே! முடிவில்லாதவரே! சத்தும் அசத்துமாகா திருப்பவரே! சரமும் அசரமுமென்னும் எல்லாப் பொருளுமாய் வியாபித்திருப்பவரே! நாம் சடைக்கேற்ற சந்தியாவந்த குருவடிவமாயுள்ள தேவரீரை வணங்காதவ ரிருக்கின்றனரோ? இலரன்றோ?†

சர்வத்திற்கும் முந்தின கடவுளா யிருப்பவரும் நீரே யாவீர், சர்வ சரீரத்திலும் ஜீவ ரூபமாய் நிறைந்திருக்கின்ற அரிய புருஷரும் நீரே யாவீர், பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களுள் எதனாலு மறியப்படாதவரும் நீரே யாவீர், (உருத்திரனாகிருப்பவரும் நீரே யாவீர்), பிரபஞ்சமனைத்தும் முடிவில் ஒடுங்குமிடமா யிருப்பவரும் நீரே யாவீர், சர்வத்தையு மறிகின்றவரும் நீரே யாவீர், அறிவாலறிதற்குரிய பிரபஞ்ச சொரூபமா யிருப்பவரும் நீரே யாவீர், (மோட்சவடிவமா யிருப்பவரும் நீரே யாவீர்) நீங்கிப் பயமனுயிரா துல்லை யழிப்பவரும் நீரே யாவீர், வருணன் வாயு-அக்கினி சூரியன்-சந்திரன் முதலிய தேவதைகளின் வடிவமா யிருப்பவரும் நீரே யாவீர்; பொருந்துமாறு இவ்வுலகனைத்தையும் எப்போது முண்டாக்குகின்ற மாதாவும் பிதாவுமான பிரஜாபதியா யிருக்கின்றவரும் நீரே யாவீர், அப்பிரஜாபதியின் தாதையின் தந்தைக்குத் தந்தையா யிருக்கும் பிரபிதாமகரும் நீரே யாவீர் என ஆராய்ந்துணரும்படி அத்தேவதைகளின் வடிவமாயு மிருந்தும் உண்மையில் அத்தேவதைகளாகாதுள்ள ஆரியரே! உம்மை அடியேனாகிய நான் எனது மாறாத் தன்மையுள்ள

† உண்டென்னுஞ் சொல்லுக்குப் பொருளா யிருப்பது சத்தாம்; அது கடம் படம் என்றற்றொடக்கத்தனவாம். இல்லையென்னுஞ் சொல்லுக்குப் பொருளா யிருப்பது அசத்தாம், அது கடமில்லை படமில்லை யென்றற்றொடக்கத்தனவாம்

பிறவித் துன்பம் நீங்குதற் பொருட்டு இலட்சக்கணக்காக நமஸ்காரஞ் செய்கின்றேன். ‡

எந்தையே! எனது மகத்தாகிய சம்சார துன்பம் கெடும்படி இன்னும் உம்மை நமஸ்காரஞ் செய்கின்றேன், உம்மை உமது முன்பக்கத்திலேயும் நமஸ்காரஞ் செய்கின்றேன், உம்மை உமது பின்பக்கத்திலேயும் விதிப்படி நமஸ்காரஞ் செய்கின்றேன், எனதன்பின் வடிவமாயிருப்பவரே! அடியேனது அரிய ஆன்ம வடிவமாயிருப்பவரே! (தன்னை யறிதலாலன்றி வேறொன்றனாலும்) நீங்காத இப் பெரிய பிறவியினது வலிமை கெடும்படி உம்மைச் சர்வ திக்குகளிலும் மீண்டும் மீண்டும் நமஸ்காரஞ் செய்கின்றேனென் றிங்ஙனம் கூறினான். இங்ஙனங் கூறிய அருச்சுனன் மீண்டும் பகவானை நோக்கி, தேவர்க்குத் தேவராயிருப்பவரே! உம்மைத் தவிர வேறு தேவர் யார்? இலரன்றோ? உம்மைத் தவிரப் பிறர்செய்யும் பாவமேது? புண்ணியமேது? பந்தமேது? மோட்சமேது? சாவேகேது? வாழ்வேகேது? இவை யெல்லாமாயிருக்கு மியல்புடையவர் நீரே யாவீரன்றோ? மாயனென்னுந் திருநாமத்தை உடையவரே! உம்முடைய மகிமைகளுள் யாதொன்றையும் அடியேன் செவ்வையாக அறியா திருந்தேன், மாயனென்னுந் திருப்பேருடையவரே! விண்ணுலகத்தாரும் மண்ணுலகத்தாரும் தேவரீரை ஒழுங்குடைய வேதங்கூறும் முறையாகத் தியானஞ் செய்து, உள்ளம் மிக்க கசிந்து உருகப்பெற்று, பலமுறை புகழ்ந்துபேசி அறிந்த உம்மை, உயர்திணை - அஃறிணை யென்னும் சாதிபேத முடையனவா யிருக்கின்ற சராசரப் பொருளனைத்திற்கும் ஆதிகாரணப் பொருளென் றிதுகாறும் நான் அறியாதிருந்தேன், மாயனென்னும் மகிமை பொருந்திய நாமத்தை உடையவரே! சாயையை யொத்துள்ள குடும்ப வாழ்வு-மாடு-வீடு - தந்தை - தாயென்னும் அநித்தியப்பொருள்களைச் சீவர்கள் நித்தியப்பொருள்களென்று கருதி, அதனால் உயர்ந்து தாழ்ந்து பிறந் திறந்துவருகின்றனர் இச் சீவர்கள் இவ்வாறு பிறந் திறந்து வருவ தனைத்தும் சுத்தமாய எனது சம்பந்தமு மின்றி யுள்ள உம்முடைய மாயையின் காரியமா மென்பதனை யானிதுகாறு மறியா திருந்தேன்,

‡ பிரஜாபதி யென்பது இரணியகர்ப்பர் முதலாயினோரையும், பிரபிதாமகரென்பது அவர் தமக்குக் காரணமாயுள்ள பிரஹ்மத்தையு முணர்த்தி நின்றன வெனக.

தேவரீர் நப்பின்னைப் பிராட்டியின் பொருட்டு எழுவிடை தழுவி, கஞ்ச வஞ்சன் அனுப்பிய மல்லரைக் கொன்று, ஆயரைக் காப்பது பற்றிக் கோவர்த்தன கிரியைக் குடையாக எடுத்த சரித்திரத்தை எண்ணி எண்ணித் தமது துன்ப மொழியத் தேவர்கள் துதிக்கின்ற கருணையங் கடலே! மாயனென்னு மபிதான முடையவரே! நீர் இவ்வுலகத்திற்கு வேறுமல்ல; இவ்வுலகப் பொருள்களுள் ஒன்றுமல்ல; மெய்ந்நூல் கூறும் அம் மெய்ப்பொருளே யடையுமசாதனமு மல்ல வென்பதனை யானிது காறு மறியாதிருந்தே னென்றும் கூறினன்.

**உமது மகிமையை யறியாம லடியேன் செய்த அபராதங்களைத் தேவரீர் பொறுத்தருளல் வேண்டுமென்று அருச்சுனன் பிரார்த்தித்தல்.**

மாய னென்னும் திருநாமத்தை உடையவரே! யான் தேவரீரது மகிமையை யறியாமல், அடா யாதவா! அடா என் மைத்துனா! அடா அசோதைப் பிராட்டியார்க் கினனுயிர் போலும் பிரியபுத்திரனாய இடையனே! பசு நிரை மேய்த்த ஆயனே! அடா கிருஷ்ணா! அடா கிருஷ்ணா! என்று சொல்லத் தகாதவற்றைச் சொன்னதே யன்றி, அவற்றின் மேலும் கூறிய பொல்லாங்காய சொற்களனைத்தையும் ஐயோ! இதுகாறும் சொல்லத்தகாதனவாமென றறியாது போனேன்.

அச்சுத மூர்த்தியே! தேவரீரை அடியேன் என்னுடைய தோழனென்றும் மாமன் மகனென்றும் எனக்கொத்த வயதுடையவனென்றும் கருதி, எவ்வகையாலும் தேவரீரது மகிமையைச் சிறிது முணராது, பிடிவாதத்தால் தேவரீரது வார்த்தைகளை மறுத்து, அவற்றிற்கு மாறாகக் கூறிய என்றிழிவாய சொற்களனைத்தையும் தேவரீர் பொறுத்தருளல் வேண்டும். கிருஷ்ணனென்னுந் திருநாமத்தை உடையவரே! கருணாகரரே! யான் தேவரீரோடு உணவுண்டல், விளையாடுதல், ஒரு சயனத்திற் படுத்துறங்குதல், சிம்மாசன முதலியவற்றின்க ணிருத்தல் முதலிய செயல்களைச் செய்த காலத்தில், தேவரீரது பழைமையான மகிமையை ஆராய்ந்தறியாமையால் செய்த தவறனைத்தையும் தேவரீர் பொறுத்தருளல் வேண்டும்.

**அருச்சுனன் பகவான் சிந்தனை செய்தற்குரிய மகிமையுடையவரென்று விளக்கமாகக் கூறல்**

ஒப்பு முயர்வு மில்லாத மகிமை உடையவரே! தோன்றியுள்ள சராசர வடிவமாயுள்ள உலக மனைத்தையும் படைத்தவரும் நீரே யாவீர்;

பெரியோராயவராலும் உலகனைத்திற்கும் பிதாவாயுள்ள உமதுண்மை வடிவத்தை யறிந்து, சிறப்பித்துச் சூறிக் கொண்டாடப்படுகின்றவரும் நீரே யாவீர்; அதிகாரி புருஷர்களுக்குத் தத்துவோபதேசஞ் செய்தற் பொருட்டுக் குரு வடிவமாக வந்து, அவர்கட்கு ஆத்மகுண்மை யுபதேசஞ் செய்து, அவரது அவித்தை முதலிய கிலேசங்களை நீக்குகின்றவரும் நீரே யாவீரென்று உணர்வுடையார் தேவரீரைச் சிறப்பித்துக் கூறினாராயினும், வேத மனைத்தும் ஒருமுகமாக நின்று தேவரீரினும் மேலாக இருப்பவரில்லை யென்று ஏதுக்கள் பலவற்றை யெடுத்துக் கூற, அவற்றைத் தாமறிந்தாலும், உமதருள் பெறுதவர் குருடர் வெண்மை கருமை முதலிய நிறங்களை யறியாமைபோலத் தேவரீரது சிந்தனை செய்தற்கரிய மகிமையை அறியாதவரா யிருக்கின்றனர். †

அருச்சுனன் பகவானது திருவடிகளில் விழுந்து வணங்கி என் பிழையைப் பொறுத்தருளல் வேண்டுமென்னும் பிரார்த்தனையை முடித்தல்

பகவானே! விபர மறியாத பாலயப்பருவமுள்ள புத்திரன் செய்த குற்றத்தை அவனருமையான தந்தை பொறுப்பதுபோலவும், உயிர் போலப் பிரியாதுள்ள தோழன் செய்த குற்றத்தை நட்பின் தன்மையையறிந்துள்ள பெரியோர்கள் பொறுப்பதுபோலவும், அடியேன் யாதுமறியாதவனுய்த் தேவரீரை யொருபொருளாகக் கருதாது செய்துவந்த குற்றமனைத்தையும் தேவரீர் குணமாகக் கொண்டருளல் வேண்டும்.

என் பிழையைப் பொறுத்தருளல் வேண்டுமென்று தன் பிரார்த்தனையைக் கூறி முடித்த அருச்சுனன், அச்சுதமூர்த்தியே! தேவரீர் இவ்விசுவரூபத்தை மறைத்து, நித்திய ரூபத்தை அடியேனுக்குக் காண்பித்தருளல் வேண்டு மெனல்

தேவதேவேச! என் மனம் முன்னே ஒரு காலும் கண்டு தரிசியாத உமது பழைய விசுவரூபத்தை யிப்போது தரிசித்துச் சந்தோஷமடைந்தது; ஆனால், பயத்தால் வியாகூல மடைந்திருக்கின்றது; அதனால், தேவரீர் கிரீடமும் சக்கரமும் சங்கும் கதையும் தரித்துச்

† அருச்சுனனிங்ஙனங் கூறியதனால், பகவானே! யானுமதருள் பெற்றமையினால் உமதுமகிமையை யறிதற்குரியவனுனே னென்பதைக் குறிப்பித்தானென்பது பெறப்பட்டதெனக

சதுர்ப்புஜத்தோடுங் கூடியுள்ள நமது கிருஷ்ணாவதார வடிவத்தையே கொண்டு, அடியேனுக்கருள் செய்வீராக என்றான் அருச்சுனன்¶

**எவ்வகையான உருவங்களும் தம்முருவமாகக்கொண்டு நின்ற பகவான், அருச்சுனன் வேண்டுகோட்கிரங்கி அவனுக்குச் சந்தோஷமுண்டாவதற் கேதுவாயவற்றைக் கூறல்**

அருச்சுனா! பூரணப் பிரகாச முடையதாயும், சிருஷ்டியின் ஆதியில் உலகனைத்தையு முண்டாக்கும் முதற்பொருளாயும், அவ்வுலகமனைத்து மாயு மிருக்கின்ற பரமேசுவரனான எனது விசுவரூபத்தை யான் உன் மீது வைத்துள்ள கருணையால் உனக்குக் காட்டினேன், உனக்கு முன் எவராலும் இவ் விசுவரூபம் காணப்படாததாம் §

**பகவான் அருச்சுனா! நீ என்னருள் பெற்றமையால் இவ் விசுவரூப தரிசன முனக்குக் கிடைத்ததென்று தமது விசுவரூபத்தி னருமையைக் கூறல்**

அருச்சுனா! இம்மண்ணுலகின்கண் வேதாத்தியயனஞ் செய்வதாலும், சிறந்த யாகங்களைச் செய்வதாலும், பெருந்தவத்தைச் செய்வதாலும், பலவகையான தானங்களைச் செய்வதாலும் பரமேசுவரனான என்னைத் தரிசிக்க விரும்பி யிருப்பவர் தரிசிப்பதற்குக் கூடாத இவ் விசுவரூபத்தைக் குற்றஞ் சிறிது மில்லாத எனது யோக மாயையின் சாமர்த்தியத்தால் யான் காட்ட நீ கண்டு கிருதார்த்தனானை.

**சஞ்சயர் திருதராஷ்டிரனுக்குக் கூறல்**

திருதராஷ்டிரரே! வாசுதேவனான ஸ்ரீ கிருஷ்ணபகவான் இவ்வாறாய வாக்கியங்களை அருச்சுனனுக் கருளிச் செய்து, சங்கு • சக்க

---

¶ பகவான் அருச்சுனனுக் கெப்போதும் சதுர்ப்புஜத்தோடுங் கூடிய வடிவமாகவே யிருந் தனுக்கிரகஞ்செய்து வந்தாரென்பதிங் குணர்த்தற்பாலதாம்.

§ பகவான் பாண்டவர் பொருட்டுத் துரியோதனனிடத்துத் தூதாகச் சென்ற போது துரியோதனனது இராஜசபையில் பீஷ்மர் முதலியோர் தரிசிக்குமாறு காட்டிய விசுவரூபமும், அசோதைப் பிராட்டியார்க்கும் அக்குரூரர்க்கும் காட்டிய விசுவரூபமும், அருச்சுனனுக்குக் காட்டிய விசுவரூபத்தினும் சிறந்தன வன்றாம், இவ் விசுவரூபத்தி லிடைப்பட்டனவாய சொரூபமாம், அருச்சுனன் தரிசித்த விசுவரூபம் பீஷ்மர் முதலியோர் தரிசித்த விசுவரூபமன்று மென்பன இங்குணர்த்தற்பாலனவாம்.

ரம் - கதை - தாமரைமல ரென்பவற்றைத் தரித்துள்ள சதுர்ப்புஜ முடையதாய், கிரீடம் - மகாராகாரகுண்டலம் - ஸ்ரீவத்ஸம் - கௌஸ்துபம் - துளஸிமாலை - பீதாம்பர முதலியவற்றால் விளங்குகின்ற அந்தப் பூர்வ ரூபங் கொண்டருளி, கோரமாய விசுவரூப தரிசனத்தாலுண்டாய அவனது மனோவியாகூலத்தை யொழித்து, அவனுக்குச் சந்தோஷ முண்டாக்கினார்.

**பகவானது சதுர்ப்புஜ வடிவந்தைத் தரிசித்துப் பயமற்று, பகவானை நோக்கி பகவானே! உமது திவ்வியமாய இம்மானுட வடிவத்தைக் கண்டு இப்போது வியாகூலம் நீங்கினேன், சந்தோஷமடைந்தேனென்று கூறிய அருச்சுனனை நோக்கி, அவனுக்குச் சம்மதமாம்படி தமக்கொப்பாரும் மிக்காரு மில்லாதவரும் பசுக் கூட்டத்தை மேய்த்தவருமாகிய பகவான் தமது விசுவரூபத்தி னருமையையும் தம்மை யபேதமாயடைதற்குரிய சாதனத்தையும் கூறல்.**

அருச்சுனா! நீ முன் தரிசித்த என்னுடைய இவ் விசுவரூபத்தை வேதாத்தியயன முதலியவற்றால் தரிசித்தவர் இம் மண்ணுலகத்தில் இலராவர்; இவ்விசுவரூபத்தைத் தரிசித்தற்கு இந்திரன் முதலிய இமையவரும் விரும்பி யிருக்கின்றனர்; (அதனால், எனது விசுவ ரூப தரிசனம் மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் பெறுதற் கரியதாயிருப்பதாம்); ஆனால், என்னிடத் தன்பு மிக்க பக்தருமாய், பரமேசுவரனை என்னை யல்லாமல் யாதொரு சம்பந்தமு மில்லாமையைக் கொண்டவருமா யிருப்பவர் என்னை உள்ளவா றறிந்து அபேதமாக அடைவர்; இதற் கையப்பாடு சிறிது மில்லையாமென்று கூறியருளினார்.

**11**—விசுவரூப அத்தியாயம் முற்றிற்று.



# 12 - பக்தியோக அத்தியாயம்.

**பதினோராவது அத்தியாயத்தி னிறுதியில்'பரமேசுவரனை என்னையல்லாமல் யாதொரு சம்பந்தமு மில்லாமையைக்கொண்டவருமாயிருப்பவர் என்னை உள்ளவாறறிந்து அபேதமாக அடைவர்' என்று பகவான்போதுப்படக்கூறினமையால், அருச்சுனனுக்கு 'என்னை' என்னும் சொற்குப் பொருள் சாகார வஸ்துவா? நிராகார வஸ்துவா? என்று சந்தேக முண்டாயிற்று; இச் சந்தேகத்திற்குக் காரணம் பூர்வம் பகவான் அங்கங்கே சாகார வஸ்து, நிராகார வஸ்து என்னு மிரண்டனையும் அருச்சுனனுக் குபதேசித்தமையே யாம். யான் சாகார வஸ்துவை உபாசனை செய்தற் குரியவனா? அல்லது நிராகார வஸ்துவை உபாசனை செய்தற் குரியவனா? என்று சந்தேகங் கொண்ட அருச்சுனன் எனக்கு அவ்விரண்டு உபாசனைகளில் எதன்கண் அதிகார மிருக்கின்றது? யான் அவ் விரண்டு உபாசனைகளையும் நன்றாக அறிதல் வேண்டுமென்று விருப்பங்கொண்டு பகவானை நோக்கி வினவுதல். $**

*தமியேனுக்குத் தாயை யொத்துள்ள பகவானே! யோக மறிந்த பெரியோ ராவார் என் மனத்திற்குப் பொருந்துமாறு யான் நேரே தரிசித்த பரமேசுவரரான உமது திவ்விய மங்கள சொரூப சாகார வடிவத்தையே நிரந்தரம் தியானஞ் செய்பவரோ? பரிசுத்தமான வேதம் நான்கிற்கும் விஷயமாகா துள்ள அட்சர மென்னும் நிர்க்குணப் பிரஹ்மமாகிய உம்மையே நிரந்தரம் தியானஞ் செய்பவரோ? அவ்விருவருள் எவர் பெரியோராவார்? அவரைக் கூறியருளல் வேண்டும். ¶*

---

*$ சாகாரவஸ்து - சகுணப்பிரஹ்மமாம்; நிராகாரவஸ்து - நிர்க்குணப் பிரஹ்மமாம். சகுணப் பிரஹ்ம உபாசனையும் நிர்க்குணப் பிரஹ்ம உபாசனையும் முறையே சகுண வித்தையென்றும் நிர்க்குண வித்தையென்றும் சொல்லப்படும்; அதிகாரிகளின் பக்குவம் நோக்கி, சகுணப் பிரஹ்ம உபாசனையும் நிர்க்குணப் பிரஹ்ம உபாசனையும் கூறப்படுகின்றனவென்பன இங்குணர்தற் பாலனவாம்.*

*¶ யோகத்தை விசேஷமாக உணர்ந்தவர் சகுணப் பிரஹ்ம உபாசகரோ? நிர்க்குணப் பிரஹ்ம உபாசகரோ? அவர்தம்மைக் கூறியருளல் வேண்டு மென்று அருச்சுனன் பகவானை நோக்கி வினவினு னென்க. எக்காலத்தும் கேடில்லா திருப்பது அட்சரமாம்; அல்லது தனது இருத்தல் விளங்கல் வடிவத்தால் எங்கும் வியாபகமா யிருப்பது அட்சரமாம்.*

தாேனார் ஆய (இடைய)ரைய் நிரைகளை (பசுமந்தைகளை) மேய்த்த மாயன் அருச்சுனனுக்குச் சகுண வித்தையிலேயோ அதிகார மிருக்கின்றதென்ப துணர்ந்து, அதனிடத் தவனுக்கு விருப்ப முண்டாகாதற் பொருட்டு அவ் வித்தையைத் துதி செய்து அதுவே வித்தைகளுள் சிரேட்டமானதெனக் கூறல்.

*அருச்சுனு! நீ தரிசிக்குமாறு பரமேசுவரனைய யான் முன்னே உனக்குக் காண்பித்த சாகாரமான எனது விசுவ ரூபத்தை மிகு பிரியத்தோடு மனதால் தியானஞ் செய்தலும் வாக்கால் ஸ்துதி செய்தலு முடையார் யாவரும் பரமேசுவரனான என்னையே அடைவதல்லாமல் வேறெதனையு மடைய மாட்டார். அவர் யோகத்தை உணர்ந்தவர் யாவரிலும் சிரேஷ்டராவர். இங்குக் கூறிய சகுண உபாசகரை யல்லாமல் மற்ற நிர்க்குண உபாசகரது நெறியையுங் கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.*

நிர்க்குணப் பிரஹ்ம உபாசகரடையும் பயனைப் பகவான் கூறல்.

*அருச்சுனு! யாதாவதொரு சப்தத்தாலும் வசனிப்பதற் கரியதாய், மனத்தினு லறிதற்கு அசக்கியமாய், எவ்விடத்தும் இடைவெளி யின்றி வியாபித்து, போதல் வருதலாகிய தொழி லில்லாது விளங்குகின்றதாகிய நிர்குணப் பிரஹ்மத்தை, தடுப்பதற் கரியனவா யுள்ள சுரோத்திர முதலிய இந்திரியங்களைத் தத்தம் சப்தாதி விஷயங்களில் செல்லாவாறு தடுத்து, சந்தேக விபரீதமில்லாது தனது ஆன்மாவாக அறிபவன் பிரஹ்மரூபமாகிய யானே யாவன்; அவனை யென்னிலும் வேறானவனென்று சொல்லுதல் கூடுமோ? கூடாது.* *

*(சகுணப் பிரஹ்ம உபாசகர் யோகத்தை உணர்ந்தவர் யாவரிலும் சிரேஷ்டராவர் என்று முன்பு கூறி, பின்பு நிர்க்குணப் பிரஹ்ம உபாசகர் நிர்க்குணப் பிரஹ்மமே யாவர் என்று கூறுவது எவ்வாறு பொருந்து மென்று அருச்சுனு! நீ வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)*

*அருச்சுனு! தனக் கொரு காரண மில்லாதும், பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களுள் எதற்கும் விஷயமாகாது முள்ள நிர்க்*

---

* *நிர்க்குணப் பிரஹ்மம் சப்தத்தின் சக்தி விருத்திக்கும், சமதமாதி சாதனங்களின்றிய மனத்திற்கும் விஷயமாகா தென்பதிங் குணர்தற் பாலதாம்.*

குணப பிரஹமததைக அடைபவாது கிலேசம வேறெருந கிலேசததோடு சோததுச சொலலபபடுவகனறும, (அக கிலேசம மிகப பெரியதாம). அறிகறகரிய தாகிய இந நிாககுணப பிரஹம உபாசனை யானெனறெனனுமம பறறேருடு வாழும மககளால செய்யபபடுவகனறும, அவா நிாக குணப பிரஹம உபாசனையைப பெறுவாராயின, அவாது மகிமையை அளவு செயது கூற வலலவா யாா? ஒருவரு மிலா. *

என்னுடைய பக்தா என்னுடைய கருணையால் கிலேசமில்லாது மோட்ச வடிவப் பயனை யடைவ ரென்று பகவான் கூறல்

அருசசுனு! யாவா சிலா தாம செயயும கருமமனைததையும சகுணப பிரஹமமாகிய எனனிடததுஅாபபணஞ செயது, தமமுடைய மனததை யெனனிடததுப பிறழாது நிறுததுகினறுரோ அவா கமமைச சாதலைத தலைமையாகக கொணடுளள துனபக கடலி னினறும காப பாறறுதற குரியவனு யிருககினறேன யான, அவா யாவரா யிருபபினும அவா கமமைச சிறிது காலததிறகுளளே பிறவிப பெருஙகடலி னின் றுங கடககச செயகினறேன †

---

* நிாககுணப பிரஹமததை யானென தெனனும பறறெழியாதவா உபாசிககுமபோது பெரிதுங கிலேச மடைகினறனா, யானென தெனனும பறறெழியப பெறறு நிாககுணப பிரஹம உபாசனை செயபவாது மகிமை அளவிடறகரியதா மெனறு அருச்சுனனுககுப பகவான கூறினுரெனக

சகுணப பிரஹம உபாசகாககு அவவுபாசனை செயயுமபோதுணடாகும கிலேசததிலும, நிாககுணப பிரஹம உபாசகாககு அவவுபாசனை செயயுமபோ துணடாகும கிலேசம மிகப பெரிதாயிருததலின, அதுபறறிச சகுணபபிரஹ்ம உபாசகா நிாககுணப பிரஹம உபாசகரினும சிறநதவராவரெனறு கூறபபடு கினறன ரெனபதும, இவ வுபாசகரிருவரு மடையும பயன ஒனறே யெனபதும, நிாககுணபபிரஹம உபாசகா அடையும பயனைச சகுணப பிரஹ்ம உபாசகா காலக கிரமததில அடைகினறன ரெனபது மிஙகுணாதற பாலனவாம

† மரணததோடு கூடிய மிததையாயுளள அஞஞானமும, அதன காரியமாகிய பிரபஞசமும பிரசிததமான கடல போனறு கடததறகரியனவா யிருததலின், சாதலைத தலைமையாகககொணடுளள துனபககடல எனறு கூறபபட்டன வெனக

சகுணப் பிரஹ்ம உபாசனையைத் துதி செய்த பகவான், அது செய்யும் வகையினையும் அதனைச் செய்தற்கு வலியிலாதார் செய்தற் குரியவற்றையும் கூறல்.

அருச்சுனா! நீ உன் மனத்தைச் சப்தாதி விஷயங்களில் வையாது சகுணப் பிரஹ்மமாய என்னிடத்து உண்மையாக (வைத்து என்னைத் தியானஞ் செய்யக் கடவாயாக; அவ்வாறு) வைத்துத் தியானஞ் செய்வாயாயின், (எனது கருணையால் தேகாந்தத்தில ஆத்ம ஞானமடைந்து நிர்க்குண சுத்தப் பிரஹ்மமான)என்னின் வேறாகாம லென்னோடு ஒன்றுதற்குச் சந்தேகமில்லையாம். அருச்சுனா! உனக்குச் சகுணப் பிரஹ்ம உபாசனை செய்வது முடியாதாயின், நீ (என்னை யடைதற்பொருட்டு) அப்பியாச யோகத்தையே யிடைவிடாது செய்துவரக்கடவாயாக; அருச்சுனா! நீ அவ் வப்பியாசயோகத்தையும் உண்மையாகச் செய்தற் காற்றலில்லாதிருப்பாயாயின், உனது கரணங்களால் செய்யும் வினைகளை என் சந்தோஷத்தின் பொருட்டாகப் பஜனரூப கருமங்களாகச் செய்யக் கடவாயாக; அருச்சுனா நீ உன் கரணங்களால் செய்யும் அக் கருமங்களை அவ்வாறு செய்தற் காற்ற லில்லா திருப்பாயாயின், (என்னைச் சரணமடைந்து மனத்தின் வழிச் செல்லை லொழிந்து,) பயனோக்காது கருமங்களைச் செய்யக் கடவாயாக.

அப்பியாச யோகமாவது இங்குப் பொன் வெள்ளி முதலியவற்றால் செய்துள்ள சிவ விஷ்ணு முதலிய திவ்ய மங்கள விக்கிரகங்களில் சித்தத்தைச் சிதறுவாறு நிறுத்தி, அவற்றைத் தியானஞ் செய்தலாம்.

பஜனரூப கருமங்கள் ஒன்பதாம். அவை வருமாறு:—(1)பகவானது நாமங்களைப் பிறர் கூறக் கேட்டல், (2) பகவானது நாமங்களைத் தான் கூறுதல், (3) பகவானை இடைவிடாது தியானஞ் செய்தல், (4) பகவானது திருவடிகளை வணங்குதல்,(5) சந்தனம்-அட்சதை-புஷ்பம்-தூபம் தீப முதலியவற்றால் பகவானைப் பூசித்தல், (6) மனம் வாக்குக் காயமென்னும் முக்கரணத்தாலும் பகவானை வணங்குதல், (7) பகவானுக்கு அடிமையாதல், (8) பகவானுக்குத் தோழனாதல், (9) சரீரரூப ஆத்மாவைப் பகவானுக்கர்ப்பணஞ் செய்தல். இங்குக்கூறிய இவ்வொன்பதனுள்வணங்குதலும் பூசித்தலும் பகவான் சர்வவியாபகனா யிருத்தலால், அவர்க்குச் செய்த லமையாதாம். ஆயினும் பகவானுக்குச் சாஸ்திரங்கள் கூறும் சலம்-அசலமென்னு மிரண்டு வடிவங்களுள், சந்நியாசி சல வடிவமாகவும், பொன் வெள்ளி முதலியவற்றால் செய்துள்ள சிவவிஷ்ணு முதலிய திவ்யமங்கள விக்கிரகங்கள் அசலவடிவமாகவு மிருத்தலின், சந்நியாசிகளை வணங்குதலும் பூசித்தலும்

### சகுணப் பிரஹ்ம உபாசனை முதல் நிஷ்காம கரும மீறாகக் கூறிய நான்கனுள் நிஷ்காம கருமத்துள் மற்றைய மூன்று மடங்குவனவா யிருத்தலின், அதனிடத்து அருச்சுனனுக்குப் பிரியமுண்டாக்குதற் பொருட்டு, அதனைப் பகவான் துதிசெய்தல்

அருச்சுனா! அப்பியாச யோகத்தினும் ஞானம் சிரேஷ்டமான தாம்; அந்த ஞானத்தினும் பிறழ்ச்சி யின்றிய தியானம் சிரேஷ்டமான தாம், அந்தத் தியானத்தினும் பிறப்பிறப்புக் காரணமாய கரும பலத் தைத் தியாகஞ் செய்தல் சிரேஷ்டமானதாம், கரும பலத் தியாகத்தின் பின் சித்த சாந்தியென்னும் மோட்ச முண்டாவதாம் ¶

விக்கிரகங்களை வணங்குதலும் பூசித்தலும், பகவானை வணங்குதலும் பூசித்தலுமா மென்பதிங் குணர்தற் பாலதாம் இப்பஜனரூப கருமங்கள் பாகவத தருமங்களாம்

¶ இங்கு அப்பியாச யோக மென்றது ஞானமடையுமாறு செய்யும் சிரவணத்தின் அப்பியாசமும், ஞானமென்றது சிரவணத்தாலும் மனனத்தாலு முண்டாகும் ஆத்ம நிச்சயமும், தியான மென்றது நிதித்தியாசனமும் ஆம் ஆத்ம தரிசனத்திற்குச் சிரவணமும் மனனமும் நிதித்தியாசன வாயிலாகக் காரணமாம், நிதித்தியாசனமோ நேர் காரணமாம் இவ்வகையால் ஆத்ம நிச்சயத்தினும் நிதித்தியாசன வடிவத் தியானம் சிரேஷ்டமா யிருக்கின்ற தெனக் இங்குக் கூறிய தியானம் ஆத்ம தரிசன சாதனங்களுள் சிரேஷ்டமா யிருப்பினும், அஞ்ஞானி செய்யும் கரும பலத் தியாகம் அவனுக்கு அந்தத் தியானத்தினும் சிரேஷ்டமா யிருத்தலின், அதுபற்றி, தியானத்தினும் கரும பலத் தியாக சிரேஷ்டமாமென்று அதனைப் பகவான் துதிசெய்தாரெனக் கருமபலத் தியாகம் சிரவணஞ் செய்வதற்கும், அது மனனஞ் செய்வதற்கும், அது நிதித்தியாசனஞ் செய்வதற்கும், அஃதாத்ம தரிசனஞ் செய்வதற்கும் காரணமாமென்ப திங்குணர்தற்பாலதாம் ஆசையற்றவன் அமிர்தமயனாகின்றா னென்பது சுருதி சம்மதமாம் பயனோக்கிக் கருமஞ் செய்பவன் ஆசையுடையவனா யிருப்பதன்றி, அஃதில்லா திருப்ப தில்லையாம், பயனோக்காது கருமஞ் செய்பவனோ ஆசை யுடையவனாவதில்லையாம், அதனா லவன் இந்திரிய வடக்கம் மன வடக்கம் முதலிய வற்றை விரைவாகப் பெற்றுச் சற்குருவை யடைந்து, அவரிடத்துச் சாஸ்திரார்த்தங்களைக் கேட்டு, அவற்றைச் சிந்தனை செய்து நோக்கித் தெளிந்து தனதாத்ம சொரூபத்தில் சித்தத்தை நிறுத்திச் சமாதி செய்து, அதனால் ஆத்ம சொரூபத்தை உள்ளவா றறிந்து, பந்தபாசங்களி னின்றும் நீங்கி அமிர்தமயனாகின்றா னென்ப திங்குச் சாஸ்திரார்த்தமாம்

நிர்க்குணப் பிரஹ்ம உபாசனை செய்யும் ஆற்றலில்லாதவர்க்குச் சகுணப் பிரஹ்ம உபாசனையையும், அது செய்யும் ஆற்றலில்லாதவர்க்கு அப்பியாச யோகத்தையும், அது செய்யுமாற்றலில்லாதவர்க்குப் பாகவத தருமங்களையும், அவை செய்யுமாற்றலில்லாதவர்க்கு நிஷ்காம கருமத்தையும் அருச்சுனனுக்குபதேசஞ் செய்வது வாயிலாக விதித்த பகவான் யான் சகுணப் பிரஹ்ம உபாசனையை உயர்த்திக் கூறியது நிர்க்குணப் பிரஹ்ம உபாசனையைக் குறைத்துக் கூறுதற் பொருட்டன்றாம்; நிர்க்குணப் பிரஹ்ம உபாசகனே யாவரினு முயர்ந்தோனாவான். அருச்சுன! நீயும் நிர்க்குணப் பிரஹ்ம உபாசனை செய்தற்குரிய அதிகாரத்தைச் சம்பாதித்துக் கொண்டு அதனைச் செய்தல் வேண்டுமென் றவனுக்குக் குறிப்பிப்பவராய் நிர்க்குணப் பிரஹ்மோபாசகரைத் துதிசெய்தல்.

*அருச்சுன! சராசர ரூபமாயுள்ள இருவகைப் பிராணிகளிடத்தும் சிநேகமுடையவனாய், இது சுகம் இது துக்கம், இது யான் இஃதெனதென்றவற்றைத் தனக்கு வேறாக அறியாது, (சர்வத்தையும் தானாக அறிகின்றமையால்) எந்தப் பொருளாலும் குறைவில்லாது, தன் மனமும் ஒரு வழியாக நின்று ஆத்மாவையே நோக்கிச் செல்ல, ஆத்மாவே உள்ளதென்னும் ஒப்பற்ற நிச்சயமும், துக்கிப் பிராணிகளிடத்துக் கருணை செய்தலும் பொருந்தி, இந்திரிய வாயிலாகச் சப்தாதி விஷயங்களை ஆராய்ந் தறிகின்ற புத்தி விருத்தியைச் சுத்தப் பிரஹ்மமான என்னிடத்தே பொருந்தவைத் தொழுகுகின்ற யோகியே எனக்கு மிகு பிரியனா யிருப்பவனாவன்.*

பகவான் நிர்க்குணப் பிரஹ்மோபாசகரது தன்மையை விவரித் துரைத்தல்

*அருச்சுன! உலகமும் தானு முண்மையி லந்நியமாக வில்லாமையால் தான் எந்தப் பிராணிக்கு மஞ்சாதும, எல்லை யில்லாதுள்ள பிராணிகளிடத்துத் தான் நேசபாவ முடையவனா யிருத்தலின் அந்தப் பிராணிகளும் தன்னைக் குறித்த தஞ்சாதும், அறிவுடையோர் (தன் நற்குண நற்செய்கைகளை யறிந்து, தன்னைக் குறித்துப்) புகழ்ந்து பேசுமாறும், தன் மனத்தின்கண் பொறாமையும் மயக்கமும் களிப்புமில்லாதுமுள்ள யோகியே எனக்கு மிகப் பிரியனாவன்.*

** பிறர்க் கிலாபம் வந்ததைக் கண்டு சகியாமை பொறாமையாம்; பயமுதலியவற்றா லுண்டாகும் மனத் திகைப்பு மயக்கமாம; இலாபம் வந்தபோ துண்டாகு முற்சாகம் களிப்பாம்.*

அருச்சுனா! எப்போதும் எந்தப் பொருளி னிடத்தும் ஆசை வையாதும், இந்திரியங்களின் வழியே தான் செல்லாது அவற்றை யடக்கியும், பிறர் செய்யு முபகாரத்தையும் அபகாரத்தையும் சமமாகக் கொண்டும், சுகசாதனமாகிய நல்வினையும் துக்க சாதனமாகிய தீவினையும் பிறப்பிற்குக் காரணமா யிருத்தலின், அவ்விரண்டனையும் புத்தி பூர்வகமாகச் செய்வதொழிந்தும், எவராலேனும் எதனாலேனும் தன்னுடம்பு அழிவதா யிருப்பினும் அது பற்றித் துன்புற்றிரக்கங் கொள்ளாதும், பிரிய வஸ்து கிடைத்த விடத்து மகிழ்தலும் அப்பிரிய வஸ்து கிடைத்த விடத்து வாடுதலு மில்லாதும், தான் முன்பு இழந்து விட்ட பொருள் பற்றி இரக்கங் கொள்ளாதும், இனி வருதற்குரிய பொருளிடத் திச்சைவையாதும், இவர் சத்துரு இவர் மித்துருவென்ப தின்றியாவரிடத்தும் சமபுத்தி வைத்தும், இன்ப துன்பம்-மானம் அவமானம் - சீதோஷ்ணம்- துதிநிந்தை என்றற் றொடக்கத்துத் துவந்துவங்களில் சமபுத்தி வைத்தும், தான் பொருந்தி வாழ்தற்குரிய இடமென்ப தொன்று நியமமாக வில்லாமலும் விளங்குகின்ற யோகியே எனக்கு மிகப் பிரியனாவன். *

நிர்க்குணப் பிரஹ்ம உபாசகரது குணங்களைத் தாம் மேற்கொண் டொழுக முயலுவோர்களும் எனக்குப் பிரியராவரென "மயக்கற ஒருவாறு மறிவரி தாய மாயோன்" கூறல்.

அருச்சுனா! முயற்சியாற் சம்பாதிக்கத் தக்கதும், தன்னை யடைந்தவர் தமது சம்சாரத் துன்பம் நீங்கி உய்ய அவரை அச் சம்சாரத் துன்பத்தி னின்றும் முத்தியிற் கொண்டுபோவதுமாய (இதுகாறும் யான் கூறி வந்த தருமவடிவ)அமிர்தத்தை யான் கூறியவாறு தமக்கியல்பாகப் பொருந்தச் சிரத்தையோடு முயற்சியா லுணர்ந்து சம்பாதிக்கும் முமுட்சுக்களாகிய பக்தர்களுக்கும் யான் மிகப் பிரியனாவேன். இதனை நீ குறிக்கொண் டுணர்வாயாக என்றருளிச் செய்தனர். §

---

உபகாரஞ் செய்யும் பிராணி மித்துருவாம்; அபகாரஞ் செய்யும் பிராணி சத்துருவாம். நிர்க்குணப் பிரஹ்ம உபாசகன் எப்போதும் சமபுத்தி உடையவனா யிருத்தலின், சுகதுக்க முதலிய துவந்துவங்கள் காரணமாகத் தன்னிலையி னின்றும் பிறழ்வதில்லையா மென்ப திங்குணர்தற்பாலதாம்.

§ தரும வடிவ அமிர்தமென்றது சராசர ரூபமாயுள்ள இருவகைப் பிராணிகளிடத்தும் சிநேக முடையவனாய் என்றற் றொடக்கத்தனவாகக் கூறியவற்றையாம். இவை அமிர்த வடிவ மோட்சத்தைப் பெறுதற்குச் சாதனமா யிருத்தலின், உபசார வழக்கால் அமிர்தம் என்று கூறப்பட்டனவென்க.

சகுணப்பிரஹ்ம உபாசனையைச் செவ்வையாகச் செய்து முடித்தவன் நிர்க்குணப் பிரஹ்ம உபாசனையைத் தவறாது செய்து, அதனால் தத்துவசாட்சாத்காரம் (ஆத்ம தரிசனம்) பெற்று, அதனால் முத்தி பெறுவனென்பதிங் குணர்தற்பாலதாம்.

**12** - பக்தியோக அத்தியாயம் முற்றிற்று.

## 13 - க்ஷேத்திர க்ஷேத்ரக்ஞ

## விபாகயோக அத்தியாயம்.

முதலாவது அத்தியாய முதல் ஆறவது அத்தியாய மீறயுள்ள முதலாவது ஷட்கத்தில் துவம்பதார்த்த நிரூபணத்தையும், ஏழாவது அத்தியாயமுதல் பன்னிரண்டாவது அத்தியாய மீறயுள்ள இரண்டாவது ஷட்கத்தில் தத்பதார்த்த நிரூபணத்தையும் திருவாய்மலர்ந்தருளிய பகவான் பதின்மூன்றவது அத்தியாய முதல் பதினெட்டாவது அத்தியாய மீறயுள்ள மூன்றவது ஷட்கத்தில் தத்பதார்த்த துவம்பதார்த்தங்களின் ஐக்கியத்தைக் கூறத்தொடங்கி, அதனை அருச்சுன னுணர்தற்பொருட்டு முன்னர் க்ஷேத்திரம் இத்தன்மையது, க்ஷேத்திரக்ஞன் இத்தன்மையனென்று கூறல் $

"*விடம்படு பணமுடி யரங்கினமிசை யேறி, நடம்பயிலு நாயகன மறிகதுமிகு ஞானம், சடம்படு பிணிபபிறவி யெனறிவை கரிககும, உடம்பொடுயி ரானவை யுரைததருள லுறறுன*" †

பகவான் ஏழாவது அத்தியாயத்தின் தொடக்கத்தில் பிரகிருதி பரை அபரை யென இருவகைத்தாம், அவற்றுள், பரையென்னும் பிரகிருதி சீவனும், அபரையென்னும் பிரகிருதி உடம்பாமெனக் குறிப்பித்திருப்பதை விளங்கக் கூறல்

*அருச்சுன! சீவன தன கருமத்திற கேறறவா றனுபவிககும சுக துககங்களைத்தையும (பூமி ரூபமான க்ஷேத்திரம போல) மிகுதியாக உண்டாககுதலால, எதிரே காணபபடுகின்ற இச்சரீரம க்ஷேத்திர மென்று கூறபபடுகின்றது, சாமானியமாகவும விசேஷமாகவும இச சரீர ரூபமான க்ஷேத்திரததை ஆராயநதறியும சீவனை இநத க்ஷேத்திரததினகண பொருநதிய க்ஷேத்திரகஞனென்று பணடிதா கூறுகின றனா* ‡

---

$ *இமமூனருவது ஷடகம தத்பதாாதத துவம்பதாாததங்களின ஐககியத தைப போதிபபதும தததுவ ஞானததைப பிரதானமாக வுடையதுமா மென றிஙகுணாதல வேணடும*

† *அரஙகு - சபை, நாயகன - கணணபிரான, உடமபு - க்ஷேததிரம, உயிா - க்ஷேததிரகஞன*

‡ *சுரோததிர முதலிய பததிநதிரியஙகள, மன முதலிய அநதககரணங களை, பிராணவாயு முதலிய ஐநது பிராணனகளென்னு மிவறறோடு கூடிச சீவன*

சரீரவடிவ க்ஷேத்திரம் வேறு, அதனை யுடைய க்ஷேத்திரக்ஞன் வேறு
அவன் சோப்பிரகாச வடிவனென் றருளிச்செய்த பகவான்
க்ஷேத்திரக்ஞனென்னும் சீவன் யதார்த்தமாகப்
பிரஹ்ம சோரூபமேயாமெனக் கூறல்.

அருச்சுனா! சரீரவடிவ க்ஷேத்திர மனைத்திலும் அவற்றிற் கதிஷ்டானமாகப் பொருந்திச் சொப்பிரகாச சைதன்யமாய் நிலைபெற்று, அந்த க்ஷேத்திரத்தை யானெனதென் றபிமானஞ் செய்துள்ள க்ஷேத்திரக்ஞன் அத்விதீயப் பிரஹ்ம சொரூபமான யானே யாவன். க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞனென்னு மிவ்விரண்டனையும் அவற்றின் தன்மைகளோடு ஒரு புண்ணிய விசேஷ காலத்தில் யாதொன் றறியுமோ அதனையே (அவித்தையின் விரோதியான) தத்துவஞான மென்று உணரக்கடவாய்; இது சுருதி சம்மதமா யிருப்பதால் பரமேசுவரனுன வெனக்குஞ் சம்மதமானதாம். *

---

சுக துக்கங்களை அனுபவித்தற் கிடமாயுள்ள சரீரம் க்ஷேத்திரமாம்; இது போகாயதன மென்றும் கூறப்படும். இதனுளிருந்து சுக துக்க வடிவ போகத்தை யனுபவிக்கும் சீவன் க்ஷேத்திரகஞனும்; இவன் போகத்தை யனுபவிப்பது காரணமாகப் போக்தாவென்றும் கூறப்படுவன். சரீர வடிவ க்ஷேத்திரத்தினு ளிருந்து பேதைமையால் அதனிடத்து நானெனன் றபிமானஞ் செய்துவருஞ் சீவன் விளைநிலத்தில் பயிர்செய்வோன் அந்நிலத்தின் பயனை யனுபவிப்பதுபோல க்ஷேத்திர வடிவச் சரீரத்தின் பயனாகிய சுகதுக்கங்களை யனுபவித்து வருகின்றானென்பதும், சரீரரூபமான க்ஷேத்திரம் நான் மனுஷனெனச் சாமானிய வடிவமாகவும், நான் பிராமணன்-க்ஷத்திரிய னென்றற் றொடக்கத்தனவாக விசேட வடிவமாகவும் சீவனு லறியப்படுகின்றதென்பதும், க்ஷேத்திர மித்தன்மையது, க்ஷேத்திரக்ஞ னித்தன்மைய னென்பவற்றைச் செவ்வையாக விசாரித்தறிபவர் சீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானத்தை யெளிதிலடைந்து பிறவாநிலையை யடைவரென்பது மிங்குணர்தற் பாலனவாம்.

* பிரஹ்மன் முதல் ஸ்தமப பரியந்தமான சரீர மனைத்திலும் பிரஹ்மமே அவித்தை அல்லது அந்தககரண உபாதி பேதத்தால் சீவ ரூபமா யிருக்கின்றது; அச் சீவன் உண்மையில் பிரஹ்மமேயாம்; க்ஷேத்திரமென்னு முடம்பையும் க்ஷேத்திரக்ஞனென்னும் சீவனையும் அவற்றின் தன்மைகளோடு தமது புண்ணிய கர்ம பரிபாக காலத்தில் சற்குருவி னனுக்கிரகத்தா லறிகின்றவர் அறிவே தத்துவ ஞானமாம்; அந்த ஞானமே ஜன்ம காரணமா யுள்ள அஞ்ஞானத்திற்கு விரோதியாம்; மற்ற ஞானங்கள் அஞ்ஞானத்திற்கு விரோதிக ளாகாமையின்

க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞ னென்பவற்றின் தன்மையைச் சுருக்கமாகக் கூறிய பகவான் அதனை விரித்துக் கூறத்தொடங்கி, அதனை வசிஷ்டர் முதலிய மகரிஷிகளும் பலவிதமாகக் கூறி யிருக்கின்றன ரெனல்.

*அருச்சுனா ! சரீரவடிவ இந்த க்ஷேத்திரத்தினது உற்பத்தியையும், அதனது தர்மத்தையும், அது தோன்றி யடையும் விகாரத்தையும், க்ஷேத்திரக்ஞனது சொப்பிரகாசத் தன்மையையும், சிறந்த தவத்தையுடைய வசிஷ்டர் முதலிய மகரிஷிகள் (தாமருளிச் செய்த நூல்களில்) பலவிதமாகக் கூறியிருக்கின்றனர். பரமேசுவரனாகிய நானும் அவற்றைச் சுருங்கச் சொல்லலும் விளங்க வைத்தலுமாகக் கூறுகின்றேன்; அவற்றை நீ கவனமாய்க் கேட்கக் கடவாய். **

க்ஷேத்திர க்ஷேத்ரக்ஞனது சொரூபத்தை உணர்வதன்கண் அருச்சுனனுக்கு வேட்கையுண்டாக்கிய பகவான் அவனுக்கு முன்னர் க்ஷேத்திரத்தின் சொரூபத்தைக் கூறல்.

*சிறந்த தவத்தையுடைய அருச்சுனா! தமது காரியமாயுள்ள எந்தப் பொருளினிடத்தும் வியாபித்து எவ்விடத்து மிருக்கின்ற பிருதிவி - அப்பு - தேயு - வாயு - ஆகாயமென்னும் ஐம்பெரும் பூதமும், அப்பூதங்களைத் தருகின்ற (துன்பந் தருவதற்கண் தனக்கொன்*

---

*தத்துவ ஞான மன்று மென்பதும், க்ஷேத்திரக்ஞன் அவித்தை அல்லது அந்தக்கரண உபாதியால் கர்த்திருத்துவ போக்த்திருத்துவ முதலிய தருமங்களுடையவனாய் விளங்குகின்றான்; அவித்தை அல்லது அந்தக்கரண உபாதியைக் கழித்து நோக்கினால் அவன் பிரஹ்ம சொரூபமாக விளங்குவ தன்றி வேறு சொரூபமாக விளங்குவதில்லை யென்பதும், சர்வ க்ஷேத்திரமும் பிரஹ்மத்தின் கண் கயிற்றின்கண் பாம்புபோலக் கற்பிதமா யிருத்தலின், அவை உண்மையில் பிரஹ்மத்தைத் தவிர இல்லையாம்; க்ஷேத்திரம் கற்பிதமா யிருத்தலால் அது காரணமாகப் பிரஹ்மத்திற்கு க்ஷேத்திரக்ஞனென்று வந்த பெயரும் கற்பிதமா மென்பது மிங்குணர்தற் பாலனவா மென்க.*

** சரீரவடிவ க்ஷேத்திரத்தின் சுபாவம்-ஜடம், திருசியம், பரிச்சின்ன முதலியனவாம்; தர்மம்-இச்சை துவேஷ முதலியனவாம்; விகாரம்-இந்திரிய முதலியனவாம். க்ஷேத்திரக்ஞன் தன் சொரூபத்தால் சொப்பிரகாச சைதன்ய ஆநந்த சுபாவ முடையவன்; ஆனால், உபாதியால் கருத்திருத்துவாதி குண முடையவன் என்பன இங்குணர்தற் பாலனவாம்.*

றுப்பாகாதுள்ள) அகங்காரமும், அவ்வகங்காரம் அப்பூதங்கட்கு முன்னே வந்து தோன்றுவதற்கு விரோதமாகாதுள்ள மிதத்தையா யுள்ள புத்தியும், அப்புத்திக்குக் காரணமாயுள்ள அவ்வியக்தமும் என்னுமிவ் வெண்வகைப் பிரகிருதிகளும், நல்வினை - தீவினைகளைச் செய்தற்குக் காரணமாயுள்ள மனமொன்றும், தனித்தனியாக விருத்தலின் ஒருவழிவமென்றமைப்பதற்கரிய சுரோத்திராதி ஞானேந்திரிய மைந்தும், அவ்விந்திரியங்களால் அநுபவித்தற்குரிய (அவிவேகிகள் துன்ப சாதனமாதலை யறியாதுள்ள) சப்தாதி விஷயங்களைந்தும், சுரோத்திரிய முதலிய இந்திரியங்களாலும் சப்த முதலிய விஷயங்களாலும் தீவினைகளைச் செய்கின்ற வாக்காதி கருமேந்திரிய மைந்துமாகிய இவையனைத்தும் விருப்பு வெறுப்பு - சுகம் துக்கம் - தைரிய முதலியனவும் நெருங்கிப் பொருந்தியுள்ள விகாரத் தன்மைகளோடு கூடிய இக்கூட்டமே க்ஷேத்திரமென்று சொல்லப்படுவதாம்; இதனை நீ அறிவாயாக, இனி க்ஷேத்திரக்ஞனை யறிதற்குரிய அமானித்துவ முதலிய குணங்களையும் கூறுகின்றேன், நீ கேட்கக் கடவாய் †

† பிருதிவி முதலிய ஐம்பெரும் பூதங்கள், அகங்காரம் புத்தி-அவ்வியக்த மென்னும் எண்வகைப் பிரகிருதிகள், ஞானேந்திரிய கருமேந்திரியங்கள், மனம், சப்தாதி விஷயங்கள், விருப்பு வெறுப்பு - இன்பம் துன்பம் - தைரிய முதலிய வற்றின் கூட்டமாயுள்ள சரீரமே க்ஷேத்திரமாமென்பதிங் குணர்தற்பாலதாம்.

ஐம்பெரும் பூதங்கட்குக் காரணம் அகங்காரமாம், அதற்குக் காரணம் புத்தியாம், அதற்குக் காரணம் அவ்வியக்தமாம்

இங்கு அவ்வியக்த மென்பது பரமேசுவரனது சக்தி வடிவமாயுள்ள மாயையாம், புத்தி யென்பது உலகப் படைப்பின் தொடக்கத்தில் பரமேசுவரனுக்கு யானிவ் வுலகத்தைப் படைப்பேனென்னு முண்டாகும் ஞானமாம், அகங்காரமென்பது அந்த ஞானத்தின் பின் யானெல்லாப் பொருளு மாவேனென்னு முண்டாகும் சங்கற்பமாம்.

பிருதிவி முதல் தைரிய மீறாயுள்ள பதார்த்த மனைத்தும் சேதனத்தால் விளங்குதற் குரியனவா யிருத்தலின், அவை சேதனத்திலும் வேறாம்; அதனால் அவை க்ஷேத்திரமென்றும், சேதனம் க்ஷேத்ரக்ஞ னென்றும் கூறப்படுகின்றன வென்க

க்ஷேத்திரத்தின் சொரூபத்தைத் திருவாய் மலர்ந்தருளிய பகவான் க்ஷேத்திரத்திற்குச் சாட்சியாயுள்ள க்ஷேத்திரக்ஞன், அதனினும் வேறென்று அருச்சுனனுக்கு விரிவாகத் தெரிவித்தற் பொருட்டு க்ஷேத்திரக்ஞனை க்ஷேத்திரத்தினின்றும் வேறு பிரித்தறிதற்குரிய அமானித்துவ முதலிய ஞான சாதன குணங்களைக் கூறல்.

அருச்சுனா! தனது குணத்தைச் சிறப்பித்துப் பேசுவதாகிய மானமும் - பிறர் தன்னை நன்கு மதிக்குமாறு தனது தர்மத்தைக் காண்பிப்பதாய இடம்பமும்-மோட்ச மார்க்கத்தி லொழுகுவ தில்லாத குறைபாடும்-எறும்பு முதலிய பிற பிராணிகட்கு இம்சை செய்தலும்-தானல்லாத உடம்பில் யானென்னும் அகங்காரமும் - இகலோக பர லோக விஷயபோகங்களி லுண்டாகும் பேராசையும் என்னு மிவற்றை யொழிக்கும் வல்லமையும், தானடைந்துள்ள சிறந்த கிருகத்தோடு மனைவி மக்கள் முதலியோரிடத்துப் பொருந்தி யெழுகின்ற ஆசையை நீக்குதலும், சரீர சுத்தியும், மோட்ச மடைதற்குத் தடையாயுள்ள சப்தாதி விஷயங்களில் தேகேந்திரியங்கள் சென்று சுழலுதலும்-பிறர் செய்யும் அபராதங் காரணமாக உண்டாகின்ற கோபமும் - கீழ்மக்க ளோடு சேர்தலு மென்னுமிவற்றை யொழித்தலும், ஒப்பற்ற பரம் பொருளாய வாசுதேவனாகிய என்னையே எல்லாவற்றினும் மேலாய பொருளாகவும் பரம கதியாகவும் தீர்மானித்துச்சித்தத்தின்கண்வைத் துத்தியானிக்கும் நிரதிசயப் பிரீதிரூபமான பக்தியும்,நல்வினை-தீவினை களை அவற்றின் காரணமாய அஞ்ஞானத்தோடு தத்துவ ஞானத்தால் நீக்கி யிருக்கும் பெரியார் வசிக்கும் ஆற்றங்கரை - மலைக்குகை முத லிய விடங்களை யடைதலும், சற்குரு மூர்த்தியை மிகு பிரியமாக வணங்கி அவர்க்குத் தொண்டுசெய் தொழுகு மியல்பும், யாதொரு குற்றமு மில்லாதுள்ள ஆத்மாவையும்-குற்ற மெல்லாம் நிறைந்துள்ள அநாத்மாவையும் உள்ளபடி பிரித் தறியும் விவேகமும், முன்னே தோன்றுகின்ற பிறப்பு - மூப்பு - இறப்பென்பவற்றால் வந்தடைகின்ற துன்பங்களை அடிக்கடி சிந்தனைசெய்து நோக்குதலு மென்னு மிவை யனைத்தும் ஞானசாதன குணங்களாம். இனி இந்த ஞான சாதனமா யுள்ள குணங்களால் சென்றடைதற்குரிய ஞேய வஸ்துவாய பொரு

ளாக கூறுகின்றேன், அதனை நீ ஆராய்ச்சி செய்து கேட்பாயாக.

மான மில்லாமை, இடம்ப மில்லாமை முதலியவற்றா லறிந் தடைதற்குரிய ஞேய வஸ்துவின் தன்மையைப் பகவான் கூறல்.

அருச்சுனா! அந்த ஞேய வஸ்து தோற்ற வொடுக்க மில்லாததாம்; எங்கும் பிரிவின்றி அழியாது நிற்கும் தன்மையதாம், சத் அசத் என்று கூறத்தக்க குறைபாடில்லாது விளங்குவதாம், ஞான சாவப் பிரபஞ்சமுமாகி அப்பிரபஞ்ச மெங்கும் வியாபகமா யிருத்தலின் இவ்வள வென்று வரையறை செய்து கூறுதற்கரிய கை - காது - தலை - கால - முக முதலியவற்றை எவ்விடத்து முடையதாம் ‡

அந்த ஞேய வஸ்துவிற்கு உண்மையில கை செவி முதலியன இல்லை, அவை அவ்வஸ்துவினிடத்து உபாதியால கற்பிக்கப்பட்டிருக்கின்றன வென்று பகவான கூறல்.

அருச்சுனா! அந்த ஞேயப் பிரஹ்மம சப்தாதி விஷயங்களை யறிதற்குரிய சுரோத்திராதி யிந்திரிய மனைத்திற்கும் அறிவாய் நின்று, அவ் விந்திரியங்களின் கேட்டல் முதலிய வியவகாரங்களை யுடையதாகத் தன்னைத் தோற்றுவிப்பதாம், பிராணிகள் விரும்புகின்ற அவ் விந்திரியங்களுள் ஒன்றும் தனக்கு உண்மையி லில்லாமல பொருந்

---

* மானமில்லாமை, இடம்ப மில்லாமை, மோட்சமாரக்கப் பிரவிருத்தி, பிராணிகட் கிம்சை செய்யாமை, அகங்கார மில்லாமை, இகபரலோக போகங்களில் விருப்பமில்லாமை, காணி மனை முதலியவற்றின் கண்ணும் மனைவி மக்கள் முதலியோரிடத்தும் தொடாந்து தொடாந் தெழுகின்ற ஆசையை யகற்றல், தேகசுத்தி, இந்திரிய நிக்கிரகம், சினத்தை யொழித்தல், தீவினையாளரோடு சோகலை நீக்குதல், பரவாசுதேவனை மறவாது தியானஞ் செய்தல், பெரியாரிருக்கு மிடத்திற் சென்று வசித்தல், குருவழிபாடு, ஆத்மாநாத்ம விவேகம், பிறப்பு முதலியவற்றால வரும் துன்பங்களை அடிக்கடி சிந்தனை செய்து நோக்குதலென்பன க்ஷேத்திரக்ஞனை உள்ளவாறு க்ஷேத்திரத்திலும் வேறாக அறிதற்குச் சாதனங்களாக விருத்தலின், இவை ஞான சாதன குணங்களென்று கூறப்பட்டன இவற்றிற்கு மாறாயுள்ள குணமனைத்தும் அஞ்ஞானம் அபிவிருத்தி யாதற்குச் சாதனங்களாக விருத்தலின், அவை அஞ்ஞான சாதனங்களா மெனப்படுங் குணாதற்பாலதாம்

‡ ஞேயவஸ்து வெனப்படுவது காலத்தாலும் தேசத்தாலும் பொருளாலும் முடிவுடைய தாகாதுள்ள பரப்பிரஹ்மமாம்

துந தன்மை யுடையதாம், தான் அசங்கமா யிருக்கலின், எப்பொருளி டத்தும் பொருந்தும் சம்பந்தம் தனக்கு உண்மையாக வில்லாது சா வப் பிரபஞ்சத்தையும் தானே சத்ரூபத்தால் தரித் திருப்பதாம், சத்துவம் - இராசதம் - தாமத மென்னும் குண மூன்றும் தனக்கு உண்மையாக வில்லாமலே அக்குணங்களின் காரியமா யுள்ள சுக - துக்க-மோசங்களோச சப்த - பரிச முதலிய விஷயங்களின் வா யிலாகப் பொருந்தி யனுபவிப்பதாம் †

அந்த ஞேய வஸ்து விளங்கு நிலையினைப் பகவான் கூறல

அருச்சுன! இன்னும் அந்த ஞேயப் பிரஹ்மம் இவ்விபவசார தசையில் தனது கற்பித காரியமாயுள்ள பிருதிவி - அப்பு - தேயு - வாயு - ஆகாயமென்னும் ஐம்பெரும் பூதங்களின் உள்ளிலும் வெளியி லும் (தன் காரியமான கடத்தில் மண் வியாபித்திருப்பது போல) வியா பித் திருப்பதாம், தனது சொரூபத்திற்குக் கேடில்லாமல் நடப்பன வென்னும் சங்கம ரூபமாயும் நிற்பனவென்னும் தாவர ரூபமா யிருப்பதாம். (அருச்சுன! நீ அஃது தவ்வாறிருப்பதாயின், எம் மனோர்க்கு எக்காரணத்தால் விளங்காதிருக்கின்றதென்று வினவுதல் கூடும், அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய) அந்த ஞேயப் பிரஹ்மம் சாவானமாவாக விருந்தும் இத்தன்மையதென்று கூறுவதற்கும் அறிதற்கு மரிதாமாறு மிகு சூக்குமமா யிருப்பதாம், (அதனால், சீவர்களுக்கு விளங்காதிருக்கின்றது.) அந்த ஞேயப் பிரஹ் மம் உண்மையில் தாவர - சங்கம ரூபமா யுள்ள பிராணிகளிடத்து ஏக ரூபமாகவே யிருந்தும், தேகாத்மப் பிராந்தியால் பேதமுடை யதுபோலச் சரீரந்தோறும் நின்று விளங்குவதாம் ‡

† ஞேயப் பிரஹ்மம் உண்மையில் சுரோத்திர முதலிய இந்திரியங்களும், பிறவு மில்லாதிருந்தும் மாயையென்னு முபாதியால் அவற்றை யுடையதுபோல விளங்குகின்றதென்பதிங் குணர்தற்பாலதாம்

‡ ஆத்மா உண்மையில் ஒன்றாகவே யிருந்தும்,தேகாத்மப்பிராந்தியுடையார்க் குப் பலவாக விளங்குகின்றது, தேகாத்மப் பிராந்தி நீங்கினவர்க்கு ஒன்றாகவே விளங்குகின்றதென்பதிங் குணர்தற்பாலதாம்

பகவான் ஞேயப்பிரஹ்மத்தின் தடஸ்த விலக்கணத்தைக்கூறி முடித்து அதன் சொரூப விலக்கணத்தைக் கூறல்.

அருச்சுனா ! அந்த ஞேயப் பிரஹ்மம் உருவ முதலிய குணங்களில்லாததாய் விவேகம் வைராக்யம் முதலிய சாதனமில்லாதார்க்கு எட்டுதற் கரியதா யிருத்தலின், இலக்ஷங்கோடி யோசனை தூரமுடைய தேசம்போல அத்தியந்தம் தூரமாயிருப்பதாம்; விவேகம் வைராக்ய முதலிய சாதனங்கள் நிறைந்துள்ளவர்க்குச் சர்வமுந்தானாய் அவர்தம் ஆத்மவடிவமாக விளங்குதலால் அத்தியந்தம் சமீபமா யிருப்பதாம ; தாவர சங்கமரூபமாயுள்ள பொருளனைத்தையும் படைக்க வேண்டிய காலத்தில் படைத்து, மீண்டும் அவற்றை யழிக்க வேண்டிய காலத்தி லழிப்பதாம்; (இங்ஙனம் உலகத்திற்கு உற்பத்தி-ஸ்திதி - லய காரணமா யிருத்தல் அதன் தடஸ்த விலக்கணமாம். இனி அதன் சொரூப விலக்கணத்தைக் கூறுகின்றேன், நீ கேட்கக்கடவாய்.)

அருச்சுனா ! அந்த ஞேயப் பிரஹ்மம் தமக்கொப்பாவதில்லாத சூரியன் - சந்திரன் - அக்கினி - மின்னல் முதலிய வெளி ஒளிப்பொருள்களுக்கும், மனம் - புத்தி முதலிய உள் ஒளிப்பொருள்களுக்கும் உள்ளொளியாகியே விளங்குவதாம ; இவ் வுலகத்தின்கண் பிராணிகளின் புத்தி விருத்தியின்கண் பேதமற்ற ஞானமாயும் அந்த ஞானத்தின் விஷயமாயும் பொருந்தி யிருப்பதாம். †

பகவான் க்ஷேத்திர முதலியவற்றைக் கூறிப் பூர்வப் பிரசங்கத்தை முடித்தல்.

குற்றமற்ற மனமுடைய அருச்சுனா ! இவ்வாறாகக் கூறியதாய இந்த ஞேயப் பிரஹ்மம் முன்னர்க்கூறிய அமானித்துவ முதலிய

† (1)எது ஒருகாலத்திருப்பதாயத் தன்னை யுடையதை மற்றவற்றினின்றும் வேறு பிரித் தறிவிக்கின்றதோ அது தடஸ்த விலக்கணமாம், இதற்கு உதாரணம் இவன் ராமக்கார னென்றாற் போலவதாம் (2) எது எப்போது மிருப்பதாயத் தன்னை யுடையதை மற்றவற்றினின்றும் வேறு பிரித் தறிவிக்கின்றதோ அது சொரூப விலக்கணமாம், இதற்கு உதாரணம் தீ சூடுடைய தென்றாற் போலவதாம். ஞேயப் பிரஹ்மம் சூரியன் முதலிய ஒளிப் பொருள்களுக்கும், மன முதலிய ஒளிப்பொருள்களுக்கும் உள்ளொளியா யிருப்பதா மென்றமையின், அது சொப்பிரகாசவடிவமா மெனபது பெறப்பட்டது, படவே, அதனிடத்து அஞ்ஞான முண்மையி லின்றாமெனபது பெறறாமென்க

ஞான சாதன குணங்கள் வாயிலாக அதிகாரி புருஷர் தமதாத்மாவாக அபரோட்சமா யறிதற்குரிய பொருளாம். உனக்கு யான் க்ஷேத்திர சொரூபத்தையும், அந்த க்ஷேத்திரத்தின்கண் பொருந்திய அமானித்துவ முதலிய ஞான சாதன குணங்கள் முழுவதையும், அந்த ஞான சாதன குணங்கள் வாயிலாக அபரோட்சமாக அறியப்படும் ஞேயப் பிரஹ்மத்தி னிலக்கணத்தையும் இதுகாறும் குறைவற்ற வகையாகச் சுருக்கமாய்க் கூறினேன்; இனிக் கூறுவதையும் நீ கேட்கக் கடவாய்.†

பகவான் எனது பத்தரே க்ஷேத்திர முதலியவற்றை உள்ளவாறுணர்ந்தென்னை யடைந்து பிறவித்துன்பத்தினின்றும் நீங்குவரெனக் கூறல்.

அருச்சுனா ! என்னிடத்துக் கொண்ட அசூயையால் எனது வாக்கை யிகழ்வ தொழித்து, யான் முன்பு கூறிய க்ஷேத்திரம் - ஞானம் - ஞேயமென்னு மிப்பொருள் மூன்றனையு முள்ளபடி யெனது பத்தர்களே யறிந்து, நால்வகைப் பிறப்புக்களென்று கூறப்படுகின்ற குற்றம் நிறைந்துள்ள மாயையாகிய கடலைக் கடந்து, பிறவிக்கஞ்சுகின்றவர் விரும்புகின்ற நிரதிசயாநந்த வடிவமாயுள்ள என்னை அபேதமா யடைவர். க்ஷேத்திரம் க்ஷேத்திரக்ஞ னென்பனவற்றைப் பற்றி இன்னும் சில கூறுகின்றேன், நீ கேட்கக்கடவாய். §

பிரகிருதி பரை - அபரையென இருவகைத்தாம். அவற்றுள், அபரை க்ஷேத்திரமாம்; பரை க்ஷேத்ரக்ஞனும் ; அவை சர்வபூதங்கட்கும் காரணமாமென மாயாரூப அத்தியாயத்தில் கூறிய பகவான் அவை அநாதியென்பதையும் அவற்றின் காரியங்களையுங் கூறல்.

அருச்சுனா! யான் கூறிய க்ஷேத்திரத்திற்கும் க்ஷேத்ரக்ஞனுக்கும் வாஸ்தவமாகக் காரணத்தை ஆராய்ந் தறிபவர் ஒருவரு மிலராவர்; (அதனால், க்ஷேத்திரத்தையும் க்ஷேத்ரக்ஞனையும் அநாதியென்றும், விகாரங்களையும் குணங்களையும் க்ஷேத்திரமென்னும் பிரகிருதியின் காரியமாமென்றும் நீ உணர்வாயாக.)

† அமானித்துவம் - மானமின்மை. அபரோட்சம் - பிரத்தியட்சம்.

§ பத்தரென்றது பத்தியோக அத்தியாயத்திற்கூறிய இலக்கண முடைய பத்தரை. அசூயை - பொறாமை. நால்வகைப் பிறப்பு - சராயுஜம்(பையிற் பிறப்பது), அண்டஜம் (முட்டையிற் பிறப்பது), சுவேதஜம் (வியர்வையிற் பிறப்பது), உத்பிஜ்ஜம் (நிலத்தைப் பிளந்துகொண்டு பிறப்பது) என்பனவாம்.

அருச்சுனு ! நீ குற்றமற்ற அவ்விரண்டனது காரிய மெவை யென வினவுதல் கூடும். சுருதியனுசாரமாக இவ்விரண்டன் காரியங்களையும் உனக்கு விளங்கக் கூறுகின்றேன் கேட்கக் கடவாய். *

அருச்சுனு ! சுக-துக்க-மோக ரூபமாகப் பொருந்திய சத்துவம்-இராசதம்-தாமதமென்னு முக்குணங்களின் சாமியாவஸ்தைக்கு வேறுகப் பிரகிருதி யில்லை; அக்குணங்களின் சாமியாவஸ்தையே பிரகிருதி யென்று கூறபபடுவதால், கருதத்தக்க காரியவடிவச் சரீரம் - சுக துக்க சாதனமாயுள்ள இந்திரியவடிவக் காரணமென்பனவற்றிற்கு மாயாரூபப்பிரகிருதியே காரணமாம் ; பிரகிருதியின் காரியமாகக் கருதுகின்ற சுக துக்க மென்னு மிவற்றை அனுபவிக்கும் காரணம் புருஷனும்.‡

(பகவானே ! தாங்கள் 'சுக துக்க மென்னு மிவற்றை அனுபவிக்கும் காரணம் புருஷனும்' என்று முன்பு க்ஷேத்திரக்ஞனை புருஷன் சுக துக்கங்களை அனுபவிக்கின்றனென்று கூறினீர்; அவன் அவற்றை அனுபவிப்பதற் கொருகாரண முண்டா? இல்லையா? யாதொரு காரண

* அநாதி - உற்பத்தியில்லாதது. விகாரங்கள்-ஆகாசாதி பூதங்கள், சுரோத்திராதி ஞானேந்திரியங்கள், வாக்காதி கருமேந்திரியங்கள்,மனமென்பனவாம்; குணங்கள் - சுக துக்க மோக வடிவமாகப் பொருந்திய சத்துவம் - இராசதம்-தாமதமென்னுங் குணங்களாம். க்ஷேத்திரமென்னும் அபரைப் பிரகிருதிக்கும், க்ஷேத்ரக்ஞனென்னும் பரைப் பிரகிருதிகும் உற்பத்தி யின்மையின், அவை அநாதியாம். அவை உற்பத்தி யுடையன வென்பதற்கு யுக்தியொன்று மில்லையாம். அபரைப் பிரகிருதிக்கு (மாயைக்கு) உற்பத்தி கூறின், அதற்குக் காரணம் யாது? அக்காரணத்திற்குக் காரணம் யாது? என முடிவின்றிச் சேறலென்னும் அநவஸ்தா தோஷம் சம்பவிப்பதாம்; க்ஷேத்ரக்ஞனுக்கு (ஆத்மாவிற்கு) உற்பத்தி கூறின், அதற்கு மித்தோஷம் சம்பவிப்பதாம்; இதுவேயுமன்றிக் கிருதநாசம் (செய்த கன்மம் அனுபவியாமல் நாசமாதல்), அகிருதாப்பியாகமம் (செய்யாத கருமம் அனுபவிக்குமாறு வருதல்) என்னுந் தோஷ மிரண்டும சம்பவிப்பனவாம். இதனுல், பிரகிருதி (மாயை) புருஷன் (ஆத்மா) என்னும் இரண்டு மநாதியாமென்பது பெறப்பட்டதென்க

‡ சாமியாவஸ்தை-ஒத்த நிலைமை; புருஷன் (க்ஷேத்ரக்ஞன்) சொரூபத்தில் அகர்த்தா வடிவினனு யிருந்தும், பிரகிருதியின் கற்பித சம்பந்தத்தால், சுக துக்கங்களை யனுபவிக்கும் கருத்தாவைப் போல விளங்குகின்ற னென்பதிங் குணர்தற்பாலதாம்

அவை அவனிடத்துச் சம்பவிக்கின்றன வென்றுமோ, பந்த காலத்திலேயன்றி மோட்ச காலத்திலும் அவனுக் கவை சம்பவித்தல் வேண்டும்; இத்தோஷத்தை நீக்குதற்பொருட்டு அவன் சுக துக்கங் களை அனுபவிப்பதற்கு யாதாவதொரு காரணத்தை அங்கீகரித்தல் வேண்டும்; அக்காரணம் யாதென்று அருச்சுனா! நீ வினவுவாயாயின், அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.)

அருச்சுனா! இந்த க்ஷேத்திரக்ஞ னென்னும் புருஷன் இம்மாயா வடிவப் பிரகிருதியின்கண்ணே (விபரீத புத்தியால் அதனோடு ஒற்றுமை யுடையவனாய்) இருந்து, அந்தப் பிரகிருதி தருகின்ற சுக துக்கங்களை அநுபவிக்கின்றான்; இந்தப் பிரகிருதியின் காரியமான குற்றமுடைய பொருள்களில் இது நான், இவை யென்னுடையன வென்று விபரீத புத்திகொண் டிருத்தலால், இறக்கின்றான், பிறக்கின்றான்.*

(க்ஷேத்ரக்ஞனுக்குச் சம்சாரம் வருதற்குரிய காரணத்தைத் தேவரீரருளிச்செய்தீர்; அதனா லவன் தன் சொரூபத்தால் சம்சார மில்லாதவ னவ னென்பது பெறப்பட்டது; அவனது சொரூபம் எத் தன்மைய தென்று அருச்சுனா! நீ வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.)

---

* க்ஷேத்ரக்ஞனென்னும் புருஷன் மாயாரூபப் பிரகிருதியின்கண் விபரீத புத்தியால் அதனோடு வேற்றுமை யில்லாதவனா யிருந்து அதனா லுண்டாகின்ற சுக துக்கங்களை அந்தக்கரண விருத்தியா லனுபவிக்கின்றான்; அந்தச் சுக துக்கங் களை யனுபவித்தற் பொருட்டு, சத்-அசத்-சதசத் யோனிகளிற் பிறக்கின்றான், இறக்கின்றான். அவனது ஜனன மரணவடிவச சம்சாரத்திற்குக் காரணம் அவன் தேகேந்திரிய முதலியவற்றின்கண் யானெனதென்று கொண்டுள்ள விபரீத புத்தியேயா மென்பதும், இந்திரன் முதலிய இமையவர் சரீரங்கள் சத்யோனி யிற் றோன்றினவையாம்- பசு பட்சி முதலிய சரீரங்கள் அசத் யோனியிற் றோன் றினவையாம்-மானுட சரீரம் சத் அசத் யோனியிற் றோன்றியதாம். இம்மூன்று சரீரங்களும் முறையே பெரும்பான்மையும் சுகத்தையும் துக்கத்தையும் அவ்வி ரண்டையும் க்ஷேத்ரக்ஞனனுபவித்தற் குரியனவா யிருக்கின்றன வென்பதும், சத்துவ குணத்தின் மிகுதியால் சத்யோனியிற் பிறத்தலும் - தாமதகுணத்தின் மிகுதியால் அசத்யோனியிற் பிறத்தலும் - இராசத குணத்தின் மிகுதியால் சத் அசத் யோனியிற் பிறத்தலும் க்ஷேத்திரக்ஞனுக்குச் சம்பவிக்கின்றன வென்ப தும், பெரும்பான்மையும் க்ஷேத்ரக்ஞன் பிரகிருதியின் சத்துவகுணத்தால் சுகத்தையும் - தாமதகுணத்தால் துக்கத்தையும் - இராசத குணத்தால் சுக துக்க மிரண்டையு மனுபவிக்கின்றா னென்பது மிங்குணர்தற் பாலனவாம்

என் நண்பனுயுள்ள அர்ச்சுன! இந்த தேகமே யானென்னும் அபிமான வடிவச் சங்கற்பத்தைச் செய்துகொண்டு, இந்த தேகத்திலே சீவ வடிவமாகி, உண்மையில் அதற்கு வேருயிருக்கின்ற க்ஷேத்ரக்ஞனென்னும் புருஷன் அனுபவித்தற் குரியனவாயுள்ள சுக துக்க முதலிய அனைத்தையும் அனுபவிப்பவனும், தன்னுடம்பின்கண் உள்ள ச்ரோத்திர முதலிய இந்திரியங்களின் வாயிலாகச் சப்த முதலிய சர்வ பதார்த்தங்களையும் காண்பவனும், சர்வ பதார்த்தங்களுக்கும் காரணமாய்ப் பொருந்தியிருக்கும் மகேசுவரனுய மிருக்கின்றான். †

† அனுபவிப்பவன் = போக்தாவாம், காண்பவன்-உபத்ருஷ்டாவாம் க்ஷேத்ரக்ஞன் போக்தாவாயும், உபத்ருஷ்டாவாயும், மகேசுவரனுயு மிருக்கின்றானென்று கூறியதன்கண் அவன் அநுமந்தாவாயும், பர்த்தாவாயும், பரமாத்மாவாயு மிருக்கின்றானென்பதும் அடங்கி யிருக்கின்றதென்பதிங் குணர்தற்பாலதாம்.

மாயாவடிவப் பிரகிருதியின் காரியமாய சரீரத்தில் சீவ ரூபமா யிருக்கும் க்ஷேத்ரக்ஞன் உபத்ருஷ்டாவாகவும், அநுமந்தாவாகவும், பர்த்தாவாகவும், போக்தாவாகவும், மகேசுவரனுகவும், பரமாத்மாவாகவு மிருக்கின்றானென்று பகவான் கூறினமையின், அவன் உண்மையில் சம்சாரமற்றவனுய அசங்கனு யிருக்கின்றானென்பது பெறப்பட்டதென்க.

(1) க்ஷேத்ரக்ஞன் தேகேந்திரிய முதலியவற்றில் தான் வியாபார முடையவனுகாது, அவற்றிற்கு வேருய அவ்வியாபாரமுடைய தேகேந்திரிய முதலியவற்றை அவற்றின் சமீபத்திலிருந்து பார்த்துக்கொண்டிருத்தலின், உபத்ருஷ்டாவாம், அதனுல், அவைபோலக் கர்த்தாவன்றாம்.

(2) க்ஷேத்ரக்ஞன் தேகேந்திரிய முதலியவற்றின் பிரவிர்த்தியில் தான் பிரவிர்த்தி யில்லாதவனுயிருந்தும், பிரவிர்த்தி யுடையவன்போல அவற்றின் சமீபத்தி லிருக்குங் காரணத்தால் அவற்றின் பிரவிர்த்திக் கனுகூலனு யிருத்தலின், அநுமந்தாவாம்.

(3) க்ஷேத்ரக்ஞன் சேதனத்தி னுபாசத்தோடு கூடிய தேகேந்திரிய முதலியவற்றைத் தனது சத்தாஸ்புரணங்களால் தாரணஞ் செய்வதாலும் போஷணஞ் செய்வதாலும் பர்த்தாவாம். சத்தாஸ்புரணம் - இருத்தல் - விளங்கல், போஷணம் - புஷ்டிசெய்தல்.

(4) க்ஷேத்ரக்ஞன் புத்தியின் சுக-துக்க-மோக வடிவ விருத்திகளைத் தனது சைதன்ய சொரூபத்தால் பிரகாச முறச்செய்து, நிர்விகாரமா யிருத்தலின், அவற்றின் உபலப்தாவாம், அதனுல், போக்தாவாம்.

(5) க்ஷேத்ரக்ஞன் சர்வத்திற்கும் ஆன்மவடிவமாக விருத்தலின், மகேசுவரனும். மகானுகிய ஈசுவரன் மகேசுவரனுவன்.

பகவான் க்ஷேத்திர - க்ஷேத்ரக்ஞ விவேக ஞானியைத் துதிசெய்தல்.

அருச்சுனா! யான் மேற் கூறியவாறு உபதிருஷ்டா முதலிய வடிவனாய க்ஷேத்ரக்ஞனையும் சுக துக்க முதலிய குணங்களோடு கூடிய க்ஷேத்திரத்தையும் குரு சாஸ்திரங்களி னுபதேசவாயிலாக உள்ளவா றுணர்ந்தவன் மிகு பிரபலமாயுள்ள பிராரத்த கரும வசத்தால் தான் விரும்பிய போகங்களை அனுபவித்து, சாஸ்திர விதியை யனு சரியா தொழுகினாலும் மீண்டும் பொய்யாயுள்ள பிறப்பின்கண் செல்ல மாட்டான். ‡

(6) க்ஷேத்ரக்ஞன் தேகேந்திரிய முதலியவற்றிற்கு மேலாய்,வேறாய்,சேதன வடிவமா யிருப்பதால் பரமான்மாவாம்.

இவ்வாறுவகைப் பொருள்களால் க்ஷேத்ரக்ஞனது உண்மை வடிவம் நன்கு விளங்குவதாம்.

க்ஷேத்ரக்ஞன் அநுமந்தா - பர்த்தா - போக்தா என்னும், வியவகாரத்தால் பந்தமுடையவன் போலவும், உபதிருஷ்டா - மகேசுவரன் - பரமான்மா என்னும் வியவகாரத்தால் பந்தமில்லாதவன் போலவும் விளங்குகின்றான்; உண்மையி லவனுக் கிவ்விரண்டு மில்லையாம்.

‡ க்ஷேத்திரத்தையும் க்ஷேத்ரக்ஞனையு முள்ளவா றுணாதலாவது க்ஷேத்தி ரத்தை மித்தையென்றும் க்ஷேத்ரக்ஞனை நானென்றும் சந்தேக விபரீதமின்றி அறிதலாம். இவ்வாறுணர்ந்தவன் சாஸ்திர விதியை யனுசரியா தொழுகினும் பிறப்பின்கண் செல்லமாட்டா னென்றமையால், சாஸ்திர விதியை யனுசரித் தொழுகுகின்றவன் பிறப்பின்கண் செல்லமாட்டா னென்பதற்குத்தடையொன்று மில்லையாம். க்ஷேத்ரக்ஞனாகிய நான் பிரஹ்ம வடிவமாக விருக்கின்றேன், க்ஷேத்திரம் என்னிடத்துக் கயிற்றின்கண் பாம்புபோல மித்தையா யிருக்கின்ற தென்று குரு சாஸ்திர உபதேசவாயிலாக உள்ளவா றுணர்ந்தவனுக்குப் பிறப்பின் காரணமாயுள்ள அஞ்ஞானம் விளக்கின்முன் இருள்போலக் கெட்டொழிந்தமை யின், அவனுக்குப் பிறப்பு வருவ தில்லையாம்.

தேவராஜனாய இந்திரன் பிரஹ்மஞானியா யிருந்தமையால், சாஸ்திரவிதி யைக் கடந்து. தேவர்களுக்குக் கேடு சூழ்ந்த விசுவரூபனென்னும் பெயருடைய தனது புரோகிதனையும் கூடா வொழுக்கமுள்ள சந்நியாசிகள் பலரையும் கொன் றும், கொலைப்பாவத்திற் குரியவனாகா னயினா னென்று புராணங் கூறுவதினா லுணர்தற்பாலதாம்.

தாம் முன்பு அருளிச்செய்த பலத்தோடுகூடிய ஆத்ம ஞானத்தில் அதிகாரிகளின் பேதத்தால் சாதன விகற்பங்களைப் பகவான் கூறல்.

அருச்சுன! பிரஹ்மன் முதல ஸ்தம்ப மீறுயுள்ள சரீரமனைத்தி லும் நிறைந்துள்ள பிரத்யக் சைதன்யம (உள்ளுணர்வு) என்னும் இவ் வாத்மாவைச் சில அதிகாரிகள் தியான வடிவ ஆத்ம சிந்தனத்தால் தமது புத்தியின்கண்ணே அறிவர்; சில அதிகாரிகள் அறிதற்கரிய சாங்கிய யோக மார்க்கத்தால் சர்வ வியாபகமாய் நிற்கத் தமது புத்தி யின்கண்ணே தியானத்தி னுற்பத்தி வாயிலாக அறிவர்; சில அதி காரிகள் தமது வருணச் சிரமத்திற்குரிய வேத விகித கருமங்களைப் பயனோக்காது ஈசுரார்ப்பணமாகச் செய்வதா லறிவர்.

தியானயோகம்-சாங்கியயோகம்-கருமயோக மென்னும் பெருமை பொருந்திய இம்மூன்று சாதனங்களாலும் பிரத்தியக் சைதன்யமென னு மிவ்வாத்மாவை யறிதற்கு விசாலமான புத்தியில்லாத சில அதிகாரி கள் பரம காருண்யனை ஓராசாரியன் இதுவே தெய்வம், இதனை நீ இவ்வாறு சிந்தனைசெய்தல் வேண்டுமென்று உபதேசித்த ஒரு பொரு ளையே மிகு சிரத்தையோடு சிந்தனை செய்வார்கள்; அச் சிந்தனையின் மகிமையால் அவரும் பிறவியை யடையார். ¶

¶ இங்குக் கூறிய நான்கதிகாரிகளுள் முதலாவதாகக் கூறிய தியானயோகி கள் உத்தம அதிகாரிக ளாவர், இரண்டாவதாகக் கூறிய சாங்கிய யோகிகள் மத்திய அதிகாரிக ளாவர், மூன்றாவதாகக் கூறிய கரும யோகிகள் மந்த அதிகாரிக ளாவர், நான்காவதாகக் கூறியவர் மந்ததர அதிகாரிக ளாவர்

தியானயோகமாவது உலகசிந்தனையில்லாது தைல தாரைபோலத் தொடாந் துள்ள ஆத்ம சிந்தனமாம். இது சிரவண - மனனங்களின் பலவடிவமான நிதித் தியாசனமாம், உடல் பொறி முதலியவற்றின்க ணுள்ள ஆன்ம புத்தி வடிவ விபரீதபாவனையை யொழிப்பதாம். இந்தத் தியானயோக முடையார் தமது புத்தி யின்கண்ணே பிரத்யகாத்மாவைத் தியானமுடைய தம் மனத்தால் அறிவர்

சாங்கிய யோகமாவது சிரவண மனன வடிவ ஆத்ம சிந்தனமாம். இச்சாங் கிய யோகமுடையார் தமது புத்தியின்கண்ணே பிரத்யகாத்மாவைச் சர்வ வியா பகமாகத் தியான யோகத்தின் உற்பத்திவாயிலாக அறிவர். சிரவணம் பிர மாணத்திலுள்ள சந்தேகத்தையும், மனனம் பிரமேயத்திலுள்ள சந்தேகத்தையும் ஒழிப்பனவாம். இங்குப் பிரமாணம் உபநிஷத்துக்களாம்; பிரமேயம் அவற்று லறியப்படும் பொருள்களாம்.

அதிஷ்டானப பிரஹ்மத்தின் ஆசிரயமாய அதனையே விஷயஞ் செயவ (மறைப்ப) தாய அநிர்வசநீய அவித்தையினாலே இச சம்சார முண்டாயிறறு; ஆதலால, அவவதிஷ்டானப பிரஹ்மத்தை விஷயஞ் செயவ (அறிவ) தாய அகம் பிரஹ்மாஸ்மி (நான் பிரஹ்மமா யிருக்கின்றேன்) என்னும் பிரஹ்ம ஞானத்தாலே அவ வஞ்ஞானம் நீங்கிய அதிகாரி புருஷனுக்கு மோட்ச முண்டா மென்னு மாத்தத்தை நிச்சயஞ் செயதற பொருட்டு இவவத்தியாய முடியு மளவும சம்சாரத்தையும் அதனை நீக்குவதாய ஆன்ம ஞானத்தையும் விஸ்தாரமாகக் கூறத தொடங்கிய பகவான் இபபோது யானென தென்னு மபிமானமே சம்சார காரணமா மென்று முன்னாக கூறியதையே விளக்கமாகக்கூறல

அருச்சுனா! சீவாகள யாவரும சராசர வடிவமாயுள்ள உடமபுக ளைத தரித்துக்கொண்டு துனப மடைகின்றனாகள, அவாகள சராசர

---

கருமயோகமாவது பயனைக்கா மல ஈசுவரார்ப்பணமாகச செய்யும தத்தம வருணாசிரமங்களுக்குரிய வேத விகித கருமங்களாம இந்த யோகமுடையார தமது புத்தியினகண்ணே சித்தசுத்தி சிரவண ம மனனம நிதித்தியாசன மெனபனவற்றி னுறபத்தி வாயிலாகப பிரத்யகாத மாவை யறிவா

தியானயோக ம முதலியவற்றால பிரத்தியகாதமாவை யறிதற்குரிய புத்தியில லாதவா தமது சற்குரு கூறிய உபதேசப்பொரு ளொனறையே நமபி அதனையே சிந்தனைசெய்து வருவாராயின, அவரும அதனால பிரத்யககாதமாவை யறிந்து பிறபபிலலாதவ ராவா இவாககுச சித்தசுத்தியின பொருட்டுக கருமங்களி னபேட்சையு மில்லையாம, வேதங் கூறு ம தத்துவத்தினகண திட நிச்சய மிருபப தால சந்தேக நிவிர்த்தியின பொருட்டுச சிரவண மனனங்களி னபேட்சையு மில்லையாம

தியானயோக ம-சாங்கியயோகம கருமயோகமெனனு மிமமூன றனுள, எதனை யும மேறகொண்டொழுகச சாமாத்திய மிலலாதவரும பிறவியை யடைபா ரெனற மையால, தியான யோக முதலியவ றறை யுடையவா பிறபபை யடையா ரெனப தறகு யாதொரு தடையு மில்லையாம

பிரத்யக ஆதமாவை யறிதற்குத தியானயோகம காரணமாயும, தியான யோகத்திறகுச சாங்கிய யோகம காரணமாயும, சாங்கியயோகத்திறகுக கரும யோகம காரணமாயு மிருக்கின்றன வெனபதும, நானகாவதாகக கூறிய சாதனம தியானயோகமுதலிய மூனறையும தனனுளடக்கிக்கொண டிருக்கின்ற தென பது மிஙகுணாதற பாலனவாம

‡ கறபித வஸது இருத்தறகும விளங்குதறகும காரணமாயுள்ள யதாாதத வஸது அதிஷ்டானமாம

*வடிவ உடம்புகளைத் தரித்துக்கொண்டு துன்ப மடைதலாகிய இவ் வெல்லாவற்றிற்கும் காரணம், அவர்கள் பொருந்துதற்கரிய க்ஷேத்திரம் இத்தன்மையது, க்ஷேத்ரக்ஞனித்தன்மையன் என்று அவ்விரண்டனது வேற்றுமையை மாயா வசத்தால் விசாரித்தறியாததோர் அவிவேகமேயாம்.**

சம்சார முண்டாதற்குக் காரணம் க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாகஞான மில்லாமையா மென்றருளிச் செய்த பகவான் இப்போது அச்சம்சார நிவிர்த்தியின் பொருட்டுப் பிரகிருதிக்கு வேறாயுள்ள ஆத்மாவைத் தரிசிக்கும் விதத்தைக் கூறல்.

*அருச்சுனா! க்ஷணந்தோறும் கெடு மியல்பினவாயுள்ள பிருதிவி முதலிய பூதந்தோறும் கெடாததாய், யாதொரு தோஷமு மில்லாது சமமாய் நிர் விகாரமா யிருக்கின்ற வேதப் பொருளான பரமேசுவர வடிவமென்னும் ஆத்மாவைச் சர்வ பூதங்களிலும் ஏக வடிவமாய் யாதொரு வியவகாரமுமில்லாததா யிருப்பதென்று சாஸ்திர வாயிலாக அறிந்தவன் நல்லனவென்று கூறப்படுகின்ற அனைத்தையும் கடுவினன வாவது தவறு துணர்ந்தவ னவன்.* †

ஆத்ம தரிசனத்தை அதன் பலத்தோடு பகவான் துதிசெய்தல்.

*அருச்சுனா! சராசர வடிவமா யுள்ள சர்வ பூதங்களிலும் சமமாய் நிறைந்திருக்கின்ற ஒருமைப்பொருளாய ஆத்மாவை அவ்வாறாக அறியும் அதிகாரி புருஷனே மரித்தும் ஜனித்தும் சுழலாதவாறு தன்*

*சராசர வடிவமாகவுள்ள பொருளனைத்தும் க்ஷேத்திரத்திற்கும் க்ஷேத்ரக்ஞனுக்கு முள்ள சம்பந்தத்தாலுண்டா யிருக்கின்றன; இவ்விரண்டன் வேற்றுமையை உள்ளவாறு விசாரித்துணர்ந்தவர்க்கு ஜனன மரண வடிவச் சம்சார முண்டாவதில்லையா மென்பதிங் குணர்தற் பாலதாம். அஞ்ஞானமும் அதன் காரியமாய உலகும் க்ஷேத்திரமாம், அதற்கு வேறாயும், அதனை விளக்குவதாயும், சுயம்பிரகாச பரமார்த்த சத்தாயும், அசங்க உதாசீனமாயும், ஒருதர்மமுமில்லாததாயுமுள்ள அத்துவீதிய சைதன்னியம் க்ஷேத்ரக்ஞனும். தனதுண்மை வடிவத்தின் ஞான மில்லாதவனுக்குச் சம்சார முண்டாகின்றது; தன துண்மை வடிவத்தின் ஞான முடையவனுக்குச் சம்சாரம் நாசமாகின்றதென்பது இங்கு முக்கியப் பொருளாம்.*

† *நல்லனவென்பது துக்க நிவிர்த்தி - சுகப் பிராப்தி முதலியன்வாம்.*

னைத் தன்னாலேயே மெய்யான மோட்ச கதியிலே செல்ல விடு கின்றான். †

(புண்ணிய பாவகருமங்களைச் செய்வதும் அவற்றின் பயனாய சுக துக்கங்களை யனுபவிப்பதுமாய்த் தேகந்தோறும் வெவ்வேறாயுள்ள ஆத்மாவைச் சர்வ பூதங்களிலும் ஏகமாய்க்காண்ட லெவ்வாறுமென்று அருச்சுனா! நீ வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

கொத்தாகிய மலர்களால் தொடுத்த மாலையையுடைய கிரீடத்தை யணிந்துள்ள அருச்சுனா! க்ஷேத்ரக்ஞனான புருஷன் அவிகாரி யென்றும், லௌகிக வைதிகமான கரும மனைத்தும் உடல் பேர்றி முதலிய வடிவமாகப் பரிணமித்துள்ள பிருகிருதியினு டனே சம்பந்த முடையன வென்றும் அவ்விரண்டனையும் சாஸ்திர விசார வாயிலாக உள்ளவா றுணர்ந்தவனே தவறுதலில்லாமல் உண் மையை யறிந்தவனாவன். (அருச்சுனா! நீ ஆத்மா தன்னியல்பால் அகர்த் தாவாயினும், சரீரத்தோடு கூடி யிருத்தலால் கர்த்தாவாதல் கூடாதோ என்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன் கேட்கக் கடவாய்.) சரீரம் தனது சந்நிதான விசேஷத்தால் சர்வ கருமங்களையுஞ் செய்தாலும் ஆத்மா நிர்க்குணமா யிருத்தலின், அக்கருமங்களோடு சம் பந்த முறுவ தில்லையாம்.*

† ஒருமைப்பொருள்—யாதொரு சம்பந்தமுமின்றித் தானமாத்திரமா யுள்ள பொருள்

தமது நிஜவடிவ ஆத்மாவை உள்ளவா றுணராதவர் தம்மைத்தாமே கெடுக் குந் தன்மைய ராகின்றனர், உணர்ந்தவர் தம்மைத்தாமே கடைத்தேறச் செய்யுந் தன்மையு ராகின்றன ரெனபதிங் குணர்தற்பாலதாம்

ஆகாயம் ஒன்றாயிருத்தலின், தன்னோடு தான் வேற்றுமையுடையதா யிருப்ப தில்லையாம், ஆனால், கட பட முதலிய உபாதிகளால் வேற்றுமை யுடையது போல விளங்குகின்றது; அங்ஙனமே, ஆத்மாவும் ஒன்றாயிருத்தலின், தன்னோடு தான் வேற்றுமை யுடையதா யிருப்ப தில்லையாம், ஆனால், மானுடசரீரம் மிருக சரீர முதலிய உபாதிகளால் வேற்றுமை யுடையதுபோல விளங்குகின்றது, அங் ஙன மிருத்தலால், அதற்குக் கருத்திருத்தன்மை முதலியனவு மில்லையாமென் பதும், ஆத்மா அவிகாரியாதலால் ஒரு கருமத்தையும் செய்வதில்லை, செய்யின் விகாரியாம், நிர்க்குணமா யிருத்தலின, கருமங்களோடு கூடுவதில்லை; அதனால்,

பகவான் ஆன்மா சரீரத்தின்க ணிருப்பினும் அசங்கமேயாம்; அதனால், அசரீர கருமங்களோடு சம்பந்தமடைவ திலலையா மென்று முன்னாக கூறியதைத் திருஷ்டாந்த வாயிலாகக் கூறல்.

*அருச்சுனா! ஆராய்ந்தறியக்கூடாத ஆகாயம் எவ்விடத்தும் நீங்குதலில்லாது வியாபித் திருப்பினும், தனது அசங்கத் தன்மையால் பிற பொருள்களோடு சம்பந்தமடைவ திலலையாம், கூறிய இவ்வாகாயம் போல, நிலைபெற்ற ஆத்மாவும் எல்லா உடம்புகளிலும் வியாபித் திருப்பினும், தனது அசங்கத் தன்மையால் அவ்வுடம்புகளோடு சம்பந்தமடைவ திலலையாம், அதனால், அவ்வுடம்புகளின் கருமங்களோடும் சம்பந்தமடைவ திலலையாம்* *

பகவான் ஆத்மா அசங்கத் தன்மையா லனாதிப் பிரகாச வடிவமாக விருப்பதாலும் எதனோடும் சம்பந்தமில்லா திருக்கின்றதென்பதைத் திருஷ்டாந்த வாயிலாகக் கூறல்

*அருச்சுனா! சூரியன் தானொருவனாகியே யிருந்தும் இவ்வுலகத்தினகண் எப்பொருளிலும் பொருந்தியுள்ள இருளை நீக்கி அப்பொருளை விளங்கச் செய்வதுபோல, யான் முன்னாப் புகழ்ந்து கூறிய ஆத்மாவும் தானொன்றாகியே யிருந்தும் தம்மைப் படைப்பதற்கு ஆத்மா தவிர வேறு யாவரும் முன்னில்லாதுள்ள சராசர வடிவமாயுள்ள தேகமனைத்திலும் வியாபித்து, அவற்றை விளங்கச் செய்கின்றது* †

---

*அகர்த்தாவாம் என்பதும், ஆத்மாவின் சந்நிதானத்திலே உடல் பொறி முதலியன தத்தம் வியாபாரங்களைச் செய்கின்றன, ஆத்மா ஒன்றும் செய்வதில்லை யென்பது மிங்குணர்த்தற் பாலனவாம்*

* *ஆகாயம் நல்லனவும் தீயனவுமாய கடபட முதலிய மூர்த்தத் திரவியமனைத்திலும் உள்ளும் புறமும் வியாபித் திருப்பினும், தனது அசங்கத்தன்மையால் அத்திரவியங்களோடும் அவற்றின் நறுநாற்றம் தீநாற்ற முதலியவற்றோடும் கூடா திருப்பது போல, ஆத்மாவும் நல்லனவும் தீயனவுமாய தேவ மநுட பசு முதலிய தேகமனைத்திலும் உள்ளும் புறமும் வியாபித்திருப்பினும், தனது அசங்கத் தன்மையால் அத்தேகங்களோடும் அவற்றின் கருமங்களோடும் கூடா திருக்கின்ற தென்பதிங் குணர்த்தற்பாலதாம் மூர்த்தத் திரவியம் கண்டப்பொருள், அசங்கம், பற்றிலாதது*

† *ஒன்றாகவேயுள்ள சூரியன் உடம்பு முதலிய எல்லாப் பொருள்களையும் விளங்கச் செய்கின்றான், ஆனால், அவற்றின் கருமங்களோடு சம்பந்த முறுவ*

பார்த்தன் (அருச்சுனன்)தேரின்மேல் நின்றே வேத சிரத்தின்மேலிருக்குஞ் சீரோனாகிய பகவான் இப் பதின்மூன்றாவது அத்தியாயப்பொருளை அதன் பயனோடு கூறி முடித்தல்.

அருச்சுனா! ஆராயுமிடத்து தேகேந்திரிய முதலிய அனைத்திற்கும் அதீதமாய் நிற்கின்ற க்ஷேத்ரக்ஞனென்னும் ஆத்மாவோடு க்ஷேத்திரமென்னும் உடம்பையும் அவ்வுடம்பிற் குரிய பெயரோடு பிறப்பு - இறப்பு-மூப்பு என்னு மிவற்றையும் வேறாக உலகத்தில் ஞானக்கண்ணா லறிகின்றவர் சர்வ துக்க நிவிர்த்தி - பரமாநந்தப் பிராப்தி வடிவ மோட்சத்தை யடைவர். இதனை நீ உணர்ந்து, அதற் கேற்றவா றொழுகுவாயாக வென்றருளிச் செய்தனர். ‡

13 - க்ஷேத்திர க்ஷேத்ரக்ஞ விபாகயோக அத்தியாயம் முற்றிற்று.

## 14 - குணாதீத அத்தியாயம்.

13-வது அத்தியாயத்தில் பகவான் க்ஷேத்திரம், க்ஷேத்திரக்ஞனென்னும் இரண்டனது சம்பந்தத்தால் சர்வ தாவர சங்கம பூதோற்பத்தியா மென்றருளிச் செய்து, அதனால் ஈசுவரனை அங்கீகரியாத நிரீசுர சாங்கிய மதத்தை மறுத்து, அந்த க்ஷேத்திரம் க்ஷேத்ரக்ஞனென்னு மிரண்டனது சம்பந்தம் ஈசுவரனது வசமா யிருப்பதா மென்றும், அபிமான ரூப குண சங்கமே ஜன்ம காரணமா மென்றும், அருளிச் செய்தமையின், எந்தக் குணம் எவ்வாறு சங்கமாம்? அந்தக் குணம் யாது? அஃதெவ்வாறு சீவனைப் பந்திக்கின்றது? என்பதும்,

தில்லையாம்; அப்பொருள்களின் வேற்றுமையால் தான் வேற்றுமை யடைவது மில்லையாம். அங்ஙனமே, ஒன்றாகவேயுள்ள ஆத்மாவும் சராசர வடிவமாயுள்ள தேக மனைத்தையும் விளங்கச் செய்கின்றது; ஆனால், அவற்றின் தருமங்களோடு சம்பந்த முறுவதில்லையாம்; அத்தேகங்களின் வேற்றுமையால் தான் வேற்றுமை யடைவது மில்லையா மென்பதிங் குணர்தற்பாலதாம்.

‡ க்ஷேத்திரத்தையும் க்ஷேத்திரக்ஞனையும் ஞானக் கண்ணால் பிரித்தறிபவர் மோட்சமடைவ ரென்பதாம். பிரித்தறிதலாவது க்ஷேத்திரம் - சடமாயும் கர்த்தாவாயும் விகாரியாயும் கண்டமாயு மிருக்கின்ற தென்றும், க்ஷேத்ரக்ஞன் - சேதனமாயும் அகர்த்தாவாயும் அவிகாரியாயும் அகண்டமாயு மிருக்கின்றானென்றும் [illegible] மணர்தலாம்.

அதிகாரி புருஷனுக்குச் சத்துவ முதலிய முக்குணங்களி னின்றும் எவ்வாறுல் முத்தியா மென்பதும், அந்த முக்த புருஷனது இலக்கண மித்தன்மைய தென்பதும் அத்தியாவசியகமாகக் கூறத்தக்க குரியனவாம் இவ்வாக்க மிவைத்தையும் விரிவாக அருளிச் செய்தற் பொருட்டுப் பகவான் இப்பதினான்காவது அத்தியாயத்தைக் கூறுகின்றாரெனக

'செய்ய மாமலர் மேலுறை செல்வியும், வைய மாமட வாளு மகிழ்ந்ததோள், ஐயன் மெய்யைப்பன் பார்த்தியோமெலாம், உய்ய மீள் வுரைக்கத் தொடங்கினன்'' —

பகவான் தாம்கூறும் பொருளில் அருச்சுனனுக்குப்
பிரியமுண்டாகும் பொருட்டு, அதனைத் துதிசெய்தல்.

வளப்பம் பொருந்திய தோள்களையும் கிரீடத்தையு முடைய அருச்சுன! யான் சொல்லத் தொடங்கிய அந்த ஞானத்தின் நிச்சயம் யக்கிய - தான முதலிய ஞானத்தின் பகிரங்க சாதன மனைத்தி னுள் ளும் உத்தமமானதாம், துன்பம் நீங்கிய தவ சிரேஷ்டாசக்ருத தத் துவ ஞானமா யிருப்பதாம் §

பகவான் சாதன வடிவ ஞானத்தை யடைந்தவர்க்கு
மோட்ச வடிவப் பரம சித்தி தவறு துண்டாமெனக் கூறல்

அருச்சுன! இவ்வாறாய தன்மையை யுடைய ஞானத்தினை இயல்பாகவே அனுஷ்டிப்பதன் வாயிலாக அத்விதீய நிர்க்குண சொரூபமாயுள்ள என்னை அத்தியந்தம் அபேதமாக அடைந்த வித்வான்கள் மீண்டும் இவ்வுலகின்கண் வந்து பிறவார், இறவார் அருச்சுன! நீ இந்த ஞானத்தின் தன்மை யாதென்று வினவுவாயாயின், அதனையும் கூறுகின்றேன், கேட்கக் கடவாய் ¶

§ தத்துவஞானமாவது ஆத்மாவைப் பிரஹ்மமாக அறியும் ஞானமாம் பகவான் எந்தச் சாதன வடிவ ஞானத்தைச் சிரத்தையோடும் பக்தியோடும் அனுஷ்டித்து மனன சீலரென்னு முனிவர் சாவ துக்க நிவிர்த்தி - பரமானந்தப் பிராப்தி வடிவ மோட்ச மடைந்தாரோ அதனை அருச்சுன! உனக்குக் கூறுகின்றே னென்று தொடங்கி, அதனைத் துதிசெய்தாரெனபதின் குணாதற பாலதாம்

¶ இச்சாதனவடிவஞானத்தைச்சிரத்தையோடும் பக்தியோடு மனுஷ்டித்து, அதனால் அத்விதீய நிர்க்குண சொரூபமாயுள்ள என்னை அத்தியந்தம் அபேதமா யடைந்தவர் அஃதாவது யானே அத்விதீய நிர்க்குணப் பிரஹ்ம சொரூபனென்று

தத்துவ ஞானத்தைத் துதி செய்வது வாயிலாக, அதனைக் கேட்பதன் கண் அருச்சுனனை விருப்ப முடையவனாக்கிய பகவான் பரமேசுவரனது அதீனமாயுள்ள பிரகிருதி-புருஷர்களே சர்வ பூதங்களி னுற்பத்திக்கும் காரணமாம்; நிரீசுர சாங்கிய மதங்கூறுவதுபோலச் சுவ தந்திரமாக அவ்விரண்டுறக்கும் சர்வ பூதங்களி னுற்பத் திக்கும் காரணமாத லில்லையா மென்று கூறல். *

*பெருந் தவத்தை யுடைய அருச்சுனா! சத்துவம் - இராசதம் - தாமத மென்னும் குண மூன்றாலும் பேதமாகப் பரிணமத்தை யடை யும் கருப்பாதானத்திற்கு ஸ்தானமான எனது மாயையின் கண்ணே உலகத்தைப் படைப்பா மென்னும் விருப்பத்தால் யான் சங்கற்பவடி வமான கருப்பத்தைக் வைப்பேன், அக்கருப்பாதானத்தாலேயே பூத மனைத்து முண்டாகின்றன ¶*

*தமது ஆத்மாவை அத்விதீய நிர்க்குணப் பிரஹ்ம சொரூபமாக உணர்ந்த வித் வான்கள், சிருஷ்டியிலும் உற்பத்தியாவ திலராவர், சங்காரத்திலும் லயமடைவ திலராவரென் றருச்சுனனுக்குப் பகவான் கூறினரெனக்*

*பிரகிருதி - க்ஷேத்திரம், புருஷன் க்ஷேத்ரஞ்ஞன்*

*¶ முக்குணவடிவ மாயை பரமேசுவரன் கருப்பாதானம் செய்யும் ஸ்தான மாம், அதனிடத்துப் பரமேசுவரன் யானுலகத்தைப் படைப்பேனென்று சங்கற் பரூபக் கருப்பத்தை வைக்கின்றார் அக்கருப்பாதானத்தாலேயே சர்வ பூதங்களு முண்டாகின்றனவெனக்*

*இவ்வுலகத்தின்கண் பிதா ஒருவன் புண்ணிய பாவங்களோடு கூடியவனும் நெல் - கோதுமை முதலிய ஆகாரவடிவமாகத் தன்னிடத்து லீனமடைந்துள்ள வனுமான புத்திரனை ஸ்தூலசரீரத்தோடு சம்பந்தமுடையவனாக்குதற் பொருட்டு, தனது மனைவியின் யோனியில் வீரியத்தை விடுவது வாயிலாகக் கருப்பாதா னஞ் செய்கின்றான், அதனால், அப்புத்திரன் ஸ்தூலசரீர சம்பந்தமுடையவனா கின்றான், அச்சரீர சம்பந்தத்தின் பொருட்டு அவனுக்கு இடையே கலிலம் (கலங்குதல்), புத்புதம் (குமிழி) முதலிய பல அவஸ்தைக ளுண்டாகின்றன, அங் ஙனமே, பிரளயகாலத்தில் பரமேசுவரர் தம்மிடத்தில் லீனமாயிருந்த அவித்தை-காம-கருமங்களையுடைய க்ஷேத்ரஞ்ஞ ரென்னும் சீவர்களைச் சிருஷ்டி காலத்தில் காரிய காரணசங்காத வடிவப் போக்கிய க்ஷேத்திரத்தோடு சம்பந்தமுடையவ ராக்குதற்பொருட்டு மாயாவடிவ யோனியில் சிதாபாசவடிவ வீரியத்தை விடு வது வாயிலாக மாயா விருத்தி வடிவக் கருப்பத்தை வைக்கின்றார், அந்தச்சரீர*

(அருச்சுன! நீ தேவர் முதலியோரது சரீரங்கட்கு வேறு காரணங்களு மிருத்தலின், மாயாரூப யோனியில் தேவரீர் செய்த கருப்பாதானத்தால் சர்வ பூதங்களி னுற்பத்தியும் எவ்வாறு கூடுமென்று வினவுதல்கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.)

அருச்சுன! முற்கூறிய விதமாக இவ்வுலகத்தின்கண் தேவர் பிதுரர் மநுடர் பசு முதலிய சர்வ யோனிகளிலும் உண்டான சரீரமனைத்தையும் உண்டாக்கும் கருப்பாதான கருத்தாவாய பிதா பரமேசுவரனை நானே யாவன்; அச்சரீரங்களைப்பெற்று வளர்க்கின்ற மாதா என்னுடைய அவ்வியாகிருதமென்னும் அந்த மாயையேயாம். §

பரமேசுவரனது அதீனமாயுள்ள பிரகிருதி புருஷரது வாயிலாகப் பிராணிகளி னுற்பத்தியை நிரூபணஞ் செய்த பகவான் பிரகிருதியின் சம்பந்தத்தால் புருஷனுக்குச் சம்சார வடிவ அவஸ்தை யுண்டாகின்ற தென்பதைக் கூறல்.

அருச்சுன! முன்னர் யான் குணமாக அங்கீகரித்துக் கூறிய மூன்றும் ஈசுவரனது மாயை யென்னும் பிருகிருதியினின்று முண்டாயிருப்பனவாம். அவை அவ்வியயமாயுள்ள சீவான்மாவைப் பிடித்து இத் தேகத்தின்கண்ணே உறுதியாகப் பந்தித்திருக்கின்றன. இனி அக் குணங்களின் பெயரையும் அவை சீவான்மாவைப் பந்திக்கும் பிரகாரத்தையும் நீ அறியுமாறு கூறுகின்றனன்; அவற்றைக் கேட்பாயாக. †

சம்பந்தத்தின் பொருட்டு இடையே ஆகாய முதலிய பூதங்களினுற்பத்தி உண்டாகின்றது; அந்த மாயாரூப யோனியினிடத்துப் பரமேசுவரரால் செய்யப்பட்ட கருப்பாதானத்தினாலேயே சர்வபூதங்களு முண்டாகின்றன வென்பதிங் குணர்தற்பாலதாம்.

§ தேவர் - பிதுரர் - மநுடர் - பசுமுதலிய சரீரங்கட்கு லோகப் பிரசித்தமாயுள்ள காரண மனைத்தும் மாயையின் அவஸ்தா விசேஷமாமென்பதிங் குணர்தற்பாலதாம்.

† வீடு முதலிய அசேதனப் பொருள்கள் சேதனனாகிய வீட்டிலுள்ள புருஷன் பொருட்டேயாம்; அங்ஙனமே, சத்துவ முதலிய முக் குணங்களும் அசேதனமா யிருப்பதால் புருஷன் பொருட்டேயாம்; அதனால், அவை எப்போதும் சுதந்தரமாக விருப்பன வன்றாமென்பதும், சத்துவ முதலிய குணங்கள் மாயா

## பகவான் அகத்துணங்களின் பெயர் இவையென்கக் கூறல்.

*அருச்சுனா! சீவான்மாவைப் பந்தித்து நிற்கும் குணங்கள் சத்துவம் - இராசதம் - தாமத மென்பப் பொருந்தி வந்த பெயருடையனவாம், சுகம் துக்கம் - இலாபம் நஷ்டம் முதலிய எவ்வகைப்பனவாய த்வந்த்வங்களையும் சீவான்மாவிற்குத் தருவனவாம் அகக்குணங்களின் செயலினது வேறுபாட்டைக் கூறுகின்றேன், அதனை நீ கேட்பாயாக*

## பகவான் சத்துவகுணத்தின் சொரூபத்தையும் அது சீவான்மாவைப் பந்திக்கும் பிரகாரத்தையும் கூறல்

*அருச்சுனா! சத்துவ குணம் நிர்மலமா யிருப்பதால் ஸ்படிக மணிபோலப் பிரகாசமா யிருப்பதாம், சீவான்மாவிற்கு அநுகூலமான சிறந்த ஞானத்தைப் புண்டாக்குவதாம், எப்போதும் சுகம் வெளியாதற்குக் காரணமா யிருப்பதல்லாமல் துக்கத்தைச் சிறிதாகவேனும் தருவதில்லாததாம்*

---

*வடிவப் பிரகிருதியினும் வேறாக விருப்பன வன்று அவை பிரகிருதியின் வடிவமேயா மென்பதும் மாயா வடிவப் பிரகிருதியி னின்று சத்துவ முதலிய குணங்கள் தம்முள் அங்காங்கித் தன்மையாகவும் விஷமத் தன்மையாகவும் பரிணாம மடைதலே பிரகிருதியி னின்று சத்துவ முதலிய குணங்க ளுண்டாதலா மென்பதும், நீரில் பிரதிபிம்பித்துள்ள சூரியனை அந்நீர் காற்றின் வாயிலாக அசை வுடையதாகக் காட்டுதல்போல, அவித்தையில் பிரதிபிம்பித்துள்ள சேதனத்தை அது சத்துவ முதலிய குணங்களின் வாயிலாகச் சம்சார முடையது போலக் காட்டுகின்றது, அதுவே சீவான்மாவைப் பந்திப்பதாம், உண்மையில் சேதனத்திற்குப் பந்த மில்லையா மென்பது மிங்குணர்த்தற் பாலனவாம்*

*அவ்வியயம் சனனமரண முதலிய விகாரங்க ளில்லாமை அங்கம் காரணம், அங்கி காரியம் விஷமம் வேறுபாடு*

*‡ த்வந்த்வம் இருமை அந்தக்கரணத்தின் தருமமான சுக துக்க முதலிய த்வந்த்வங்கள் பிரகிருதியின் குணமெனினும் சத்துவ முதலியவற்றால் சீவான்மாவினிடத்துத் தோன்றுகின்றன வென்பதிங் குணர்த்தற்பாலதாம்*

*¶ சத்துவ குணம் சீவாத்மாவிற்கு ஞானத்தையும் சுகத்தையும் தருவது வாயிலாக அதனைப் பந்தமுறச் செய்கின்ற தென்பதிங் குணர்த்தற் பாலதாம் இங்குக் கூறிய ஞானம் சுகமென்பன ஆன்மாவின் சொரூபமான ஞானமும் சுகமு மன்றும், அந்தக்கரணத்தின் பரிணாமமான ஞானமும் சுகமுமாம். பரிணாமம்-திரிபு.*

### பகவான் இராசத குணத்தின் சொரூபத்தையும் அது சீவான்மாவைப் பந்திக்கும் பிரகாரத்தையும் கூறல்

அருச்சுனா! இராசத குணம் திருஷ்ணை-ஆசங்க மென்னு மிரண்டையு முண்டாக்குவதால் இராகவடிவமாக விருப்பதாம், காவிக்கல் போன்று செந்நிற முடையதாம், மகி மயக்கஞ் செய்யும் லௌகிக-வைதிக கருமங்களோடு சீவான்மாவைப் பந்திப்பதற்குக் காரணமா யிருப்பதாம்.

### பகவான் தாமத குணத்தின் சொரூபத்தையும் அது சீவான்மாவைப் பந்திக்கும் பிரகாரத்தையும் கூறல்

அருச்சுனா! தாமத குணம் கருநிற முடையதாய்ப் பிரமாதமும், குற்றமில்லாத நல்லொழுக்கங்களை யிகழாநிற்கும் ஆலசியமும், நித்திரையும் என்னுமிவற்றால் திடமாகச் சீவான்மாவைப் பந்தித்து வருத்துவதாம் †

### பகவான் சத்துவ - இராசத - தாமதகுண வியாபாரங்களைத் தொகுத்துக் கூறல்.

பூமியின்கண் நிறைந்த புகழையுடைய அருச்சுனா! சீவனை யான் முன்னாகக் கூறிய சத்துவகுணம் சகத்திற் பொருந்தச் செய்வதாம், இராசத குணம் லௌகிக - வைதிக கருமங்களிற் பொருந்தச்

---

* கிடையாத பொருள் கிடைத்தல் வேண்டுமென்னுமவிருப்பம் திருஷ்ணையாம், கிடைத்த பொருளிலுள்ள விருப்பம் ஆசங்கமாம், சப்த பரிச முதலிய விஷயங்களி லுண்டாகும் பிரியம் இராகமாம்.

உண்மையில் அகர்த்தாவாயுள்ள புருஷனை இராசத குணம் திருஷ்ணை-ஆசங்க மென்பனவற்றை யுண்டாக்குவது வாயிலாகச் சகல கருமங்களிலும் விருப்பமுடையவனாகச் செய்வதே அது சீவான்மாவைப் பந்தமுறச் செய்வதா மென்பதிங் குணர்தற் பாலதாம்.

† பொருள்களைப் பிரித்தறியுஞ் சாமர்த்திய மில்லாமை பிரமாதமாம், சன்மார்க்கத்திலொழுக முயற்சி செய்தற்கு வலியின்மை ஆலசியமாம், நித்திரை தூக்கமாம். தேகாபிமானிகளாயுள்ள சர்வ சீவர்களுக்கும் அவிவேக வடிவத்தால் விபரீத புத்தியை யுண்டாக்கும் தாமத குணம் அவர்களைப் பிரமாதம் ஆலசியம் - நித்திரை யென்பனவற்றால் பந்திப்பதே அது சீவான்மாவைப் பந்தமுறச்செய்வதா மென்பதிங் குணர்தற் பாலதாம்.

செய்வதாம்; தாமத குணம் அவனுக்குப் பிரமாதத்தைச் செய்து, மறைப்பு வடிவமாய் நல்லோ ரிணக்கத்தா லுண்டாய ஞானத்தை மறைப்பதாம். ‡

(அருச்சுனா! நீ சத்துவ முதலிய குணங்கள் தத்தங் காரியங்களை யெக்காலத்தில் செய்கின்றன வென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.)

அருச்சுனா! சீவர்களின் புண்ணிய பாவமென்னும் அதிர்ஷ்ட வசத்தால், சத்துவகுணம் (எழுந்து) இராசத குணம் தாமத குண 'மிரண்டையும் ஒங்காவா றடக்கி விருத்தி யடையும்; தாமத குணம் விருத்தி யடையுமாயின், இராசத குணமும் சத்துவ குணமும் அடங் கிப் போவனவாம்; இராசத குணம் விருத்தி யடையுமாயின், சத்துவ குணமும் தாமதகுணமும் அடங்கிப் போவனவாம். இங்ஙனம் அம் மூக் குணங்களுள் இரண்டு குண மடங்கி நிற்க ஒருகுணம் மேம்பட்டு நிற்பதாம்; இவ்வாறு மேம்பட்டு நிற்கும்போது அக் குணங்கள் தத் தங் காரியங்களைச் செய்கின்றன.

புருஷன் சத்துவ முதலிய குணங்களின் விருத்தியை யறிந்தா லல்லது அவற்றை நீக்குதல் முடியாதாகலின், விருத்தியடைந்துள்ள அக்குணங்களின் இலிங்கத்தை (அடையாளத்தை)ப் பகவான் கூறல்.

அருச்சுனா! எப்போது சமமாய்ச் சுரோத்திரிய முதலிய சர்வ இந்திரியங்களிலும் சிறந்த ஞான வடிவப் பிரகாச முண்டாகின்றதோ அப்போது சத்துவ குணம் விருத்தியடைந் திருப்பதாம்; தாங்குதற் கரிய பிரவிர்த்தி - ஆரம்பம் - கருமமென்பனவற்றை யுண்டாக்கிக் கொண்டு, புருஷனை அவற்றில் செலுத்தி, ஆசை யுண்டா யதிகரிக்க

‡ தேகாபிமானியாய சீவனைச் சத்துவ குணம் மேம்பட்ட போது துக்க காரணத்தை யழுந்தச்செய்து சுகத்திற் செலுத்துகின்றது; இராசத குணம் மேம் பட்ட போது சுக காரணத்தை யழுந்தச் செய்து, லௌகிக - வைதிக கருமங் களிற் செலுத்துகின்றது; தாமத குணம் மேம்பட்டபோது நல்லோ ரிணக்கத்தா லுண்டாய ஞானத்தை மறைத்துப் பிரமாதத்திற் செலுத்துகின்ற தென்க. பிர மாதம்-அவசியமாக அறிவதற்குரியதை அறியாமையாம்.

உலோபம் வந்தடைந்தபோது இராசத குணம் மிக விருத்தி யடைந் திருப்பதாம்; இவற்றை நீ அறியக்கடவாய். ‡

அருச்சுனா! யாதாவ தொன்றனை இது தக்கது, தகாத தென்று தான் அறியாத காலத்திலும், எவ்வகையாயுள்ள கருமங்களிலும் முயற்சி செய்யாதுள்ள காலத்திலும், மெய்ம்மயக்கத்துடனே நித்திரை வந்த காலத்திலும் தாமத குணம் விருத்தியடைந் திருக்கின்ற தென்று நீ அறியக்கடவாய். (மெய்ம்மயக்கம் - தேகநினைப்பில்லாமை)

மரண காலத்தில் சத்துவ முதலிய முக்குணங்களில் எக் குணம் விருத்தி யடைந் திருக்கின்றதோ அக் குணத்திற் கேற்றவாறு சீவர்க்குப் பிறப்புண்டாகின்றதெனல்.

அருச்சுனா! மேலாய சத்துவ குணம் விருத்தியடைந்தபோது இறந்தவர் தேவ யோனிகளிலே பிறப்பர்; இராசத குணம் விருத்தி யடைந்தபோது இறந்தவர் மானுடயோனிகளிலேபிறப்பர்; மிகுதியாக வெழுகின்ற தாமத குணம் விருத்தி யடைந்தபோது இறந்தவர் பசு முதலிய விலங்கு யோனிகளிலே பிறப்பர். உனக்குச் சம்மதமாக இக் குணங்களின் பயன்களையும் விளங்கக் கூறுகின்றேன்; இவற்றையும் நீ அறியக்கடவாய்.

‡ சுரோத்திர முதலிய இந்திரியங்களில் கடபடமுதலிய விஷயங்களை அறியும் ஞான வடிவப் பிரகாச முண்டாமாயின், அதனால் சத்துவ குணம் விருத்தி யடைந்திருக்கின்ற தென்றும், உலோப முதலியன உண்டாமாயின், அவற்றால் இராசத குணம் விருத்தி யடைந்திருக்கின்ற தென்று முணர்தல் வேண்டு மென்க. நெருப்புண் டென்பதை யறிதற்குப் புகை ஞானம் சிறந்த அடையாளமா யிருத்தல்போல, சத்துவ குணம் விருத்தி யடைந்திருக்கின்ற தென்றுணர்வதற்கு ஞானப் பிரகாசமும், இராசத குணம் விருத்தியடைந் திருக்கின்ற தென்றுணர்வதற்கு உலோப முதலியனவும் சிறந்த அடையாளமா யிருக்கின்றன வென்பதாம்.

ஞான வடிவப் பிரகாசம்-சப்த முதலிய விஷயங்களின் வடிவமாய புத்தியாம். பிரவிர்த்தி-இடை விடாத முயற்சியாம்; கருமம்-லௌகிக வைதிக கருமங்களாம்; ஆரம்பம்-அக்கருமங்களைச் செய்யத் தொடங்கலாம். உலோபம்-பெரும்பொருள்கள் கிடைத்திருப்பினும், மேலும் மேலும் அவை கிடைக்க வேண்டு மென்னும் விருப்பமாம்.

### சத்துவ முதலிய குணங்கள் தத்தம் தருமானுசாரவாயிலாக விசித்திரப் பயன் தருவதற்குக் காரணமா யிருத்தலைப் பகவான் தொகுத்துக் கூறல்.

அருச்சுனு! அடைதற்கரிய சத்துவ குண தருமத்தின் பயன் சித்தம் நிர்மலமாதலாம்; இராசத குண தருமத்தின் பயன் சீவன் பெருந் துன்பத்தை யனுபவித்தலாம்; தாமத குண தருமத்தின் பயன் அவனுக்குப் பேதைமை யுண்டாதலாம். முற்கூறிய கிரமப்படியே அதிர்ஷ்ட வசத்தாற் பொருந்திய இம் மூன்று குணங்களாலும் சீவரனைவர்க்கும் முறையே சுரோத்திர முதலிய இந்திரியங்களின் வாயிலாக வரும் சிறந்த ஞானமும் உலோபமும் அஞ்ஞானமு மென்னு மிவ யுண்டாவனவாம்.†

### சத்துவ முதலிய முக்குணங்களின் பயன்களை உத்தம - மத்திம - அதம பாவமாகப் பகவான் கூறல்.

அருச்சுனு! சத்துவகுணத்தைப்பிரதானமாக வுடையவர் பிரஹ்ம லோக மீறுயுள்ள உத்தம லோகத்தை யடைவர்; தாமதகுணத்தைப் பிரதானமாக வுடையவர் பசு முதலிய யோனிகளின்கண்ணே பிறப்பர்; இராசதகுணத்தைப் பிரதானமாக வுடையவர் இவ்விருவகைப் பிறப்பிற்கும் நடுவிலுள்ள மானுடப் பிறவி யெடுத்து வாழ்வர். (அருச்சுனு! யானிதுகாறும் பிரகிருதியின் குண சம்பந்தத்தால் சீவர்க்குச் சம்சார முண்டாவதைக் கூறினேன்; இப்போது பிரகிருதி புருஷ விவேகத்தால் அவர்க்கு மோட்சமுண்டாமென்பதைக் கூறுகின்றேன்; அதனை நீ கவனமாகக் கேட்கக்கடவாய்.)

---

†சத்துவகுண தருமம்,இராசதகுண தருமம்,தாமதகுண தருமம் என்று கூறியது அவற்றின் காரியமாய கருமங்களையாம். இம் முக் குண கருமங்களின் பயன் 18-வது அத்தியாயத்திலும் கூறப்படும். பேதைமை - எதனையும் செவ்வையாக அறியாமை. சத்துவகுண தருமம் ஞானத்தைத் தருவது வாயிலாக நிர்மலத்தையும்,இராசதகுண தருமம் உலோபத்தைத் தருவது வாயிலாகத் துக்கத்தையும், தாமதகுண தருமம் பேதைமையைத் தருவது வாயிலாகப் பிரமாதம் மோக மென்னும் தீயகுணங்களையும் தருவனவா மென்பதும், சத்துவகுண தருமம் துக்கக் கலப்பில்லாத சுகத்தையும், இராசதகுண தருமம் துக்கத்தோடு கலந்த சிறிது சுகத்தையும், தாமதகுண தருமம் அவிவேகத்தோடு கூடிய துக்கத்தையும் தருவனவா மென்பது மிங்குணர்தற் பாலனவாம்.

அருச்சுனா! இப்புத்தி முதலிய வடிவமாகப் பரிணாம மடைந்துள்ள சத்துவகுண முதலிய வடிவங்களே லௌகிக வைதிக கருமமனைத்திற்கும் கர்த்தாவாம், அவற்றிற்கு வேறாக ஒரு கர்த்தாவுமில்லை, அவற்றிற்குச் சாட்சியாயுள்ள நான் அகர்த்தாவென்று சாத்தா - அகர்த்தா வென்னுமிம்முறைமை உள்ளவாறாக உணர்ந்தவன் உணர்ந்தபோதே மோட்சவின்ப மடைந்தவனாவான் *

(கடங்கடலிடையே வளர்ந்த பசவானே! சத்துவ முதலிய குணங்களைக் கர்த்தாவென்றும், தன்னை அகர்த்தாவென்று முணர்ந்தவன் உணர்ந்தபோதே மோட்சவின்பத்தை யெவ்வாறடைகின்றானென்று அருச்சுனா! நீ வினவுதல் கூடும், அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்)

அருச்சுனா! உடம்போடு கூடியிருந்தே சம்சார காரணமாகக் கூறிய சத்துவ முதலாகவுள்ள இம்மூன்று குணங்களையும் மாயாமயமென்றுள்ளவாறுணர்ந்து, அவற்றின் சம்பந்தமின்றி அவற்றிற்குச் சாட்சியாக விளங்குகின்றவன் பிறப்பு - மூப்பு - இறப்பு முதலியவற்றை யுடைப்பதாகக் கூறப்படுகின்ற விஷத்தையொத்த சரீர துக்கமனைத்தையும் நீக்கி மோட்சவின்ப முண்டாகப் பெறுவன், இதற்கையப்பாடு யாதுமில்லையாம் †

சத்துவ முதலிய குணங்களைக் கடந்தவன் தன் சீவன காலத்திலேயே வீட்டின்பத்தை யடைகின்றானென்று பகவான் திருவாய்மலர்ந்தருளியதைக் கேட்ட அருச்சுனன் குணங்களைக் கடந்தவனென்னும் குணாதீதனது இலட்சணத்தையும் - அவனது ஆசாரத்தையும் - குணங்களைக்

*யான் சர்வ சாட்சி எத்திறத்தும் எவ்வாற்றானும் கர்த்தாவாவதில்லை, எனது சந்நிதானத்தில் புத்தி முதலிய வடிவமாகப் பரிணாம மடைந்துள்ள சத்துவகுண முதலியன கர்த்தா போல விளங்குகின்றன வென்று தன்னையும் சத்துவ முதலிய குணங்களையும் பிரித் துள்ளவா றுணர்ந்தவன் உணர்ந்தபோதே பரமானந்த வடிவமாக விளங்குகின்றானென்பது இங்குணர்த்தற்பாலதாம்

†சம்சார முண்டாதற்குக் காரணமாயுள்ள குண மூன்றையும் மாயாமயமென் றுணர்ந்து, அவற்றிற்குச் சாட்சியாக விளங்குகின்றவன் யானென்னதென்னு மபிமான மில்லா திருத்தலின், பரமானந்த வடிவினனாக விளங்குகின்றானென்பது இங்குணர்த்தற்பாலதாம்

கட்கத்கு சாதனத்தையும் அறிய விருப்பங்கொண்டு, பகவானை நோக்கி, "எண்ணிய வுலகு முலகிலவா முயிரு மிருவினை யாக்கையு மாக்க, பண்ணியு மழித்து மேவினை யாடும் பரம" புருஷோத்தமரே! தேவரீர் சீவர்கள் மோட்ச சாமபிராச்சிய மடைதற்குக் காரணமாயிருக்கின்றதென்று ஆன்றோரால் கருதப்படுகின்ற இவ்வுலகத்தில் அதிகாரிகளல்லாதவர் கடப்பதற் கரியனவாயுள்ள சத்துவம் - இராசதம் - தாமதமென்னும் குணங்கள் மூன்றையும் கடந்து அவற்றிற்கு சாட்சியாயுள்ள புண்ணிய புருஷரது ஆசாரத்தையும், அவர்கள் அக்குணங்களைக் கடந்திருக்கும் சாதனத்தையும், அவர்களது இலக்கணமாய விங்கத்தையும் அடியேனுக்குத்திருவாய்மலர்ந்தருளல் வேண்டுமென்றுன

* இந்நூலி னிரண்டாவது அத்தியாயமாய சாங்கிய யோகத்தில் குணாதீதனுடைய திடப்பிரக்ஞனது இலக்கண முதலியவற்றை அருச்சுனனது வினாவிற்கு விடையாகக் கூறிய பகவான் அவற்றை வேறு பிரகாரமாகக் கூறக் கருதி, முன்னாக குணாதீதனது இலக்கணத்தைக் கூறல்

அருச்சுனா! மாயாமயமா யுள்ள சத்துவ முதலிய முக்குணங்களின் காரியமாய்த் தோன்றுகின்றவை பிரகாசமும் பிரவிருத்தியும் மோகமுமாமென்று யான் முன்னர் கூறிய இம்மூன்று பகுதியையும் இவை சாட்சியாயுள்ள வெனக்குத்தூரமாயிருப்பனவாமென்றுணர்ந்து, அந்தப் பிரகாச முதலியவற்றைப் பெறுகபோது சுக புத்தியா லவற்றை விரும்புதலும் அந்தப் பிரகாச முதலியவற்றைப் பெறறபோது துக்க புத்தியா லவற்றை வெறுத்தலுஞ் செய்யா திருப்பவன் குணாதீத னென்று சொல்லப்படுவான் ‡

‡ சத்துவ குணத்தின் காரியம் பிரகாசம், இராசத குணத்தின் காரியம் பிரவிருத்தி, தாமத குணத்தின் காரியம் மோகமென்று கூறப்பட்டதாயினும், இனம் பற்றி அக்குணங்களின் வேறு காரியங்களும் இங்குக் கொள்ளற்பாலனவாம்

சத்துவ முதலிய குணங்களின் காரியங்களில் விருப்பும் வெறுப்பு மில்லாதிருத்தலே குணாதீதனது இலக்கணமாம் இவ் விலக்கணம் குணாதீதனுக்குப் பிரத்தியட்சமாம், மற்றவர்க்குப் பிரத்தியட்சமாவ தின்றும் ஒருவனது சித்தத்திலுள்ள விருப்பு விருப்பின்மை - வெறுப்பு - வெறுப்பின்மை யென்பன அவனுக் கன்றி மற்றவர்க்குப் பிரத்தியட்ச மாவதில்லை யாகலின், இக் குணாதீதனது

## பகவான் குணாதீதனது ஆசாரத்தைக் கூறல்.

அருச்சுனா! உதாசீன புருஷனைப்போல விருப்பு வெறுப்புக்களை யடையாது சாட்சியாய், சுக துக்க முதலிய வடிவமாய்ப் பரிணாம மடையா நிற்கும் சத்துவ முதலிய குணங்களோடு கூடியிருந்தும் அவற்றால் தனது நிலையினின்றும் சலியா திருப்பவன் குணாதீதனென்று சொல்லப்படுவன். மானம் - அவமானம், சுகம்-துக்கம், மண்-பொன், பிரியம்-அப்பிரியம், சத்துரு-மித்துரு, ஸ்துதி-நிந்தை யென்னும் துவந்துவங்களுண்டாய காலத்தில் அவற்றில் சமபுத்தி யுடையவன் குணாதீதனென்று சொல்லப்படுவன்.

---

இலக்கணம் சுவார்த்த இலக்கணமாம், பரார்த்த இலக்கணமென்றும் எவ்விலக்கணம் தன்னாலேயே உணரப்பட்டதாமோ அது சுவார்த்த இலக்கணமாம், எவ்விலக்கணம் பிறரால் அறியப்பட்டதாமோ அது பரார்த்த இலக்கணமாம் சுவார்த்த இலக்கணம் சுவசம்வேத்திய மென்றும் பரார்த்த இலக்கணம் பரசம்வேத்திய மென்றும் சொல்லப்படும்

¶தம்முள் விவாதஞ்செய்யு மிருவருள் எவ்வொரு பக்ஷத்தையும் அங்கீகரியா திருப்பவன் உதாசீனனாவன், அவனைப்போல எவன் விருப்பு வெறுப்பில்லாது தனது சச்சிதானந்த வடிவத்தினின் றிணிலைத்து, சுகதுக்க முதலிய வடிவமாகப் பரிணாம மடைந்துள்ள சத்துவ முதலிய குணங்களால் தனது நிலையினின்றும் சலியா திருப்பன் அவன் குணாதீதனாவன் இவன் தேகேந்திரிய முதலிய வடிவமாகப் பரிணாம மடைந்துள்ள சத்துவ முதலிய குணங்களே தம்முள் சாதக பாதக பாவங்களாகவும் கிராஹ்ய கிராஹக பாவங்களாகவும், உபகாரிய உபகாரக பாவங்களாகவு மிருக்கின்றன, இவற்றை யெல்லாம் பிரகாசிக்கச் செய்பவன் நானே, எனக்கவற்றோ டுண்மையி லொரு சம்பந்தமு மில்லை, அவை கனவுப் பொருள் போல என்னிடத்துக் கற்பிதமாமென நிருப்பனென்பதிங் குணர்தற்பாலதாம்

ஆதரவென்னப்படும் சத்காரம் மானமாம், அநாதர வென்னப்படும் திரஸ்காரம் அவமானமாம்

உதாசீனனைப் போல விருப்பு வெறுப் படையாது விஷயங்களோடு கூடியிருந்தும் அவற்றால் சலன மடையாது மான அவமான முதலிய துவந்துவங்களில் சமபுத்தியா யிருத்தல் குணாதீதனது ஆசாரமாம் உபேட்சை முதலிய தருமங்கள் தத்துவ ஞான மடைவதற்கு முன் அதிகாரி புருஷர்க்குப் பிரயத்தன சாத்தியமா யிருப்பனவாம், தத்துவஞான மடைந்தபின் பிரயத்தனமின்றி யிருப்பனவாம்

பகவான் சத்துவ முதலிய குணங்களைக கடத்தறகுரிய உபாயத்தைக் கூறல்.

*அருசசுன! எவவாறறுலும தடையிலலா துண்டாகினற அநந நிய பகதி யோககதால ஒப்புயாவிலலாத பரமேசுவரனுகிய எனனைச சிநதனை செயபவர் முறகூறிய தனமைகளோடு கூடித தோனறும சதது முதலிய குணஙகளைக் கடநது, உண்மைத தனமையதாய பெரிய மோடசததை யடைவா* *

சுழியாநின்ற பெருவெள்ளத் திடையே பண்டு துயில்கோண்டா னுகிய பகவான் என்னைத தியானஞ் செயகின்றவர் மோட்சத்தையே யடைவ ரேன்று கூறிய ஆத்ததத்தில் தமது மகத்துவ வடிவக் காரணத்தைக கூறல்.

*ஒழிவிலலாது எபபோதும யாவாசகும தததுவஙகளை யானே போதிதது வருதலால, செடாத ஞானமும, அமிாகமயமான மோடசமும, நிரதிசயாநநதமும, சாசவதமான தருமமும எனனிடததினினறு முண்டாவனவாம, அசனுல, அதிகாரி புருஷாககு எனது பகதியால மோடச முண்டாகினறதெனறருளிச செயதனா.* $

14 - குணத்தீத அததியாயம் முறறிறறு.

**குணஙகளைக கடபபதறகுரிய உபாயம எபபோது மிடைவிடாது பரமேசுவரனைச சிநதனை செயதலாமெனக அநநநிய பகதி யோகமாவது உலக எணணமின்றிப பரமேசுவரனைப பேரனபோடு தனக கபேதமாகப் பாவனை செயதலாம.**

**$ யான எபபோதும யாவாககும நீககமினறித தததுவஙகளைப போதிதது வருதலால, ஞானமுதலியன உணடாதறகுக காரணம எனனை யன்றிப பிறிதிலலையாம , அதனுல என்னைத தியானிபபவாககு மோட்சம நிச்சயமாக உண்டாகுமென்று பகவான் கூறினுனெனக இஙகு அறநெறியி லொழுகுவதால் பகதியும, அதனுல் ஞானமும, அதனுல் அஞஞான நீககமும, அதனுல நிரதிசயாநந்தவடிவமாக விளஙகுதலு முணடாகினறன வெனபதிங குணாதறபாலதாம்**

# 15 - பிரபஞ்ச அத்தியாயம்.

பதினைன்காவது அத்தியாயத்தி னிறுதியில் அநந்நிய பக்தி யோகத்தால் பரமேசுவரனுைய என்னைச் சிந்தனை செய்பவர்க்கு எனது கருணையால் ஞானவாயிலாக முத்தி யுண்டாகு மென் றருளிச்செய்த பகவான் அவ்வநந்நிய பக்தியும் ஞானமும் சம்சாரத்தில் வைராக்கிய மடைந்தவர்க்கன்றி மற்றவர்க் குண்டாவதில்லை யாகலின், அருச்சுனனுக்கு வைராக்கிய பூர்வகமாக ஞானோபதேசஞ் செய்ய வேண்டுமென்னும் விருப்பத்தால் இப் பதினைந்தாவது அத்தியாயத்தில் முன்னர்ச் சம்சாரத்தை விருட்ச வடிவமாகக் கூறல்.

*" சாயை யன்னவென் வினைத்தளை யறுக்கவோ தகவில், பேயை யின்னுயிர் செகுக்கவோ பிள்ளையாய் வளர்ந்தான், வேயை யொன்றிய வரிசிலை விசயற்கு மீள, மாயை தன்னையோர் மரமொக்க வருணிக்க லுற்றான் ".* ¶

*அருச்சுனா ! என்னிடத்துக் கற்பிதமாக வுள்ள மகா மாயையினால் கற்பிக்கப்பட்ட சம்சாரமென்னும் பெரிய விருட்சமானது வேரை மேலாக வுடையது; தலையைக் கீழாகவுடையது; (தத்துவஞானமுண்டாமளவும்) நாசமாகாதிருப்பது; வேதத்தின் கர்ம காண்ட வாக்கியங்களை அழகு பொருந்திய இலைகளாக வுடையது ; எங்கும் நிறைந்துள்ள அசுவத்த மென்று சுருதி ஸ்மிருதிகளனைத்தும் கூறுதலால் அசுவத்த விருட்சமென்னும் பெயருடையது.* *

¶ *சாயை-தேகச்சாயை ; வினைத்தளை - கருமக்கட்டு ; பேய்-பூதகி ; வேய் - மூங்கில் ; மாயை-சம்சாரவடிவ மாயை.*

* *அசுவத்த விருட்சம் - அரசமரம். சம்சாரம் நிலையற்றதா யிருத்தலின், அஃது அசுவத்தமென்று கூறப்படுகின்றது. அசுவத்த மென்பதன் பொருள் நிலையற்ற தென்பதாம்.*

*சம்சார விருட்சத்திற்கு வேர் மாயா விசிட்ட (மாயையோடு கூடிய) பிரஹ்மமாம்; தலை கிளைகளாம். அவை மகத் தத்துவம், அகங்கார தத்துவ முதலியனவாம். விருட்சத்தை அழியாமற் செய்வதற்கு அதனது இலைகள் காரணமா யிருத்தல்*

## பகவான் சம்சார விருட்சம் வேரை மேலாக வுடைய தென்பதை விளக்கமாகக் கூறல்.

கூர்மை பொருந்திய வாட் படையையும் வல்லமையையு முடைய அருச்சுனா ! நீ இங்ஙனம் சுருதி ஸ்மிருதிகள் கூறிய இச் சம்சார விருட்சத்தின்கண் இயல்பாக வுள்ள கூறுபாடுகள் எவையென்று வினவுவாயாயின், அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய். யாதொரு பொருளும் தனக் கொப்பாகாவாறு வியாபகமாயுள்ள பிரஹ்ம சொரூபத்தின்க ணின்றும் உண்டாகும் கிரமப்படியே உண்மைபோலத் தோன்றும் ஆகாய முதல் ஸ்தூல தேக மீறா யுள்ள உலக மனைத்தும் தோன்றுகின்றன வாதலால், இச் சம்சார விருட்சத்திற்குச் சர்வத்திற்கும் மேலாயுள்ள பிரஹ்மம் வேராம்.

## பகவான் சம்சார விருட்சம் தலையைக் கீழாக வுடையது, நாசமாகா திருப்பதென்று கூறியதை விளக்கமாகக் கூறல்.

அருச்சுனா! இச் சம்சார விருட்சம் சீவர்களது அறம் பாவ மென்னும் அதிர்ஷ்ட வசத்தால் தோன்றுகின்ற உலகங்களாகியும் பிராணிகளாகியு முண்டாவதால், மகத்தத்துவம் - அகங்கார தத்துவம் - பஞ்ச பூத முதலியவற்றைத் தலையாக வுடையதாம் ; உற்பத்தி - ஸ்திதி - நாசமென்பனவற்றின் பெருக்கத்தை யுடையதாய்ப் பந்தரூபமா யுள்ள அச சம்சார விருட்சத்தின் பிரவாகம் (தத்துவ ஞான முண்டா மளவும்) ஒரு காலத்திலும் முற்றும் பாழாகுமாறு அபாவமாகா திருத்தலின் ஒருதன்மையதாக அழியாதிருப்பதாம்.

போலச் சம்சாரத்தை அழியாமற் செய்வதற்கு வேதத்தின் கர்மகாண்ட வாக்கியங்கள் காரணமா யிருத்தலின், அவை சம்சார விருட்சத்திற்கு இலைகளா யிருக்கின்றன வென்று கூறப்பட்டது. இதன் தாற்பரியம் கரும முள்ள வளவும் சம்சார மிருக்குமென்பதாம். கங்கையின் அலையால் மோதப்பட்ட உயர்ந்த கரையினின்றும் காற்றால் கீழே தள்ளப்பட்ட பெரிய அரசமரம் வேர் மேலாகவும் தலை கீழாகவு மிருத்தல் போல இச் சம்சார விருட்சமும் வேர் மேலாகவும் தலை கீழாகவு மிருக்கின்றதென்ப திங்குணர்தற் பாலதாம்.

## பகவான் சம்சார விருட்சம் வேதத்தின் கரும காண்ட வாக்கியங்களை இலைகளாகவுடையது; அசுவத்த மென்னும் பெயரை யுடைய தென்பதை விளங்கக் கூறல்

அருச்சுனா! அச் சம்சார விருட்சம் கருப்பத்தி லுண்டான காலமுதற்கொண்டே அறம் பாவ மென்னுங் கருமங்களால் வளர்ந்து நிற்கும் அபேட்சை யுடையதாயிருத்தலினால், ஓதி உணர்தற் கரிய நான்கு வேதங்களின் கரும காண்ட வாக்கியங்களே கருமா கருமங்களைப் பிரகாசிப்பிக்கும் வாயிலாக அதற்கு இலைகளாம், பொருள்களின் றொழில் வேறுபாட்டால் பல திறத்தனவாக வருகின்ற நாள்களிலே ஒருநா ளிருக்குமென்னும் ஸ்திரத் தன்மை யின்மையினாலே அச் சம்சார விருட்சம் உலகப் பிரசித்தமாக அசுவத்த மென்னும் பெயருடையதென்று கூறுவதற்குரியதாயிற்று †

## பகவான் சம்சார விருட்சத்தை அதன் காரணத்தோ டுணர்ந்தவர் வேதார்த்த மனைத்தையு முணர்ந்தவ ராவரெனல்.

வேரை மேலாக வுடையது, கிளையைக் கீழாக வுடையது, நாச மில்லாதது, கருமங்களை இலைகளாக வுடையது, அசுவத்த மென்னும் பெயரை யுடையதென் றிவ்வாறு விளங்குகின்ற இச் சம்சார விருட்சத்தின் சுபாவமாகிய கூறுபாடு இவையல்லாமல் வேறில்லாமையினாலே இங்குக் கூறியவாறு இச் சம்சார விருட்சத்தை ஆராய்ந்தறிபவர் வேதார்த்த மனைத்தையு முணர்ந்தோராவர் இத்தன்மையதான இப் பெரிய சம்சார விருட்சத்தின் கூறுபாடாய அவயவ கற்பனைகளினுஞ் சில விருக்கின்றன, அவற்றையுங் கூறுகின்றேன், நீ கேட்கக்கடவாய்

† வேதத்தின் கரும காண்ட வாக்கியங்கள் தருமம் அதருமம் அவற்றின் காரணம், அவற்றின் பல மென்னு மிந்நான்கையும் விளங்கச் செய்தலின், அவை சம்சார விருட்சத்திற்கு இலைகளாமென்று கூறப்படுகின்றதென்பதாம்

* சம்சார விருட்சத்தின் வேர் பிரஹ்மம் கிளை மகத்தத்துவ முதலியன, அஃ தநித்தியமா யிருப்பினும் பிரவாக ரூபத்தால் நித்தியமா யிருப்பது, கருமத்தால் விருத்தி யடைந்து வருகின்றதென்பதுவே வேதத்தின் நிச்சயமான பொருளானதால், இச் சம்சார விருட்சத்தை அதன் காரணத்தோ டுணர்ந்தவர் வேதார்த்த மனைத்தையு முணர்ந்தவ ராகின்றன ரென்பதிங் குணர்த்தற்பாலதாம்

## பகவான் சம்சார விருட்சத்தின் மற்றோருவகை அவயவ கற்பனைகளைக் கூறல்.

எனது கண்மணியும் என்னை யொத்தவனுமாய அருச்சுனா! இச் சம்சார விருட்சம் நாநாவித யோனிகளாகிய கதிகளின் வழியே மண் முதலிய கீழுலகத்தில் வளர்வனவும் விண்முதலிய மேலுலகத்தில் நெருங்கி நிற்பனவுமாய அளவிறந்த பிறவிகளாகிய கிளைகளோடு கூடி யிருக்கும்.†

அருச்சுனா! விண் முதலிய மேலுலகத்திலும் மண் முதலிய கீழ் உலகத்திலும் சீவர்க ளனுபவித்த பலவிதமாய போகானுபவ வாயிலாக உண்டாகின்ற இராகத் துவேஷாதி வாசனைகளென்னும் வேரானது வருணாச்சிரம முதலிய பல பாகுபாட்டுடன் பொருந்திய மண்ணுலகத்திலே அஞ்ஞானத்தோடு மிகு ஸ்திரமாய் வீழ்ந்திருத்தலால், இச் சம்சார விருட்சத்திற்கு வேர் கீழேயு மிருப்பதாம்; தம்முள் விட்டுப் பிரியா தெழுகின்ற சத்துவம் இரசசு தமசு என்னு முக்குணத்தால் நீரால் விருட்சம் வளர்வதுபோல இச் சம்சார விருட்சம் வளர்வதாம். சப்த ஸ்பரிச ரூப ரச கந்த மென்னும் விஷயங்களை இச் சம்சார விருட்சம் தளிர்களைப்போல அழகாகப் பொருந்தி யிருப்பதாம். ¶

## பகவான் சம்சார விருட்சம் தனக்கெனப் பொரு ளுண்மையி லில்லாத தெனக் கூறல்.

அருச்சுனா! இச் சம்சார விருட்சம் உண்மையில் பொய்யாக விளங்குகின்ற சொப்பன பதார்த்தமும், கானனீரும், கந்தர்வ நகரமும்

---

† மண் - பூமி; விண் - ஆகாயம்.

சீவர்கள் புண்ணிய பாவ வசத்தால் மேலுலகத்திலும் கீழுலகத்திலும் பிறந்து வருகின்றார்கள்; இவர்கள் இவ்வாறு பிறந்து வருதலே சம்சார விருட்சத்திற்குக் கிளையா யிருக்கின்றதென்பதிங் குணர்த்தப்பட்டதென்க.

¶ சம்சார விருட்சத்திற்குப் பிரஹ்மம் முக்கிய வேரென்றும், இராகத் துவேஷாதி வாசனைகள் அமுக்கிய வேரென்றும் இங்குணர்தல் வேண்டும். வேர் - மூலம். இராகத் துவேஷாதி வாசனைகள் அஞ்ஞானத்தோடு மண்ணுலகத்தில் பிறப்பனவா யிருத்தலின், அவை மண்ணுலகத்தில் வீழ்ந்திருக்கின்றன வென்று கூறப்படுகின்றது. கருமாதிகாரம் மனுஷர்க்கன்றி மற்றவர்க் கில்லை யென்பதும், கருமங்கள் இராகத்துவேஷ முதலியவற்றை முன்னிட்டு நிகழ்கின்றன வென்பதும் மிகு பிரசித்தமாம். அஞ்ஞானம் - விவேக மின்மை.

போலத் தோன்றி அழிவதால, உண்மையில் தனக்கென் றொரு வடிவம சிறிதாகவேனு மிலலாததாம; முன்னே தானில்லாதிருந் துண்டாகும ஆதிகாலத்தோடு தான அபாவமாகும அந்த (முடிவு)க் காலமு மிலலாமையினாலே அச சமசார விருடசத்தினது ஆதியு மந்தமும் எந்தப பிராணிகளும அறிதற்குரியன வன்றாம. ‡

## பகவான் சம்சாரவடிவ விருட்சத்தைச் சேதித்தற்குரிய உபாயத்தைக் கூறல.

அருச்சுனா! அதிகாரி புருஷா அசுவத்தமென்று வேதங் கூறும இரகசியமாயுள்ள இச்சமசாரவிருடசத்தைத் தமது திட வைராக்கியமென்னும வாடபடையால சேதித்துப பிரஹ்ம பதத்தை உணர்தல் வேண்டும.(அந்தப பிரஹ்மபதம எவ்வுபாயத்தா லுணரத் தக்கதென்று நீ வினவுவாயாயின், அதற்கு விடைகூறுகின்றேன், கேட்கக்கடவாய்.) பிரஹ்ம சொரூபமாகவே யிருந்து இந்திரஜாலம போல மாயாமயமான இப்பிரபஞசமனைத்தை யுந் தோனறச்செய்கின்ற முடிவிலாத வென்னைச் சரணமடைதலே அதிகாரிபுருஷா பிரஹ்ம பதத்தை யறிதற்குரிய உபாயமாம. †

‡ ஆதி - முதல, அந்தம - கடை. சமசார விருட்சத்திறகு ஆதியும அந்தமும் சித்தியாமையினாலே அதன் மத்தியமும சித்தியா தென்பதும, ஆதி அந்தமென்பனவற்றை முனனிட்டே மத்தியம கருதப்படுகினறதென்பதும்,இச்சமசார விருட்சத்தின வோ தலை முதலியனவற்றைப் பிராணிக ளுணரா திருத்தலின், அதன் ஆதியும அந்தமும அப்பிராணிகளுக்கு விளங்கா திருக்கின்றன வென்பதும, இச சமசார விருட்சம சொப்பன பதார்த்தம - கானனீர் - கந்தாவ நகரம் போலத் திருஷ்ட நஷ்ட சொரூப முடையதா யிருக்கின்ற தென்பதும் இங் குணரற் பாலனவாம

ஏது காணும்போதே கெடுகினறதோ அது திருஷ்ட நஷ்ட சொரூப முடையதாம.

† இங்கு வைராக்கியமாவது மனைவி மக்கள் பொருள்களின்மீதுள்ள ஆசையை விடுதலாம ; அலலது ஆசை கோப மகந்தை யனைத்தையும விடுதலாம. கோடரி முதலியன மரத்தை வெட்டுதற்குச் சாதனமா யிருத்தல்போலச் சமசார விருட்சத்தை வெட்டுதற்கு வைராக்கியம சாதனமா யிருக்கினறதென்பதும், வைராக்கிய முடையவா சற்குருவி னனுக்கிரகத்தால நானே பிரஹ்ம மென்று சிந்தனை செய்வதன்கண் நழுவாதிருத்தலின், அவா அச் சிந்தனையா லுண்டா

### பகவான் பிரஹமரூபமெனனும் வைஷணவ பததவதை யடைதறகுரிய மறறேருபாயததையும், அவவைஷணவ பதததின் விசேஷணததையுங கூறல

அருசசுனு! இருவினை வசததால தமமை வநதடைகினற இராகத துவேஷ முதலியவறறை யொழிதத ஞானிகள எரிசிககுமாறு தோனறு நிறகும வைஷணவ பதமான எனது சொரூப சுபாவம எததனமையதென்று நீ வினவுவாயாயின, அதறகு விடை கூறுகினறேன, கேடகக கடவாய வேதஙகள உலசனைநததையும பிரகாசிககச செயகினற நிலை பேறுடைய சூரியன சநதிரன அககினி யெனனும ஒளிபபொருள களால பிரகாசிககபபடாத தனமையுடைய சொபபிரகாச வடிவமாய விளஙகுகினறவனெனறும, (எனனை) வநதடைநதவா கடலை யடைநத ஆறுகளபோலப பினனாக கமதியவாறு வேறுநவிகமாகாதுளள தனமையனெனறும, எனனைச கூறும ¶

### பகவான் சுவாககம முதலிய உததம லோகஙகளை யடைநதவா மீளவது போலும், சுழுததியிலும் பிரளயததிலும் ஆதம சுபாவததை யடைநதவா மீளவதுபோலும எமது பததவதை யடைநதவா மீளாரெனறு கூறல

அருசசுனு! கடநதோறும அதனிடநது விளைவுபடடதாகத தோனறுகினற கடாகாயமும, சடாகநதோறும அதன நீர அசைநற கேறப அதிறபிரதிபிமபிததுத தோனறுகினற சநதிரனுமபோல, நான சரீரநதோறும அசசரீரததிறகு வேறுயச சீவனபோல நினறு அசசரீரஙகளில அடஙகியுளள ஆறிநதிரியஙகளையும (சுக துககஙகளை யனுப விததறகேதுவாயுளள கருமம உதயமாமபோது அசசுக துககஙகளை அனுபவிததறபொருடடு அவவிநதிரியஙகளுககுரிய) விஷயஙகளில செலுததுகினறேன $

---

கும நானபிரஹமமெனறுணரும தததுவ ஞானததால பிறததல இறததல வடிவச சமசாரததிறகுக காரணமாயுளள அஞஞானததைக கெடுததறகுரியவ ராகினறன ரெனபது மிஙகுணாததறபாலனவாம

¶ இராகததுவேஷ முதலிய வெனறமையின, மானம - மோகம - சீதோஷண முதலியவறறையும இஙகுக கொளளலவேணடும சூரியன சநதிரன அககினி யெனபன பரமாததமாவால விளஙகுகினறன, அவை பரமாததாவை விளஙகச செயவதிலலை யெனபது வேத சிததாநதமாம

$ ஆறிநதிரியஙகள சுரோததிரம துவககு சடசு - சிஙநுவை - கிராணம - மனமெனபனவாம கடம நாசமாயபோது கடாகாசம மகாகாசமாக விளங

### பகவான் சீவாத்மா மன முதலிய ஆறிந்திரியங்களையும் கிரகித்துக்கொண்டு செல்லுங் காலத்தைக் கூறல்.

*அக்கினியைப்போல் விளங்குகின்ற வேற்படையையுடைய அருச்சுனா! மோதுகின்ற காற்று மலரினிடத்துப் பரிமளிக்கின்ற வாசனையைக் கிரகித்துக்கொண்டு செல்லுந் தன்மையைப்போல், தேகேந்திரிய முதலியவற்றிற்குச் சுவாமியாயிருத்தலால் ஈசனென்று கூறப்படுகின்ற சீவன் கரும வசத்தால் ஒரு சரீரத்தைவிட்டு மற்றொரு சரீரத்தை யடையும்போதும் அச்சரீரத்தைவிட்டுப் பரலோகத்திற்குச் செல்லும்போதும் ஒழிப்பதற்கரியனவாயுள்ள மன முதலிய ஆறிந்திரியங்களையும் கிரகித்துக்கொண்டு செல்லுகின்றான் ¶*

### பகவான் சீவாத்மா மன முதலிய ஆறிந்திரியங்களையும் மரணகாலத்தில் கிரகித்துக்கொண்டு செல்வதன் காரணத்தைக் கூறல்

*அருச்சுனா! எதுவுந் தனக்குச் சொப்பாகாதுள்ள சீவன் மின்னலைப்போல் விரைந்து தோன்றி யழியுந் தன்மையுள்ள உடம்பினைக் கருமவசத்தால் மாறிமாறி விடுவதும் கொள்வதுமாய்ச் சப்த ஸ்பரிச முதலிய விஷயங்களை மன முதலிய இந்திரியங்களை யாசிரயித் தனுபவிக்கின்றான். (இவ்வனுபவத்தின் பொருட்டே அவன் அவ்விந்திரியங்களைக் கிரகித்துக்கொண்டு செல்லுகின்றா*

---

குதலைப்போலும் தடாகநீர் வற்றியபோது அதில் பிரதிபிம்பித்துள்ள சந்திரன் யதார்த்த சந்திரனுதலைப்போலும், சீவன் தத்துவஞானத்தால் காரண சரீரமென்னும் அஞ்ஞானத்தைக் கெடுத்தபோது பிரஹ்ம சொரூபமாக விளங்குகின்றான், அவன் மீண்டும் சீவவடிவ மாதலில்லை யென்பது இங்குணர்த்தற்பாலதாம்

¶ ஒரு சரீரத்தை விட்டு மற்றொரு சரீரத்தை யடைதல் பிறப்பும், அதனை விடல் இறப்புமாமெனக்

வாயு மலரிலுள்ள வாசனை வடிவச் சூக்ஷ்ம அம்சங்களைக் கிரகித்துக்கொண்டு செல்வதுபோலச் சீவன் மரணகாலத்தில் ஸ்தூல சரீரத்திலுள்ள மன முதலிய ஆறிந்திரியங்களையுங் கிரகித்துக்கொண்டு பரலோகத்திற்குச் செல்லுகின்றா னென்பதிங் குணர்த்தற்பாலதாம் மன முதலிய ஆறிந்திரிய மென்பது இங்குப் பிராணன் முதலியவற்றையுங் குறிப்பித்து நின்றதெனக்

• சீவன் மரணகாலத்தில் சூக்ஷ்ம சரீரத்தைக் கிரகித்துக்கொண்டு, மீட்டும் தான் விட்ட ஸ்தூல தேகத்திற்கு வாராவண்ணம் செல்லுகின்றானென்பது இங்குச் சாஸ்திரார்த்தமாம்

னென்று நீ அறியக்கடவாய். அருச்சுனு! நீ இவ்வான்மாவை யாரறிவார்; யாரறியா ரென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.)

அருச்சுனு! ஒரு சரீரத்தை விடுவதும் மற்றொரு சரீரத்தைக் கொள்வதும் இந்திரியங்களால் விஷயங்களை யனுபவிப்பதுமாயுள்ள அச்சீவாத்மாவின் தன்மையை ஆசை கோப முதலியவற்றால் அசுத்தமாய அந்தக்கரண முடைய அவிவேகிகள் எம் முயற்சியாலும் அறியாதிருக்கின்றனர்; இவர்கள் தம் வடிவமாயுள்ள சீவாத்மாவை யறியாதிருக்குமிது வியக்கத்தக்கதேயாம்; ஆசை கோப முதலியன வில்லாமையால் சுத்தமாய அந்தக்கரண முடைய விவேகிகள் சமாதி யப்பியாசத்தாலே அதனைப் பிரத்தியட்சமாக அறிவர். இவ்வான்மாவின் தன்மையை நீ தெளிவாக உணரக்கடவாய்; இன்னும் இவ்வான்மாவின் தன்மையைக் கூறுகின்றேன், கேட்கக்கடவாய். $

அருச்சுனனுக்கு வைஷ்ணவ பதமென்னும் பிரஹ்ம ரூபம் சூரியன் முதலியவற்றால் விளங்காது சோப்பிரகாசமா யிருக்கின்றது; அதனை யடைந்தவர் பிறப்பதில்லை; தேகத்திற் கன்னியமாய்ச் சீவாத்மா விருக்கின்றது; அதனியல்பை அவிவேகிக ளறியார், விவேகிக ளறிவாரென் றருளிச்செய்த பகவான் அவனுக்குத் தமது சர்வாத்மத் தன்மையையும் சர்வ வியவகாரங்களின் சாதனத் தன்மையையும் விளங்க உணர்த்தக் கருதி, தமது விபூதிகளைச் சுருக்கமாகக் கூறல்.

தூணியைந்தாற் போன்றுள்ள தோள்களையுடைய அருச்சுனு! சட்சு முதலிய இந்திரியங்களுக்கும் மனத்திற்கும் வாக்கிற்கும் தத்தம் விஷயங்களை விளங்கச் செய்யும் சாமர்த்திய வடிவ ஒளிப்பொருளும் நானே யாவன்; இந்திரியங்களுக் கனுக்கிரகஞ் செய்யும் சூரியன் - சந்திரன் - அக்கினி யென்னும் ஒளிப்பொருள்களிடத்துத தோன்றி விளங்கும் பிரகாசமும் நானே யாவன்; பிருதிவி வடிவமாக விருந்து கந்த முதலிய குணங்களை யதற்குக் கொடுத்து, எனது பலத்தையும் அதனிடத்து வைத்து, (அதனால் அதனை உறுதி யுடையதாகச் செய்து

$ சீவாத்மா சப்த முதலிய விஷயங்களை அந்தக்கரண சதுஷ்டயம், ஞானேந்திரிய பஞ்சகம், கருமேந்திரிய பஞ்சகம், பிராண பஞ்சக மென்பனவற்றைத் துணையாகக் கொண்டனுபவிக்கின்ற னென்பதிங் குணர்தற்பாலதாம்.

அதிலுள்ள ஸ்தாவர சங்கம வடிவமாயுள்ள) இப்பூதங்களையெல்லாந் தாங்குகின்றவனும் நானே யாவன். ‡

பூத வரிசைகளுள் முதலாவதாகவுள்ள ஆகாயத்தின்கண் சர்வ ரசங்களுக்கும் ஆதாரமாயுள்ள சந்திரன் வடிவமாகவிருந்து, உண்ணுதற்குரிய நெல் கோதுமை முதலிய உணவுப் பொருளனைத்திற்கும் அவ்வவற்றிற்கு தகுதியுடையனவாகப் பொருந்துகின்ற இரசங்களைக்கொடுத்து, அவ்வுணவுப்பொருள்களிலே அவ்விரசங்கள் கெடாதபடி அவற்றை விருத்திசெய்கின்றவனும் நானேயாவன்.

அருச்சுனா! தின்பனவும் நக்குவனவும் சுவைப்பனவும் உண்பனவுமா யிருந்து சிறந்த பயனைச் செய்கின்ற நால்வகை உணவுகளையும் சுகத்திற்குக் காரணமாம்படி பிராணிகளின் சரீரந்தோறும் ஜாடராக்கினி வடிவமாய்ப் பிராணன் அபானன்களோடு கூடியிருந்து சீரணிக்கச் செய்கின்றவனும் நானே யாவன். *

போர்முகத்துச் சிறந்து விளங்குகின்ற வில்லமைந்த தோள்களையுடைய வீரருள் அதி வீரனான அருச்சுனா! நல்வினைகளைச் செய்கின்ற புண்யவான்களது பேரறிவும், நல்வினைகளைச் செய்வதில்லாத பாவிகளது சிற்றறிவும் நானே யல்லாமல் வேறில்லை யென்பதை நீ அறியக் கடவாய். ‡

‡ காற்றானது மேகமண்டலத்திற் பிரவேசித்துத் தனது வலியால் அதன்கணுள்ள நீரைத் தாங்குவதுபோல, பகவான் (பிருதிவி தேவதா வடிவால்) பிருதிவியிற் பிரவேசித்துத் தனது வலியால் (அதனை உறுதி யுடையதாகச் செய்து)அதன்கணுள்ள சராசரப் பொருளெல்லாவற்றையுந் தாங்குகின்றானென்பதிங் குணர்தற்பாலதாம்.

* தின்பன முதலிய நான்கும் பட்சியம் - போஜ்யம் - லேகியம் - சோஷ்யமென்றும் சொல்லப்படும்; அப்ப முதலியன பட்சியமாம்; பாயச முதலியன போஜ்யமாம்; வெல்ல முதலியன லேகியமாம்; கரும்பு முதலியன சோஷ்யமாம்.

‡ பிரஹ்மன்முதல் தாவரமீறாய் மேலும் கீழுமாயுள்ள பிராணிகளின் புத்தியில் பரமாத்மா சீவவடிவமாய்ப் பிரதிபிம்பித் திருக்கின்றது; அதனால், சீவாத்மாக்கள் பரமாத்மாவைத் தவிர உண்மையி லில்லை யென்பதிங் குணர்தற்பாலதாம்.

அறிவென்று கூறினமையின், ஸ்மிருதியையும் ஞானத்தையும் கொள்ளல் வேண்டும். முன்னனுபவித்த வஸ்துவை விஷயமாக வுடைய சம்ஸ்காரஜந்நிய அறிவு ஸ்மிருதியாம்; இந்திரிய விஷய சம்பந்தமுதலிவற்றாற் றோன்றும் அறிவு ஞானமாம்.

கெடுத லில்லாத நான்கு வேதங்களின் பொருள்களையும் அறிபவ னும் நானே யாவன்; அவ்வேதங்களின் பழிப்பற்ற உண்மைப் பொரு ளும் நானே யாவன்; அவ்வேதங்களைச் சிஷ்யர்களுக்கு உண்மை யமைந்த சுரங்களா லெடுத்துப் போதிக்கும் சாம்பிரதாயப் பிரவர்த்தக னை குருவும் நானே யாவன். அருச்சுன! இன்னும் வேறொரு பொரு ளையுங் கூறுகின்றேன், நீ கேட்கக்கடவாய். $

சட்சு முதலிய இந்திரிய முதலியவற்றை விளங்கச்செய்யும் சாமர்த்திய
வடிவ ஒளிப் பொருளும் நானேயாவ னென்றற்றேடக்கத்தன
வாகத் தமது சோபாதிக வடிவத்தை அருச்சுனனுக் கருளிச்
செய்த பகவான் அவன்மீது தாம்கொண்டுள்ள கருணை
யால் அவனுக்கு க்ஷரம் அக்ஷரமென்னும் காரிய
காரணவடிவ இருவகை உபாதியுமற்ற தமது
நிருபாதிக சுத்த சொரூபத்தைக் கூறல்.¶

அருச்சுன! சராசர வடிவமாகப் பொருந்தியுள்ள இவ்வுலகத்தின் கண் அழிதலையே வடிவமாக முதன்மையாக வுடைய ஒரு பொரு ளிருப்பதே யல்லாமல், அருவமாய்த் தத்துவ ஞானத்தா லன்றி வேறெக் காரணத்தாலும் அழிவில்லாமையையே பொருந்தி யிருப்ப தாய மற்றொரு பொருளு முண்டு. †

---

$ பகவான் இங்ஙனம் கூறியதால், உலகமும், சீவர்களும், சீவர்களுக்கு வேதார்த்தங்களை உபதேசிக்கும் குருவும் உண்மையில் பிரஹ்மமேயாம்; அதனைத் தவிர யாதும் தனக்கென்றொரு வடிவமில்லாததா மென்பது பெறப்பட்டவா றறிக.

¶ க்ஷரம் - நாசமுடையது; அக்ஷரம் - (சம்சாரகாலத்தில்) நாச மில்லாதது; சோபாதிகம் - உபாதி யுடையது; நிருபாதிகம் - உபாதி யில்லாதது. ஒரு பொருளைப் பலபொருள் போலத் தோன்றச் செய்வதிங் குபாதியாம்.

† சம்சார காலத்தில் க்ஷரமென்றும் அக்ஷரமென்று மிருவகைப் பொரு ளுண்டு; அவற்றுள், காரிய வடிவமாயுள்ள சர்வ பூதங்களும் க்ஷரமாம்; சேதனத் திற் குபாதியாக விருப்பது வாயிலாக இப்பூதங்களுக்குக் காரணமா யுள்ள மாயை அக்ஷரமாம். இம்மாயை சம்சார காலத்தில் நாசமாகா திருப்பதுபற்றி அக்ஷர மென்று கூறப்படுகின்றது; இது தத்துவ ஞானத்தாலன்றி வேறெக்காரணத் தாலும் நாச முறுவதில்லையாம். இங்குக் கூறிய க்ஷரம் - அக்ஷரமென்னும் காரிய காரண வடிவ உபாதிகளால் எஞ்ஞான்றும் ஒன்றாகவேயுள்ள சேதனம் பலவாகத் தோன்றுகின்றதென்க.

பகவான க்ஷரம - அக்ஷரமெனபனவற்றின
வெளிப்படையாகக் கூறல்.

அருச்சுன! க்ஷரம - அக்ஷரமென்று கூறப்படுகின்ற இவ்விரண்டு பொருள்களையும செவவையாகப புததியா லுளளவாறு பொருநத ஆராய்நது நோககினல, அழிவுதெனனும க்ஷரபபொருள ஆக்கை முதலாகச் சர்வ பூதஙகளுமாம; அழியாக தென்னும அக்ஷரப் பொருள(காரிய வடிவமாகவுளள சாவ பூதஙகளுககுங காரணமாயுள்ள) உயிரென்று கூறபபடும மாயையாம. $

பகவான் க்ஷரம் - அக்ஷரமேன்னு மிரண்டு உபாதிகட்கும் வேறாய் மித்தையாயுள்ள அவற்றின் தோஷம் சிறிதாகவேனு முண்மையி லில்லாத தமது சுத்த-புதத-முகத சுபாவசொருபத்தைக் கூறல்.

அருச்சுன! க்ஷரம-அக்ஷரமென்னு மிவ்விரண்டிறகும வேறாய், அவ்விரண்டு உபாதிகளிலு முளள யாதொரு தோஷமு மிலலாமல, நாச மில்லாமல், எபபொருளகளும தன்னிடததுக கறபிதமாக வன்றி உண்மையாக விலலாமல, யாதொரு குறைவு மில்லாமல சுவர்கக-மத திய-பாதாளமென்னு மூன்று உலகததிலும வியாபிதது அவற்றைத் தாஙகி நிற்பதொனறுண்டு, அது யாதொரு விசேஷணமு மில்லாத ஆநநதவடிவப பிரஹமமாம.

பகவான் தமது யதாாத்த வடிவத்தை அறிநதவர்க்கு
வரும் பயனைக கூறல்.

இவ்வாநநதவடிவப பிரஹ்மமாகிய எனனை உளளபடி தமது சிததததினிடததுத தமதான்ம வடிவமாகத தெளிவாக அறிந்தவர் சமசார பநத மடையாா, இவவா றறிவ தலலாமல எனது யதாாதத

$ சமசார காலததில மாயை உயிாபோல அழிவில்லாததாகத தோன்றுத லின், உயிரெனறு கூறப்படுகினறதெனக ஆககை - உடமபு.

* எதற்கு நாச மிலலையோ அதறகு உறபததி யிலலை யெனபது ஞான சாஸ் திர நிசசயமாம க்ஷரம - அக்ஷரமெனனு மிரணடிறகும வேறாய், அவற்றின் தோஷ மில்லாமல், நாசமின்றி, க்ஷராக்ஷரங்களுக கதிஷ்டானமாய், பூரணமாய், உலகு மூன்றிலும கடததில் மண்போல வியாபித்து அவற்றைத தாங்கி நிற்பது யாதோரடையாளமு முணமையிலிலலாத பிரஹ்மமாம் , அதுவே பகவானது யதாாதத வடிவமாமென்பதிங குணாதற் பாலதாம்

வடிவமாகிய அநாதியா யுள்ள இப் பிரஹ்மப் பொருளுக்கு அந்தமும் ஆதியும் வேறே உண்டென் றறிதல் எவர்க்கு முடியாது. ‡

பகவான் தமது யதார்த்த வடிவத்தை யறிவது மிக அருமையா மெனக் கூறல்.

அருச்சுன! அதி ரகசியமா யுள்ள எனது யதார்த்த சொரூபத்தை இருக்கு முதலிய வேதம் நான்கும் ஒரே முகமாக விருந்து சொல்லத் தொடங்கினும் சிறிதும் சொல்லத் தக்கனவன்றாம்; வேதங்களே சொல்லத்தக்கனவன்றாயின், உலகத்தா ரதனை அறிதற்குரியவராவரோ? ஆகார். அருச்சுன! நீ பரமேசுவரனா யுள்ள எனக்கு மிகப் பிரிய நண்பனா யிருத்தலால் கருணையாலுனக்கு நான் எனது யதார்த்த சொரூபத்தை அறியுமா றுபதேசித்தேன். †

"வெண்ணெயோ விதுரனிட்ட விருந்தையோ வேலை சூழ்ந்த, மண்ணையோ வுண்டு முன்னாள் வருபசி தீர்த்தமாயோ"னாகிய பகவான் தமது யதார்த்த சொரூபத்தில் சித்தத்தைச் சிதறாது வைப்பவர் கிருதகிருத்திய ராவரேனக் கூறல்.

அருச்சுன! எவரேனு மொருவர் தமது புத்தியை எவ்விஷயத்திலும் வையாமல், (எனது யதார்த்த சொரூபமாகிய) அந்த நிரதிசயானந்த வடிவப் பிரஹ்மத்திலேயே வைப்பாராயின், அம்மதவர்க்கு அவர் ஆசைப் பெருக்கோடு செய்கின்ற சாஸ்திர விகித கருமங்களின் பயனை யெல்லாம் கொடுக்கும் என்றருளிச் செய்தனர். ¶

15 - பிரபஞ்ச அத்தியாயம் முற்றிற்று.

‡ ஆதியந்தமற்று நிரதிசயானந்த வடிவமா யுள்ள பிரஹ்மத்தைச் சற்குருவின் கருணையால் தமது ஆத்மாவாக அறிந்தவர் சாதல் பிறத்தலென்னும் சம்சார மடையா ரென்பதிங் குணர்தற்பாலதாம்.

† பரமார்த்த சொரூபத்தைச் சற்குருவி னனுக்கிரகத்தா லன்றி வேதார்த்தங்களை யறிதல் மாத்திரத்தா லுள்ளவா றுணர்தல் எவர்க்கு முடியாதென்பதும், 'அருச்சுனனுக்குப் பகவான் சற்குரு மூர்த்தியாக விருந்து, பரமார்த்த சொரூபத்தை உபதேசித்தாரென்பது மிங்குணர்தற் பாலனவாம்.

¶ நிரதிசயானந்த வடிவப் பிரஹ்மத்தில் சித்தத்தைச் சிதறாது வைத்திருப்பவர் அதனால் தாமே நிரதிசயானந்தப் பிரஹ்மமென்று தம்மையுணர்ந்து கிருத

# 16 - தேவாசுர சம்பத்து விபாகயோக அத்தியாயம்.

பதினைந்தாவது அத்தியாயத்தில் சீவர்கள் மானுட தேகத்திலே பூர்வம் செய்துள்ள சுபாசுப கருமானுசாரமாக உண்டாகும் சுபாசுப வாசனைகளே அவர்தம் சம்சார விருட்சத்திற்கு அவாந்தர காரணமாக அருளிச்செய்த பகவான், ஒன்பதாவது அத்தியாயத்தில் அவ்வாசனைகளையே தெய்வ சம்பத்து - அசுர சம்பத்து - இராட்சத சம்பத்தென மூவகையாகக் குறிப்பித்திருக்கதலை இப் பதினாறாவது அத்தியாயத்தில் தெய்வ சம்பத்தைத் தெய்வ சம்பத்தென்றும், அசுர சம்பத்து-இராட்சத சம்பத்தென்னு மிரண்டினையும் ஒன்றாகக்கொண்டு அவற்றை அசுர சம்பத்தென்றும் வகுத்து, தெய்வ சம்பத்தென்னும் சுபவாசனை மோட்ச காரணமா யிருத்தலாலும், அசுர சம்பத்தென்னும் அசுபவாசனை பந்தகாரணமா யிருக்கலாலும், அதிகாரி புருஷர் சுப வாசனையைக் கொள்ளல் வேண்டும், அசுப வாசனையைத் தள்ளல் வேண்டுமென்னும் கருத்துடையவராய், சுப வாசனையைக் கொள்ளுதலும் அசுப வாசனையைத் தள்ளுதலும் அவற்றின் சொரூபத்தை யறிந்தாலல்லது கூடாமையின், அவ்வாசனைகளின் சொரூபத்தைக் கூறல்

"மறந்திருந்த மனத்திருள் நீங்கிடத்
திறந்திறப்படச் செப்புதல் மேயினன்
அறந்திறந்தெரிர் காசகுத்தற் சாகவே
பிறந்திறந்துழல் கின்றபே ராளனே"

கிருத்தியாவனென்பதாம் எவனுக்கினிச் செய்யத்தக்க கருமமில்லையோ அவன் கிருதகிருத்தியனாம் தத்துவ ஞானிக்குச் செய்யத்தக்க கருமமொன்று மின்மையின், அவன் கிருத கிருத்திய னெனக்

இப்பதினைந்தாவது அத்தியாயத்தில் இக்கீதையின் ஆர்த்த முழுதும் சுருக்கமா யிருப்பதிங் குணர்தற்பாலதாம்

‡ அதிகாரி புருஷர் வேத விகிதமான அறத்தின் பாகுபாடுகளை யறிந்து, அவற்றைச் செய்துய்தற் பொருட்டுத் தமதிச்சையால் பிறந்திறந்து நடித்து வருகின்ற பேரருள் மூர்த்தியாகிய பகவான் ஆத்மாவைப் பிரஹ்ம வடிவமாக உணரா திருந்த மனவிருள் கெடும்படியும் ஆத்மஞான, சாதனங்கள் திடமாகும்படியும் தேவாசுர சம்பத்து விபாகயோகத்தை அருச்சுனனுக்குச் சொல்லத் தொடங்கினார்

அருச்சுனா! இவ்வுலகத்திலுள்ள மக்கள் யாவரும் தேவர் அசுர ரென்றிருதிறத்தினராக விருக்கின்றனர்; அவர்தம் சுபாவங்களைக் கூறுகின்றேன், நீ கேட்கக்கடவாய்.

## பகவான் தெய்வ சம்பத்தினைக் கூறல்.

போர்முகத்தில் பிறரழித்தற்கரிய காண்டீபமென்னும் வில்லை யுடைய அருச்சுனா! பயமில்லாமை, அந்தக்கரணத்தைத் தூய்தாக்கல், சித்தத்தைச் சிதாத்மாவின்கண் ஒருமுகமாம்படி செய்தல், ஆன்ம சொரூபநிச்சயம் எதனாலும் கெடாமை, நீட்டித்த கோப மென்னும் சினமில்லாமை, உண்மை கூறல், மறுமைக்குத் துணையாக யாகஞ்செய்தல், தவஞ் செய்தல், வேதாத்தியயனஞ்செய்தல், தன்னை யேர்ந்தவனுக வெண்ணுமை, கோட் சொல்லாமை, பிராணிகளை யிம்சை செய்யாமை, பிறர் செய்த பிழைகளைப் பொறுத்துக் கொள் ளல், பெருமையைத்தரும் தியாகம் - ஆர்ஜவம் - சாந்தி - அலோ லுத்துவம் - மார்த்தவம் - இலச்சை - அசாபலம் - தேஜஸு - அத் துரோகம் - திருதியென்னும் நல்லொழுக்கம், அறங்களுள் வன்மை யுடையதான தானஞ் செய்தல், துக்கிகளிடத்துக் கருணை செய்தல், காய மனச் சுத்தம், சுரோத்திர முதலிய இந்திரியங்களை அவற்றின் விஷயங்களிற் செல்லாவாறு தடுத்து ஒரு முகமாக்குதல் என்பன வனைத்தையும் தம்முள் கொண்டுள்ள கரும மனைத்தையும் தெய்வத் தன்மை யுடையோரிடத்துப் பொருந்திய செயல்களாமென்று நீ நிச்சயித்துணர்வாயாக. *

---

* சாஸ்திரம் கூறும் பொருளில் ஐயமின்றி அதனையனுஷ்டித்தலில் கருத் துடைமை பயமில்லாமையாம்; அந்தக்கரணத்தை ஆன்மாவை யறிதற்குச் சாதன மாகக் காமக்குரோத முதலியன எழும்பாவாறு செய்தல் அந்தக்கரணத்தைத் தூய்தாக்கலாம்; பிறர் நிந்தித்த போதும் வருத்திய போதும் கோப முண்டா காமை சின மில்லாமையாம்; இதமாயும் மிதமாயும் வஞ்சனை கலவாததாயுமுள்ள சொற்களைக் கூறல் உண்மை கூறலாம்; சந்நியாசம் தியாகமாம்; வக்கிரத்தன்மை யின்மை ஆர்ஜவமாம், அஃதாவது விசுவாசத்தோடு கேட்பவரிடத்து நிச்சயித்த பொருளை மறையாமையாம்; மனவடக்கம் சாந்தியாம்; விஷயங்கள் சமீபமாக விருந்தும் அவற்றை யனுபவிக்கும் சாமர்த்திய மிருந்தும் அவற்றின்கண் இந்திரி யங்கள் செல்லாதிருத்தல் அலோலுத்துவமாம்; குரூர சுபாவ மின்மை மார்த்தவ மாம்; செய்தற்குரிய வாகாத காரியங்களைச் செய்ய நாண முறுதல் இலச்சையாம்;

கொள்ளத்தக்க பயமில்லாமை முதலிய தெய்வ சம்பத்தை யருளிச்செய்த பகவான் தள்ளத்தக்க அசுர சம்பத்தைக் கூறல்.

*அருச்சுனு! தீயனவற்றைச் செய்யும் அசுர சம்பத்துடையோர் செயல்களைக் கூறுகின்றேன், நீ கேட்கக்கடவாய். அவ்வசுரசம்பத் துடையார் புண்ணியகருமங்கள் செய்யத்தக்கனவா மென்றும பாவ கருமங்கள் செய்யத்தகாதனவா மென்றும், புண்ணிய பாவங்களின் தன்மையைச் சிறிது முணர்தலில்லாதிருப்பர்; அதனால், காய மனச் சுத்தங்களையும் அறநூல்கள் கூறும் புனிதமாய ஆசாரங்களையும் மேற் கொள்ளாதிருப்பர்; ஒருவாற்றானும் உண்மை யுரை கூறார்; அவி வேகமே பொருந்த விருப்பர்.* †

பகவான் அசுர சம்பத்துடையாரது கொள்கையைக் கூறல்.

*அருச்சுனு! அசுர சம்பத் துடையார் சுருதி - ஸ்மிருதி - புரா ணம் - இதிகாச முதலிய பிரமாணங்களை அங்கீகரியாமையால், காரிய வடிவமாகக் கருதுதற்குரிய உலகமும் அவ்வுலகிற்குக் காரணமா யுள்ள ஈசனும் அவ்வுலக வேறுபாட்டிற்குக் காரணமா யுள்ள அறம்பாவங் களும் அசத்திய மென்றே கொள்வர்; பெண்ணும் ஆணும் தம்முள் பிரியமாகக் கூடுந் தன்மையால் பிராணிக ளனைத்து முண்டாகின்றன; அதனால், பிராணிகளி னுற்பத்திக்குக் காமமே காரணமாம்;பிறிதன்று மென்றும் கூறுவர்.* ¶

*பயன் தருதலில்லாத காரியங்களைச் செய்யாமை அசாபலமாம்; பிறரால அவமா னஞ் செய்யப்படாமை தேஜஸாம்; பிராணிகளைக கொல்ல விரும்பி ஆயுத மெடாமை அத்துரோகமாம்; வியாகூலம் நேரிட்டபோதும் தேகம் மன முதலிய வற்றை ஸ்திரமாகச் செய்யுமுயற்சி திருதியாம்; நீரால் உடம்பைச் சுத்தமாக்கு தல் காயச் சுத்தமாம்; உண்மை யுரைப்பதால் மனத்தைச் சுத்தமாககுதல் மனச் சுத்தமாம்.*

*† அசுர சம்பத்துடையார் புண்ணிய பாவ கருமங்களைச் செய்வதற்கண் விப ரீத புத்தி, காய மனச் சுத்தமில்லாமை, அநாசாரம, உண்மையுரையாமை, அவி வேகமென்பனவற்றை யுடையாரா யிருப்பரென்பதாம்.*

*¶ அசுர சம்பத்துடையார் உலகம் காரிய வடிவ மன்று;அதனால், அதற்குக் கர்த்தாவாய ஈச னில்லை; உலகம் என்று மிருப்பதாம; உலகம் வேறுபாடுடையதா யிருப்பது அதனியல்பு; அவ் வேறுபாட்டிற்குக் காரணம் அறம்பாவமன்று;*

பகவான அசுரசம்பததுடையாரது கொளகை அஙகீகரிககததககக தனறுமெனக கூறல

அருசசுன! அசுரசமபததுடையா தேகானமவாதியராக விருததலின, அறநூலசசொ கூறும வருணாசசிரம ஆசாரஙகளைச சிறிதும விருமபாம லொழிதது விடுவா, உணமை கூறுவதையும சுததமா யிருததலையும ஒழிககுவிடுவா, (காமம - குரோதம - உலோபம - மோக முதலியவறறால) பெறறககசக பெரும பயனும விவேகமிலலா திருபபா, அறபபுததி யுடையவரா யிருபபா, பெருமபழிகளைத தரு வனவாய பாவ கருமஙகளையே எபபோதுஞ செயவா, (காம செயயும தொழிலகளாலுணடாகும) நஷட லாபஙகளில ஒனறையும அறியா திருபபா, அதனால அவா கெடுதததறசரிய சததுருசகளாய இவவுலகத துளள பிராணிகளை யெலலா மழிககற பொருடடே புலி - பாமபு முதலிய பிராணிகளாகப பிறபபா ‡

அசுர சமபததுடையாா தமது தீய செயலகளால புலி-பாமபு முதலிய வறறின் பிறபபுககளை யடைநது வருாதி வருஙகாலததில யாதேனு மொரு கரும வசததால மககளாயப பிறநதாலும, மீணடும் தமககுத தீமை தரததகக காரியஙகளையே செயவரெனப பகவான் கூறல

அருசசுன! அவாகள யாதேனுமொரு கருமவசததால மகக ளாயப பிறநதாலும நூறுகோடி வருஷமானாலும விஷய போகஙக ளால பூரணமாகாத காமபோகததைப பூரணமாகச விருமபி மறைத

---

பிராணிகளி னுறபததி பெணணு ஆணும தமமுள விருமபிக கூடுதலாலுண டாகினறது அதறகுக காமந தவிர வேறு காரண மிலலையெனறு கூறுகினறன ரெனபதாம, இவவாறு கூறுவோா தேகானமவாதியராய உலகாயதராவரென பது இஙகுணாததறபாலதாம

‡ மிகத துசச ாயுளள மாலை சநதன முதலிய போகபபொருளகள அறப மாம, அவறறில பறறுளள புததி அறப புததியாம, அலலது மலம மாமிச முத லியவறறின கூடடமான உடமபு அறபமாம அதில நானெனறு கொணடுளள புததி அறப புததியாம அசுர சமபததுடையாாககு வரும பிறபபு-புலி பாமபு முதலியனவா யிருததலின அசுர சமபததை விவேகிகள சாவப பிரகாரத தாலும ஒழிததல வேணடுமெனபதிங குணாததறபாலதாம

வில்லாத மானத்தோடு மதத்தையும் தம்பத்தையும் பொருந்தி நின்றும், குறைதவில்லாத அவிவேகத்துடனே கோபத்தை யடைந்து நின்றும், ஏற்றுக்கொள்ளுதற்குரிய தாகாத அசுசி விரதத்தைமேற் கொண்டு பொய்த் தவஞ் செய்து வருவர்.

பகவான் அவ் வசுர சம்பத் துடையார் செயலை மீண்டும் விரித்துக் கூறல்.

அருச்சுனா! அவ் வசுர சம்பத்துடையார் தாம் பிறந்து மரண மாகுமளவும் அடைந்தனவும் அடையாதனவுமாய பொருள்களையே சிந்தித்துக்கொண் டிருப்பர்; தாமனுபவிக்குமாறு வருகின்ற மாலை சந்தன முதலிய பொருள்களையே யல்லாமல், மறந்தாயினும் அறம் பாவம், ஆத்மா - ஈசனென்றற்றொடக்கத்தனவற்றுள் ஒரு பொருளாவது அம்மாலை முதலியவற்றிற்கு வேறாக வில்லையென்று கூறுவர்; பேராசை யென்னும் கயிற்றால் கட்டுப்பட்டவராய், பெரும் போகங்களை யனுபவித்தற்பொருட்டு அநியாய வழியாகப் பொருள் தேடா நிற்பர். §

---

ஒருவன் தான் பிறர் பூசித்தற்குரியவனாகாதிருந்தும், பலர் முன் தன்னைப் பூசித்தற்குரியவனாகக் காட்டுதல் மானமாம்; ஒருவன் தன்னிடத்து மேன்மை யில்லாதிருந்தும், அதனைத் தன்னிடத்துக் கற்பித்துக் கொள்ளுதல் மதமாம்; ஒருவன் தான் தருமகுண முடையவனல்லாதிருந்தும் பிறர்க்குத் தன்னைத் தரும குண முடையவனாகக் காட்டுதல் தம்பமாம்; இஃது இடம்பமாம். சுடுகாடு முதலிய விடங்களில் மது - மாம்ச முதலியவற்றோடு பகவதிக்குச் செய்யும் பூசை அசுசி விரதமாம்; இது வேத விருத்தமா யிருத்தலின் பொய்த்தவமாம்.

அசுர சம்பத்துடையார் காமபோகத்தைப் பூரணமாக அனுபவிக்க விரும்பி, மானம் - மதம் - இடம்பம் - அவிவேகம்-கோபமென்பனவற்றை மேற்கொண்டு, வேத விருத்தமான விரதமுடையவரா யிருப்ப ரென்பதாம்.

§ அடையாத பொருளை யடைதல் யோகமாம் அதனைக் காத்தல் க்ஷேமமாம். இவ்வியோகக்ஷேம விசாரத்தை அசுர சம்பத் துடையார் அபரிமிதமாக வுடையவரா யிருப்பர்; அவர் தேகாத்ம வாதியாயிருத்தலின், அறம்பாவ முதலியன வில்லை யென்னுந் தீர்மானமுடையவரா யிருக்கின்றனர்; ஆசையால் கட்டுப்பட்டிருத்தலின், காம போகத்தை மிகுதியாக அனுபவித்தற்பொருட்டுப் பொருள்களை அநியாய வழியாகத் தேடுகின்றனரென்பதாம். அநியாயவழி - வஞ்சகம் - களவு - பலாத்கார முதலியனவாம்.

அசுர சம்பத் துடையாரது மனோராஜ்ஜியத்தையும் அவரடையும் கதியையும் பகவான் கூறல். [மனோராஜ்ஜியம்-வீணெண்ணம்.]

அருச்சுனா! அவ் வசுரசம்பத் துடையார் இந்தத் திரவியத்தை இப்போது யாம் இவ்வுபாயத்தா லடைந்தோம்; இத்திரவியத்தினும் வேறாக (மனக் களிப்பை யுண்டாக்கும்) திரவியத்தை யினியதிசீக்கிரமாக இவ்வுபாயத்தால் அடைவோமென்றும், இப்போதிப்பகைவனை இவ்வுபாயத்தா லழித்துவிட்டோம்; மற்றப் பகைவரையும் இனி யிவ்வுபாயத்தால் அநாயாசமாக அதிசீக்கிரத்தி லழித்துவிடுவோமென்றும், சப்தாதி விஷய போகங்களை யனுபவிப்பவருள் எம்மைப்போல அவற்றை யனுபவிக்கத்தக்க சமர்த்தர் எவருமில்லையென்றும், எம்மை யொத்தாரும் எம்மினு மிக்காரும் இருக்கின்றனரோ! இல்லையென்றும் மனோராஜ்ஜியஞ் செய்து வருவர்.

(அருச்சுனா! அவ்வசுரசம்பத்துடையார் இவ்வாறு மனோராஜ்ஜியஞ் செய்து வருவதன் காரணத்தைக் கூறுகின்றேன், நீ கேட்கக் கடவாய்.)

அருச்சுனா! அவர் யாம் ஜநக்கூட்டமும் தேகவலியும் மனவலியும் ஆரோக்கியமும் பெற்றிருக்கின்றோம்; பெருந் திரவியமுடையவரா யிருக்கின்றோம்; அதனால், எம்மை யொத்தாரேயன்றி எம்மினு மிக்காரு மில்லை; அவ்வாறிருப்பதால் யாமே யாவர்க்கும் ஈசனாவோமென்று தம்மைத்தாமே வியந்து பேசிக்கொள்வர். இன்னுமவர் யாம் எமது சித்தம் களிப்படைவதற்குரிய வேள்வியைச் செய்வோம்; வேள்வி செய்யும்போது திரவியங்களை அந்தணர்களுக்கு மேகம் பெருமழை பெய்வதுபோல மிகுதியாகக் கொடுப்போமென்று இவ்வாறு நாடோறும் மனோராஜ்ஜியஞ் செய்து வருவதல்லாமல், அவற்றைச் (சுருதி கூறியவாறு) செய்யார்.

அருச்சுனா! பந்தம் ஒழிவதற்குக் காரணமாக இல்லாத பலவகையாயுள்ள துஷ்ட சங்கற்பங்களென்று முன்னர்க் கூறிய சுழியைப் பொருந்தியே சுழலா நிற்பவரும் அடக்குவதற்கரியதாயுள்ள மோகமென்று சொல்லப்படுகின்ற வலையுள்ளே அகப்பட்டு நிற்பவருமாய அவ்வசுர சம்பத்துடையார் சரீரமாகிய சிற்றில்லினது ஆயுளாகிய புல்நுனியின் பனிநீர் யமனாகிய வெயிலால் வற்றிவிடுமாயின், தம்

உயிர் நடுக்கமடைய இறந்து, கடப்பதற்கரியவாய அசுசி நரகங்க ளென்று சொல்லப்படுகின்ற கடல்களிலே வீழவே கடமை யுடையவ ராவர்.

(அருச்சுனா! நீ அவ்வசுர சம்பத்துடையாருள் சிலர் வேள்வி முதலிய சுப கருமங்களைச் செய்தலின், அவர் நரகத்தை யடைத லெவ்வாறுமென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக்கடவாய்.)

அருச்சுனா! அவ் வசுர சம்பத்துடையார் தம்மைத் தாமே உத்தமகுண மனைத்தையு முடையவராக மதித்து வியந்து, உண்மை யுணர்ந்த பெரியோராகிய சாதுக்களைத் தம்மினும் மேலானவராக மதித்துப் பாராட்டுதலில்லா திருப்பர்; தாம் விரும்பிய பயனை யடைய வெண்ணி, சிறப்புள்ள வேள்வி முதலியவற்றைச் செய்த தீட்சிதர் - சோமயாஜி யென்று தம்மைப் பிறர் ஸ்துதி செய்தற் பொருட்டு, பரமேசுவரன் ஒவ்வொரு சிருட்டியி னாரம்பத்திலும் கூறி வருகின்ற அநாதியாய வேதங்கள் விதித்தவாறு (திரவியம் - தேவதை - மந்திரம் - தட்சிணை முதலிய யக்ஞ அங்கங்களோடு) செய்யாமலே யாகங்களைச் செய்வர். †

இப்பொருள் இத சாதனமாம், இப்பொருள் அகித சாதனமாமென்னும் விவேக மின்மை யிங்கு மோகமாம. இதம் - நன்மை; அகிதம் - தீமை. வலையி லகப்பட்ட மீன் முதலியன சுதந்தரமற் றிருத்தல்போல மோகவலையி லகப்பட் டிருப்பவரும் சுதந்தரமற் றிருப்ப ரென்பதாம். மலம், மூத்திரம், கோழை, உதிர முதலியன நிறைந்துள்ள வைதரணி முதலியன அசுசி நரகங்களாம்.

அசுர சம்பத்துடையார் மோகத்தால் சுதந்தரமற் றிருப்பதால், விஷய போகத்திலே ஆசையுடையவராய், தீவினைகளை மறவாது செய்து அதனால் நரகத்தை யடைதற்குரியவராகின்றன ரென்பதிங் குணர்தற் பாலதாம்.

† வேதங்கள் விதித்தவாறு செய்யாது வேறுவிதமாகச் செய்யும் யாகம் நாம யக்ஞமென்று சொல்லப்படும். அசுர சம்பத் துடையார் இடம்பம் - மானம் - மத மென்பனவற்றை யுடையவரா யிருத்தலின், உண்மை யுணர்ந்த பெரியோராகிய சாதுக்களைத் தம்மினும் மேலானவராக மதித்துப் பாராட்டுதலில்லாதிருக்கின்றன ரென்பதாம்.

வேதங் கூறியவாறு வேள்வியைச் செய்யாது வேறுவிதமாகச் செய்பவர் அதன் பயனை யடையாரென்ப திங்குணர்தற்பாலதாம்.

மோட்சத்தின் பகிரங்க சாதனமாயுள்ள யாக தான முதலிய கருமங்கள் சித்தியாதுள்ள அசுர சம்பத்துடையார்க்கு அதன் அந்தரங்க சாதனமாயுள்ள விசாரம்-வைராக்கியம்-பகவத்பத்தி முதலியன ஒருவாற்றானும் சித்திப்பதில்லையா மெனப் பகவான் கூறல்.

அருச்சுனா! நிலைபெற்ற களிப்பும் - வலியும்-காமமும் நிறைந்து, (யானெனும்) அகங்காரமாகிய பெருமயக்கம் பொருந்தியுள்ள அவ்வசுர சம்பத்துடையார் தமது தேகத்திலும் மனைவி - மக்கள் முதலிய மற்றவர் தேகத்திலும் புத்தி முதலியவற்றிற்குச் சாட்சியாயும் மிகு பிரியத்திற்கு விஷயமாயு முள்ள பரமேசுவரனான எனது சுபாவத்தைத் தீமைக் கன்னியமாக வெண்ணிக்கொண்டு என்னைத் துவேஷித்து வருகின்றனர்.

(அருச்சுனா ! நீ பரமேசுவரராய உமது கருணையால், அசுர சம்பத் துடையார்க்கு யாதாவதொரு காலத்தில் கடைத்தேறுதல் சம்பவியாதோ வென்று வினவுதல் கூடும்; அதற்கு விடை கூறுகின்றேன், கேட்கக் கடவாய்.)

வெற்றியுள்ள அருச்சுனா! இம்மக்கள் யாவர்க்கும் கீழாயிருப்பவரும் பிராணிகளை யிம்சிக்கும் குரூரத்தன்மையால் சர்ப்பத்தை

---

*சாதுக்களை அவமதித்தற்குக் காரணமாயுள்ள சித்தத்தின் தோஷ விசேஷம் களிப்பாம்; பிராணிகளை வருத்துதற்பொருட்டுத் தேகத்திலுள்ள சாமர்த்திய விசேஷம் வலியாம்; இஷ்ட வஸ்துவின்மீ துள்ள பிரியம் காமமாம்; தன்னிடத்தில்லாத குணங்களைக் கற்பித்துக்கொண்டு, அவற்றால் தன்னை மேலானவனாகக் கருதுதல் இங்கு அகங்காரமாம்; பரமேசுவரனது ஆக்ஞா ரூபமா யுள்ள சுருதி ஸ்மிருதிகள் கூறியவற்றை அனுஷ்டியாமல் வெறுப்பதே பரமேசுவரனைத் துவேஷித்து வருதலாம்; அல்லது சர்வ சரீரத்திலும் பரமேசுவரன் ஆத்ம வடிவமா யிருத்தலை யறியாமல், அப் பரமேசுவரனை ஆத்மாவினும் வேறாகக் கருதி, பிராணிகளை விதியின்றி இம்சித்தலே பரமேசுவரனைத் துவேஷித்தலாம். அசுர சம்பத் துடையார் சற்குருமுதலிய பெரியாரிடத் துள்ள கருணை முதலிய குணங்களில் வஞ்சக முதலிய தோஷங்களைக் கற்பித்து, அவர்தம் வார்த்தையில் சிரத்தையின்றி யிருத்தலின், தம்மை நன்னெறியிற் செலுத்துவா ரின்றி யிருக்கின்றனர்; அதனா லவர் மோட்ச சாதனங்களுள் ஒன்றுமின்றி நரகத்தையே யடைதற் குரியவரா யிருக்கின்றன ரென்பதாம்.

யொததிருபபவருமாகிய அவவசுர சமபததுடையவரைச சோாவில லாத துனபஙக ளடையா நிறகும, அவாதமமைப பரமேசுவரனாய நானே புலி பாமபு முதலிய பிறபபுககளாகிய புறறுததோறும அடிககடி புகுமாறு வீழததுகினறேன †

(அருசசுனா! நீ அவவசுர சமபததுடையாாககுக கிரமமாகப பல பிறபபுககளுககுப பினனுவது கடைததேறுதல சமபவியாதோ வெனறு வினவுதல கூடும, அதறகு விடை கூறுகினறேன, கேடகக கடவாய)

அருசசுனா! இவவாறடிககடி புலி பாமபு முதலிய பிறபபுககளை யடைநதுவரும அசுர சமபததுடையார அப பிறபபுகடோறும இது நிததியம, இஃதநிததியமெனறு பொருளகளைப பகுததுணரும ததுவஞானம(மெயயுணாவு)இலலாமையால, தாம கடைக்கேறுதறகுரிய வேத மாாககததை யடையாது முனனடைநத பிறபபினும கீழாய கிருமி கீடாதி அதோகதிகோறும சுழனறு திரிநது வருநதுவா, (அதனால, அவாககுக கடைததேறுதல சமபவிபப திலலையாம) ‡

† அசுர சமபததுடையார சாஸதிரப பிரதிபாதகமாயுளள சனமாாககததிற செலலாமலதனை நிநதிததது வருதலின, அவரிடததுப பரமேசுவரனது கருணை யுணடாவ திலலையாம ஆனால, அவாதமமைப பரமேசுவரன அவாதம கருமததிற கேறறவாறு நனமை தீமைகளையடையச செயகினறனன, அதனால, பரமேசுவர னிடதது விஷமததனமை தலைய யினமை யெனபன சமபவிபப திலலையா மெனபதிங குணாததறபாலதாம

இமமககள யாவாககுமெனறது தெயவ சமபததுடையாரை

அசுர சமபததுடையார பரமேசுவரனையும சாதுககளையும நிநதிததது, சீவ வதையிற பிரீதியுறறு நாாதமாரப சாஸதிரம விலககிய கருமஙகளைச செயது வருதலின, அவாககு அவா செயத கருமததிறகேறறவாறு பலன கொடுககும பரமேசுவரன, அவாதமமை முனனா நரகததிற றளளிப பலகாலம வருததமுறச செயது, பினன ரவாககு அவாதம கருமவாசனைக கேறறவாறு புலி பாமபு முதலிய பிறபபுககளைக கொடுககினறான, இவவாறவாதமமைப பரமேசுவரன செயதலே அவாமீது கருணை செயயாமையா மெனபது மிஙகுணாததறபாலதாம

‡ புலி பாமபு - கிருமி கீடம முதலிய பிறபபுககளுள உயிாகளுககு வேத மாாககததை யடைதறகுத தகுதி யினமையின, அவறறிறகுக கடைத்தேறுதல சமபவியாதிருககினற தெனபதாம

(அருசசுன ! நீ பலவகையா யுளள அவவசுர சமபததுககள எவ வாறு நீஙகுமெனறு வினவுதல கூடும, அதறகு விடை கூறுகினறேன, கேடகக கடவாய.)

அருசசுன ! ஒருவனை அததியநதம அதம யோனிகளை யடையு மாறு செயவதும எபபோதும மீளுதற கரிய நரகததினக ணடையச செயவதுமாக வருகினற மாககஙகள மூனறுணடு, அமமூனறனை யும ஒரு கிரமமாகக கூறி உனககறிவிககினறேன, அவறறை நீ கேட பாயாக

அருசசுன ! விஷயஙகளின மீதுளள பிரியததா லுணடாகிய காமமும, குறறம பொருநதச சுடுகினற அககினியை யொதத கோப மும, உலோபமும அசுர சமபததுககளை மேனமேலு முணடாககுவது வாயிலாக எவாககும நரகசசதை யடைசறகும ஈாசததை யடைதற குங காரணமாம, அககாரணததால, காமம - கோபம - உலோப மெனனும இம மூனறனையும விவேகததால பரிததியாகஞ செயதவா சாவ அநாததஙகளு மொழிநத நிரதிசயாநநத வடிவ மோடச மென னும பெருவீடடினைச சமகருளதாகப பெறறவராவா §

சாஸ்திர விதியைக கடநது தம்முடைய இசசையினபடி நடபபவா யாதொரு புருஷாாததததையு மடையாரெனப பகவான கூறல

அருசசுன ! இது செயயததசகது, இது செயயத தகாத தெனறு சாஸதிரம கூறும மாாககததில சோநதொழுகுவதை விரும

§ காமக குரோத லோபமெனபன நரக வாயிலகளாம, அசுர சமபததுகக ளுணடாதறகுச சிறநத காரணமா யிருபபனவாம அசுதத வாசனைகளை யுண டாககுவது வாயிலாக ஈரகததையும, மிகக கிழாய பிறபபுககளையும மககளடை தறகுக காரணமாயிருபபனவாம, அவறறை விவேகததால பரிததியாகஞ செய தவா வைராககிய முதலிய சாதனஙகளைக கிரமமாகப பெறறு, அவறறால ஆதம ஞான முடையவராய, மீடசியிலபதமெனனும மோடசததைப பெறுவ ரெனப தாம

காமக் குரோத முலோப மெனபன பலவகையாயுளள அசுர சமபததுக களுககுக காரணமா யிருததலின, அவை நீஙகியபோது அசுர சமபததுககள தாமே நீஙகிவிடுமெனபதிங குணாததபாலதாம

காமக குரோதம உலோப மெனபனவறறைப பரிததியாகஞ செயதலாவது விவேகததால அவறறைத தடுததுத தடுததது வருதல வாயிலாக அவை சிததத தினக ணெழாதிருககச செயதலாம

பாது தமமனததிறகுத் தோனறியவாறு மாகஙகளையும செயது வருபவா இகலோகமும இதறகு வேறாய இயலபைப பொருநதியுளள பரலோகமும உணடாககும சுகஙகளையும மறற அநதககரண சுததியையும அதன பயனாய முததியையும எவவாறறாலு மடையாா †

"பூதமுதலானவை போறுததருளு" கினற பகவான் சாஸ்திரம் விதிததவா றொழுகாதவா யாதொரு புருஷாாததத்தையும் பெறுதற குரிய ரலலராகலின், அதிகாரி புருஷா சாஸ்திரம் விதிததவா றெழுகுதல் வேணடுமென்னும் பொருளைக கூறுபவராய இவவததியாயததை முடிததல

அருசசுனா! முறகூறிய காரணககால இது செயயத தககது, இது செயயததகாதது எனபனவறறை அறிதறகுப பிரமாணமாயுளள சுருதி - ஸமிருதி - புராணம - இதிகாச முதலிய சாஸதிரங களை கூறியவாறு குறறம நோககாது, சிததசுததி யுணடாமளவும உனது யுததமுதலிய கருமஙகளையே நீ செயயக கடவாயென றருளிச செயதனா. ‡

16 - தேவாசுர சம்பதது விபாகயோக அததியாயம் முறறிறறு

† தனனைப படிபபவாககு அவா அறியாத அாததஙகளை யறிவிபபது சாஸதிரமாம சுருதி - ஸமிருதி - புராணம - இதிகாச முதலிய சாஸதிரஙகள கூறிய வழியிற செனறொழுகாது, தமதிசசையினபடி யொழுகுகினறவா காமககுரோத லோபமுடையவராய, அசுபவாசனைகளுக கடிமையாயிருபபா, அதனால், அவாஇகலோக சுகததையும, பரலோக சுகததையும, அநதககரண சுததியையும, மோடசத தையும பெறுதறகுரியவராகா திருககினறன ரெனபதாம இகலோகம - இவவுலகம, பரலோகம - சுவாககாதி யுலகம

‡ அசுரசமபததும, பல வேறு இழிபிறபபும, பல வேறு துனபஙகளு முணடாதறகுக காரணமா யுளள காமககுரோத லோபமெனபனவறறை விவேகததா லொழிததுச சாஸதிரம விதிததவா றொழுகுகினறவா தெயவ சமபததுடையவராய, இமமைபபயன - மறுமைபபயன மோடசமெனனு மூனறையும தவறாது பெறுவரெனபதிங குணாததறபாலதாம

# 17 - குண விகார அத்தியாயம்.

பதினாறாவது அத்தியாயத்தின் முடிவில் சாஸ்திர விதியை யனுசரியாது தமது விருப்பத்திற் கேற்றவாறு கருமங்களைச் செய்பவர்களுக்குத் தத்துவஞான முண்டாகாதென்று பகவான் கூறியதைக் கேட்ட அருச்சுனன், சாஸ்திர விதியை ஆலசிய முதலிய தோஷங்களின் வயத்தா லொழித்துத் தமது பிதா - பிதாமகன் முதலிய பெரியோரது வியவகாரத்தாலேயே நிஷித்த கருமங்களைச் செய்வ தில்லாது சிரத்தை யோடு விகித கருமங்களைச் செய்து வருபவர் தெய்வ சம்பத்துடைய வர் அசுர சம்பத்துடையவ ரென்னு மிருவரினும் வேறானவரா யிருத்தலின், அவர்களுக்குச் சாஸ்திரங்கள் கூறும் சாதனங்களுள் அதிகார முண்டா? இல்லையா? என்றையுற்றுப் பகவானை நோக்கி வினவுதல்.

"உண்டு மீள வொளித்துல கியாவையும்
கண்டு காப்பவன் கட்டுரைத் திட்டதே
கொண்டு பார்த்தனக் கொண்டல்வண் ணனடிணைத்
தொண்டு கூறிப் பணிந்திது சொல்லுவான்" †

குளிர்ச்சி பொருந்திய பெருங்கடல்போலத் திருமேனியை யுடைய பகவானே! உலகத்தாருள் சிலர் சுருதி - ஸ்மிருதி - புராண - இதிகாச முதலிய சாஸ்திரங்கள் கூறிய விதியைப் பரித்தியாகஞ் செய்து, சிரத்தையோடு கூடிச் செய்யும் தேவ பூசை யாகமும் முதலிய கருமங்கள், சமுசாரத்தைத் தரும் தோஷ முடையனவாய சாத்துவிகம் - இராசதம் - தாமதமென்னும் குண மூன்றனுள், எக்குணத்தின் காரியமாம்? இதற்கு விடையருளல் வேண்டும். ‡

† அருச்சுனன் உலகனைத்தையும் சங்காரகாலத்தி லுண்டு மறைத்து மீண்டும் சிருஷ்டிகாலத்தில் படைத்துக் காக்கும் பகவான் சாஸ்திர விதியை யொழித்தவர் எப்பயனையும் பெறாரென்று கூறியதைச் சங்கையாகக்கொண்டு, அம் மேகவண்ணனாகிய பகவானை வணங்கி, பகவானே! யான் உமதடிமையாவே னென்று கூறி யிதனை வினவுவானாயினன்

சாஸ்திர விதியை ஆலசிய முதலியவற்றால் பரித்தியாகஞ் செய்து பிதா - பிதாமகன் முதலிய பெரியோரது வியவகாரத்தால் சிரத்தையோடுகூடித்

பகவானது விடை.

அருச்சுனு ! தேகாபிமான முடைய சகல புருஷர்க்கும் பூர்வ கரும சம்ஸ்கார வாயிலாக உண்டாகின்ற சிரத்தையின் வேறுபாட்டினைத் தையும் கூறுமிடத்து, அச்சிரத்தை சாத்துவிகி, இராசசி, தாமசி யென்று கூறப்படும் இப்பேதத்தால் சத்துவம் - இராசதம் - தாமத மென்னும் மூவிதக் குணங்களுமாய் நிற்கு மல்லாமல் மற்றொன்முக முடிவு பெற்று நிற்ப தில்லையாம் ; பொருந்துதற்கரிய அக்குணங்க ளின் வேற்றுமையா லுண்டாய சிரத்தையின் வேறுபா டனைத்தை யும் உனக்கு விளங்குமாறு கூறுகின்றேன், அவற்றை நீ கேட்கக் கடவாய்.

பகவான் சாத்துவிக முதலிய குண பேதங்களை அவற்றின் காரிய பேதத்தால் விரிவாகக் கூறல்.

அருச்சுனு! சொல்லுதற்கரிய இக் குண மூன்றனுள், சாத்துவிக குணமுடையவர், இவரெமக்கு மோட்சந்தருங் கடவுளாவரென்று நம்பி வசு உருத்திரர் முதலிய சாத்துவிக குணமுடைய தேவர்களையே சரணமாக அடைந்து பூசிப்பர் ; இராசத குணமுடையவர் இவர் தாம் எம்மை யிரட்சிக்கும் கடவுளாவரென்று நிச்சயித்து, இராசத குணமுடைய குபேரன் முதலிய இயக்கரையும் நிருதி முதலிய இரா க்கதரையும் சரணமாக அடைந்து பூசிப்பர் ; தாமத குணமுடைய வர் இவை யெம்மைப் பாதுகாப்பனவா மென்று கருதித் தாமத குண முடைய பேயும் பூதமுமா யுள்ளனவற்றைச் சரணமாக அடைந்து பூசிப்பர்.

---

தேவபூசை யக்ஞ முதலியவற்றைச் செய்பவர் தெய்வசம்பத்துடையாரினும் அசுர சம்பத்துடையாரினும் வேருனவராயிருத்தலின், அவர்க்குச் சாஸ்திரங் கூறிய சாதனங்களுள் அதிகாரமுண்டா ? இல்லையாவென் றருச்சுனன் பகவானை நோக்கி வினுவினனென்பதாம்.

¶ சாஸ்திரஞானமின்றித் தமக்கியற்கையாகவுள்ள சிரத்தையால் வசு-உருத் திரர் முதலிய சாத்துவிகதேவர்களைப் பூசிப்பவர் சத்துவகுண முடையாராவர்; சாஸ்திர ஞானமின்றித் தமக் கியற்கையாகவுள்ள சிரத்தையால் இராசத குண முடைய குபேரன் முதலிய இயக்கரையும் நிருதி முதலிய இராக்கதரையும் பூசிப் பவர் இராசத குண முடையாராவர்; சாஸ்திர ஞான மின்றித் தமக் கியற்கையாக

சுருதி ஸ்மிருதி முதலிய சாஸ்திர விதியைப் பரித்தியாகஞ் செய்தவர் சத்துவம் - இராசதம் - தாமதமென்னுங் குணத் திரயத்துள் யாதாவதொன் றுடையவரா யிருத்தலே அவர்தம் தேவபூசை முதலியவற்றால் குறிப்பித்துக் கூறிய பகவான் இராசத குண முடையாருள்ளும் தாமத குண முடையாருள்ளும் சிலர் பூர்வபுண்ணிய கரும பரிபாகத்தாலே சத்துவ குண முடையவராய், சாஸ்திரங் கூறிய சாதனங்களி லதிகார முடையவராவர்; துராக்கிரகத்தாலும் பூர்வஞ் செய்த பாவ கரும பரிபாகத்தா லடைந்துள்ள துஷ்டரோடு கூடுதல் முதலிய தோஷங்களாலும் இராசத குணத்தையும் தாமத குணத்தையும் பரித்தியாகஞ் செய்யா திருப்பவர் சாஸ்திரங் கூறிய சன்மார்க்கத்தி னின்றும் தவறி, சாஸ்திர நிஷித்தமாயுள்ள துன்மார்க்கத்திற் சென்றொழுகி, இகலோகத்திலும் பரலோகத்திலும் துக்கத்தையே யடைதற்குரியவராவரெனக் கூறல்.

அருச்சுன! நீ அகங்காரம் - இடம்பம் - காமம் - இராகம் - பலமென்னு மிவை யடங்குத லில்லாதும், சுருதி - ஸ்மிருதி - புராணம் - இதிகாச மென்றற் றொடக்கத்தனவாய் விரிவாகப் பொருந்திய சாஸ்திரங்களின் விதியை யனுசரியாதும், தமது சரீரத்தையும் அதனுள் போக்திருவடிவமாயுள்ள பரமேசுவரனான என்னையும் மெலியச் செய்கின்ற கோரமான தவத்தைத் தொடங்கிச் செய்கின்றவரை அசுர யோனியிற் றோன்றினவரென் றுணரக்கடவாய் †

வுள்ள சிரத்தையால் தாமத குண முடைய பேய் பூதங்களைப் பூசிப்பவர் தாமத குண முடையாராவரென்பதிங் குணர்தற்பாலதாம்.

தமது தருமத்தினின்றும் தவறிய பிராமணர் முதலியவர் தமது தேகம் விழுந்தபின் வாயுமய தேகத்தை யடைந்து, கொள்ளிவாய் முதலிய பெயருடைய பேய்வடிவராவரென்பதாம். இப்பேய் பிரேதமென்றும் சொல்லப்படும்.

† யானே யாவரினும் குணங்களெல்லாவற்றாலும் சிறந்தவனென்னும் துஷ்ட அபிமானம் அகங்காரமாம்; யாவரும் தன்னைத் தரும சொரூபியென்று மதித்தல் வேண்டுமென்று கருதி, பலரிடத்தும் யான் தருமஞ் செய்பவனா யிருக்கின்றேனென்று கூறல் இடம்பமாம்; காணி மனை முதலியவற்றின்மீதுள்ள இச்சை காமமாம்; அக்காணி மனை முதலியவற்றின்கண் அழுத்தமாயுள்ள ஆசை இராகமாம்; காணி மனை முதலியவற்றை யானவசியம் சம்பாதித்தல் வேண்டுமென்னும் பிடிவாதம் பலமாம்; சுடுபாறையிற் கிடத்தல் முதலியன கோரமான தவமாம்.

சத்துவ குண முடையார் தேவராவர், இராசத - தாமத குண முடையார் விபரீதபுத்தி யுடையவரா யிருத்தலின் அசுர ராவரெனக் குறிப்பித்த பந்தமும் வீடும் - உறவும் பகையு மொருசிறிது மில்லாத பகவான் சத்துவகுண முடையாரை யறிதற்பொருட்டும், இராசத-தாமத குணமுடையாரை நீக்குதற்பொருட்டும் அவர்தம ஆகாரம்-யாகம் - தவம் - தானமென்னும் நான்கும் மும்மூன்று வகையா யிருத்தலைக் கூறல

அருச்சுனா! சர்வப் பிராணிகட்கும் பிரியமாயுள்ள ஆகாரமும், யாகமும், யாவரும் செய்தற்குரிய தவமும் தானமு மென்று சிறப்புப் பொருந்தக் கூறப்படும் இந்நான்கனுள் ஒவ்வொன்றும் மேன்மைபொருந்திய சத்துவ குணம்-இராசத குணம்-தாமத குண மென்னும் குணத்திரயத்தாலே மும்மூன்று வகையாம், அவற்றைச் கூறுகின்றேன், நீ கேட்கக்கடவாய் ¶

அசுரசாதிய ரல்லாத மானுட ரிடத்து நேரே அசுரத் தன்மை யின்றும், ஆயினும், அவர் ஆசுர நிச்சயமுடைமையாலும் துஷ்ட கருமங்களைச் செய்வதாலும் அசுர யோனியிற் றோன்றினவரென் றுபசாரமாகக் கூறப்படுகின்றன ரெனக் துஷ்ட கருமங்களைச் செய்பவர் ஆசுர நிச்சய முடையவரா யிருப்ப ரெனபதிங் குணர்தற்பாலதாம் வேதார்த்தங்கட்கு விரோதமான நிச்சயம் ஆசுர நிச்சயமாம்

சுடுபாறையிற் கிடத்தல் முதலிய வேத விருத்தமாய கோர தவங்களைச் செய்பவர் தமது சரீரத்தையும் அது வாயிலாக அதனுள் போக்திரு வடிவமாயுள்ள பரமேசுவரனையும் வீணே யிளைக்கச் செய்கின்றனர், அத் தவங்களால் அவர்க்கு வரும் பயன் துன்பமேயா மென்பதும் போக்திரு வடிவமா யுள்ள பரமேசுவரனை யிளைக்கச் செய்வது அப்பரமேசுவரன் கூறிய சாஸ்திர விதியைக் கடப்பதா மென்பதும், பரமேசுவரன் அந்தக்கரணத்தில் சீவ ரூபமாகப் பிரதிபிம்பித்து அச் சீவ ரூபத்தால் போக்திரு வடிவமா யிருக்கின்றா னென்பது மிங்குணர்தற்பாலனவாம் போக்திரு - போகத்தை யனுபவிப்பவன், போகம் சுக துக்க அனுபவம்

¶ தின்பன, நக்குவன சுவைப்பன, உண்பனவென்று ஆகாரம் நான்கு வகையா யிருப்பினும், அவை (சர்வ பதார்த்தமும்) முக்குண வடிவமாக விருத்தலின், அக் குண பேதத்தால் மூன்று வகையாகவே யிருக்கின்றனவென்பதும், யாகம் - தவம் - தானம் என்பனவும் குணபேதத்தால் மும்மூன்று வகையாகவே யிருக்கின்றனவென்பதும் இங்குணர்தற் பாலனவாம்

## பகவான் ஆகாரம் குண பேதத்தால் மூன்று வகையா யிருத்தலைக் கூறல்.

*சத்துவகுண முடையாரது ஆகாரம்.*

போரில் பின் வாங்காமையால் சிங்கவேற்றை யொத்த அருச்சுனா! சத்துவ குண முடையார்க்குப் பிரியமாயுள்ள ஆகாரங்களை யுரைக்கு மிடத்து, அவை: பார்த்த வளவில் சித்தத்திற்குப் பிரியத்தை யுண்டாக்கு மழகைப் பொருந்தி, மதுரமான சுவையினை யுடையனவாய், நெய்யின் சம்பந்தத்தால் பசையா யிருப்பனவாய், சிநேகத்தோடுகூடிச் சரீரத்திற்குச் சாமர்த்தியத்தையும் நோயில்லாமையையும் பெருகச் செய்து, உற்சாகத்தையும் பூரண ஆயுளையும் இன்பத்தையும் விருத்தியாகச் செய்வனவாம். இவ்வாறுய ஆகாரமே சத்துவகுண முடையார்க்குரிய ஆகாரமாம். ‡

*இராசத குண முடையாரது ஆகாரம்.*

வேற்படையை யுடைய அருச்சுனா! இங்ஙனமாய ஆகாரமன்றி, இவற்றிற்கு வேறுயுள்ள இராசதகுண முடையார்க்குப் பிரியமாயுள்ள ஆகாரங்களைக் கூறுமிடத்து, அவை: கைப்பனவும், புளிப்பனவும், உவர்ப்பனவும், உறைப்பனவும், மிக வெப்பம் பொருந்திய நெய்யோடு கூடினவாய் நெருப்புப்போல மிகுதியாகச் சுடுவனவுமாக இருப்பனவாம். இவ்வாகாரங்களாலே உடம்பிலே (வாத பித்த சிலேத்தும முதலிய தாதுக்களின் வேறுபாடுவாயிலாகக்) கொடிய நோய்களும், சித்தத்திலே பெருந் துக்கமு முண்டாவனவாம். †

*தாமத குண முடையாரது ஆகாரம்.*

அருச்சுனா! இராகத் துவேஷ முதலிய தோஷங்களை யடைந்துள்ள சித்தமுடைய தாமத குண முடையார்க்குப் பிரியமாயுள்ள ஆகா

‡ சிநேகம் - பிரிவின்மை; இன்பம் - உண்டபின் உண்டாகும் மகிழ்ச்சி.

† வேம்பு முதலிய ஆகாரங்கள் கைப்பனவாம்; கைப்பு - கசப்பு. எலுமிச்சை முதலிய ஆகாரங்கள் புளிப்பனவாம்; உப்பு முதலிய ஆகாரங்கள் உவர்ப்பனவாம்; மிளகாய் முதலிய ஆகாரங்கள் உறைப்பனவாம்; உண்ணும்போது மிகுவெப்பம் பொருந்திய நெய்யோடு கூடிக் கையும் வாயும் சுடுதற்கேதுவாய ஆகாரங்கள் மிகச் சுடுவனவாம். இவ்வாகாரங்கள் ரோகத்தையும் சோகவடிவ துக்கத்தையும் தருதற் கேதுவா யிருத்தலின், இவை விடுதற்குரியனவாமென்க.

ரங்களைக் கூறுமிடத்து, அவை ஊசிய பழஞ்சோறும், எச்சிற்சோறும், தேவர்களின் ஆராதனத்திற்காகாதனவும், இகழ்தற்குரிய மாமிச முதலியனவும், செவ்வையாக வேகாதனவும் பிறவுமாம். இவ்வாகாரங்களாலே பிறரை வெறுத்தற் சேதுவாய சின முதலியனவும் துன்பங்களு முண்டாவனவாம். ‡

பகவான் சாத்துவிக முதலிய மூவகை யாகங்களைக் கூறல்.

சாத்துவிக யாகம்.

மாலையால் விளங்குகின்ற மார்பை யுடைய அருச்சுனா! "இம்மை மறுமை யென்றும் தேகநா னென்று முளளே விரவிய" மோகத்தால் உடையப்படும் பயனைச் சிறிதுங் கருதாது, இவை நம்மால் அத்தியாவசியகமாகச் செய்யத்தக்கனவாமென்று நிச்சயித்து, விளக்கமிக்க சாஸ்திர விதிப்படி செய்கின்ற யாகங்கள் சாத்துவிக யாகமாம்.

இராசத யாகம்

சுவர்க்காதிப் பயனை விரும்பியாவது பலர் புகழவேண்டி இடம்பத்தின் பொருட்டாவது செய்கின்ற யாகமனைத்தும் இராசத யாகமாம்

தாமத யாகம்.

சாஸ்திரங்கள் கூறும் விதி யில்லாமலும், அந்த யாகம் செய்வதனைக் கண் நுட்பமாய் நோக்கி யுடைய ருத்துவிக்குகளின் காற்பரிய மில்லாமலும் (அந்த ருத்துவிக்குகளிடத்துச் சிரத்தை யில்லாமலும்), கிரமமாக ஜபிக்கத்தக்க மந்திர மில்லாமலும், வந்து யாசிப்பவர்க்கு யாதொன்றுங் கொடுத்த லில்லாமலும் செய்கின்ற யாகங்கள் தாமத யாகமாம். *

‡ பிறவும் என்றமையால், இரசமற்ற ஆகாரமும், தீ நாற்றமுடைய ஆகாரமும் கொள்ளற்பாலனவாம் இங்குக் கூறிய ஆகாரங்கள் ரோகம் சோகம் துக்க முதலியவற்றைத் தருவனவாமென்பது மிகு பிரசித்தமா யிருத்தலின், இவையும் விடுதற்குரியனவாமெனக

* அக்கினிஹோத்திரம் தரிசபூரண மாசம் சாதுர்மாசியம் - ஜோதிஷ்டோமம் முதலிய யாகங்களைச் சுவர்க்காதிப் பயன் கருதாது செய்தவிடத்து அவை சாத்துவிக யாகமாம், அவற்றைச் சுவர்க்காதிப் பயனை யுத்தேசித்தாவது இடம்பத்தை யுத்தேசித்தாவது செய்தவிடத்து அவை இராசத யாகமாம், அவ்வக்கினி

## பகவான் சத்துவகுண தவம், இராசதகுண தவம், தாமதகுண தவமெனத தவததை மூன்று வகையாகக கூறுதறபொருட்டு, வாககு - மனம் - காயமென்னும் திரிகரண பேதததாலே தவம் மூவகையா மெனக கூறல

அககினிபோல விளஙகும வேறபடையை யுடைய அருசசுனு! தவத தொழில வாககால வசஙகிதகல, மனதகாற செயதல. காயத தாற செயதல என மூவகையா யிருபபதாம ஆராயசசி வாயிலாக வாககு - மனம - காயமெனனு மித திரி சரணஙகளாலு முணடாகுந தவஙகளை நுடபமாகக கூறுகினறேன, நீ கேடசககடவாய.

வாசசாற செயயும தவம

பரிசுதத்னை அருசசுனு! சேடபார பாலாசகும அவாதம செவிககுப பிரியமான பெருமை பொருநதிய அமிரதமே யெனறு சொலலததகககதாய வாரததைககூறுதலும, ஆராயநது சததிய வசனத தைக கூறுதலும, வேத மோதுதலும வாககாற செயயும தவமாம $

ஹோததிர முதலியவறறைச சாஸதிர விதி முதலியனவிலலாது செயதவிடடதோ அவை தாமத யாகமாம இம மூவகை யாகஙகளுள, சாததுவிக யாகம சிதத சுததி யையுணடாககுவதறகு முககிய காரணமாக விருபபதாம,இராசத யாகம சிதத சுத தியை யுணடாககுவ தனறும, ஆனால சுவாககாதிப பயனை யடையச செயவதற கேதுவாய தருமம அலலது அறமெனனும அபூரவததை யுணடாககுவதாம, தாமத யாகம எநதத தருமவடிவ அபூரவததையு முணடாககுவ தனறும, ஆனால, அதருமம அலலது பாவமெனனும அபூரவததை யுணடாககுவதறகு முககிய கார ணமாக விருபபதாம அதருமததால துககமனறிப பிறிதொன றுணடாவ திலலை யெனபது மிகு பிரசிததமாம

$ தனனைக கேடபவாககு வருததததைச செயயாததும, சுகததைத தருவ தும, அமிரதமபோல எபபோது மினபததைத தருவதுமாய வாரததையைக கூறு தலும, பிரமாண முடையதும பிறிதொரு பிரமாணததால மாறுவதாகாதது மாய சததிய வசனததைக கூறுதலும, வேதாததியயனம செயதறகுரிய நியமந தவறாது வேதாததியயனஞ செயதலும வாககாற செயயும தவமாமெனக

ஒருவா மறறொருவாககு யாதாவதொனறனைக கூறுமிடததுத துககததை யுணடுபணணாததாயும, சததியமாயும, பிரியமாயு இதமாயும, மிதமாயுமுளள வாரததையைக கூறல வேணடு மெனபதாம

மனததாற செயயும தவம

அருசசுனு! விஷய இசசைபால தெளிவடையாதுளள மனத தைதத தெளிவடையுமாறு சமாதியபபியாசததால வசமாககுதலும, சபதாதி விஷயஙகளில செவி முதலிய இநதிரியஙகளின வாயிலாகச சென றடைநது மயஙகும மனததை அம மயககததினினறு நீககு தலும, குரூர விருததியை மனததில கொளளாதிருததலும செயதற கரிய மானச தவமாம ¶

காயததாற செயயும தவம

விலவீரருள தலைவனுக வுளள அருசசுனு! சதாசார முடைய பிராமணரிடததும, பிரஹமா - விஷணு - சிவன - சூரியன - அக கினி - துாககை முதலிய தேவதைகளிடததும, தநதை - தாய - ஆசிரியா - தததுவஞானிகள முதலிய குரவரிடததும, மயகக மின றித தொணடு செயதலும, பிராணிகளை யிமசை செயயாமையும, சாஸதிர நிஷிததமா புணாசசி மைதுனததை யொழிததலும காயததாற செயயும தவமாம †

¶ சமாதியாவது மனம ஒருமுகமாய ஆதம சிநதனை செயவதாம மனத தைச சமாதி யபபியாசததால தனவசமாககுதலும, அது விஷயஙகளிற சென று மயஙகுதலை விசாரணையா லொழிததலும, அதனிடதெழும குரூர விருததி யெனனும கோபததைப பெருகாவா றடககுதலும மனததாற செயயும தவமா மெனக

† தததுவ ஞானிகள எசசாதியாரிலு முணடெ பறறி, அவா குரவருள ஒருவராகக கூறபபடடனா இதனுல, தததுவ ஞானிகள பிராமணராகவே யிருததல வேணடுமெனனும நியம மினறுமெனபது பெறபபடடவாறறிக

சதாசாரமுடைய பிராமணரையும, தேவதைகளையும, குரவரையும பூசிதத லும, கொலை செயயாமையும, சாஸதிரநிஷிததமாய புணாசசி யினமையும காயத தாற செயயுந தவமாமெனக

சதாசாரமுடைய பிராமணா முதலாயினேனாககுச சாஸதிரம விதிததவாறு சிரததை பகதியோடு அவரவாதம தகுதிககேறப நமஸகாரம சேவை தட சிணை - அனனதான முதலியவறறைச செயதலே அவாவாககுத தொணடு செயதலாம

சாஸதிர நிஷிததராயுளள மைதுனததை யொழிததலு பிரஹமசரியமா மெனபதிங குணாதறபாலதாம நிஷிததம - விலககு இஙகுக கூறிய பிராணி

வாசகு, மனம், காயமென்னும் பேதத்தால தவத்தை மூன்றுவகையாகக் கூறியருளிய பகவான் அத்தவம் சாத்துவிகம், இராசதம், தாமத மென்னும் குணபேதத்தாலும் மூன்று வகையாமெனக் கூறல்.

### சாத்துவிக தவம்

அக்கினிபோல விளங்குங் கூர்மைவாய்ந்த வேற்படையை யுடைய அருச்சுனா! யாம் கூறிய வாசகு - மனம் - காயமென்னு மிம்மூன்றும் உலகத்தார் மகிழ்வடையச் செய்கின்ற அரிய தவங்களுள், ஒருவன் என்கின்ற அபிமானத்தால் தன்னிடம் பக்தி யுண்டாகும் பயனை விரும்பாது செய்கின்ற அரிய தவமானது சாத்விக தவமென்று தக்கோரால் சொல்லப்படுமாம் ‡.

### இராசத தவம்

அருச்சுனா! இவர் குற்றமிலாத தவமுடையரென்று உலகத்தார் சிறப்பித்துக் கூறும் பொருட்டும், அவிவேகிகள் செய்யும் பூசையை விரும்புதலுடன், பிறரிடத்துப் பொருளைத் தானமாகப் பெறுதற் பொருட்டும் இடம்பமாகச் செய்கின்ற தவத்தை மிகப் பெரியோர் செய்தாராயினும், இதனை இராசத தவமென்று நீ பொருந்துமாறு உணர்வாயாக *.

கள் யிம்சை செய்யாமையும் சாஸ்திர விஷித்தமாயுள்ள மைதுனத்தை யொழித்தலுமாகிய விரண்டும் பிறர் பொருளைக் களவு செய்யாமையையும், பிறரிடத்தொன்றை யிரவாமையையும், மண்ணாலும் நீராலும் உடம்பைச் சுத்தி செய்தலையும் உணர்த்தி நின்றன வெனக.

‡ ஒருவர் பயனை விரும்பாது மன வொருமையோடு மிக்க சிரத்தையாக வாக்கு மனம் காயபேதத்தால் மூன்று வகையாக வுள்ள தவத்தைச் செய்வாராயின், அது சாத்துவிக தவமாமெனக.

*அவிவேகிகள் செய்யும் பூசையாவது ஆசனத்திருத்திப் பாதபூசை செய்து வணங்குதலாம்.

உலகத்தார் கொண்டாடுதற்பொருட்டும், அவிவேகிகள் செய்யும் பூசையின் பொருட்டும், பிறரிடத்துப் பொருளைத் தானமாகப் பெறுதற்பொருட்டும் செய்கின்ற தவம் இராசத தவமெனக. இது சாத்துவிக தவம்போல இம்மைப் பயன், மறுமைப்பயன், மோட்சமென்னு மூன்றையும் தருவதற்குக் காரணமாவதில்லையாம், ஆகுல, இம்மைப் பயனொன்று மாத்திரம் தருதற்குக் காரணமாவதாம், அதனையும் நியமமாகத் தருவதற்குக் காரணமாவதில்லையா மெனக.

தாமச தவம்

பூந்தாது சிந்துகின்ற மலர் மாலை பொருந்திய நீண்ட முடியை யுடைய அருச்சுனா! ஒருவன் அவிவேசத்தைப் மிகவு முடையவனாய், தனக்கும் பிறர்க்கும் குற்ற மிக்க பெருந் துக்கத்தையும் நாசத்தை யுமே செய்வதாசப் பகலில் சூரியனாலும் இரவில் பனியினாலும் உடல் வருத்தமுறச் செய்கின்ற அரிய தவமானது தாமத தவமாம் $

பகவான் தானமும் சாத்துவிக முதலிய குணபேதத்தால மூன்று வகையாமெனக் கூறல்

சாத்துவிக தானம்

அருச்சுனா! ஒருவன் முன்னே தனக்கொருவர் ஒரு சாரியஞ் செய்திருப்பதன்பொருட்டு அவர்க்குத் தானஞ் செய்வ தில்லாமலும், தானத்தைச் செய்து முடித்து, இத்தானத்தால பின்னே ஒப்பற்ற சிறந்தபொருள்களுண்டாகு மெனபதை விரும்பாமலும், (இத் தானம் அத்தியாவசியகமாகச் செய்யத் தக்கதா மென்று நிச்சயித்து,) உத்தம காலத்திலே உத்தம தேசத்திலே உத்தமாசருக்குத் தனனுடைய பொருளைக் கொடுப்பதே சாத்துவிக தானமாம் §

இராசத தானம்

திக்கெட்டும் நிறைந்த புகழை யுடைய அருச்சுனா! ஒருவன் இத் திரவியத்தைக் கொண்டு நாம அத்தியாவசியகமாகச் செய்யத

$ ஒருவன் அவிவேகத்தின் மிகுதியால் தனக்கும் பிறர்க்கும் துக்கத்தை யும் நாசத்தையும் தரும் தவத்தைப் பகலில் வெயிலாலும் இரவில் பனியாலும் தன்னுடல் வருந்தச் செய்வானாயின், அது தாமத தவமாமெனக இத்தவம் இம்மையிலும் மறுமையிலும் துன்பந் தருவதற்கே காரணமாக விருப்பதாம்

§ தனக்கொருவ ருபகாரஞ் செய்திருப்பது நோக்கி, அவர்க்குத் தானஞ் செய்வதும், தானத்தால் வரும்பயனை நோக்கி அதனைச் செய்வதும் சாத்துவிக தானமன்றாம், ஆனால், தனக்கொருவ ருபகாரஞ் செய் திருப்பதையும் தனக்குப் பின்வரும் பயனையும் நோக்காது, உத்தம காலத்திலே உத்தம தேசத்திலே உத்த மாக்குச் செய்யும் தானமே சாத்துவிக தானமா மெனக உத்தம காலம் - சூரிய கிரகணமுதலிய காலமாம், உத்தமதேசம் - குருக்ஷேத்திர முதலியனவாம், உத்த மா - வித்தையும் தவமுமுடையவா பின்னே ஒப்பற்ற சிறந்த பொருள்க ளுண் டாகு மெனபது மறுமையிலே சுவர்க்கங்கிடைக்கும், நல்ல மனைவி மக்கள் முத லாயினோருண்டாவர், பூரணமாக ஐசுவரிய முண்டாகும் எனபதாம்

தக்க காரிய மிதுவா மென்னுங் கருத் தொன்று மில்லாது, முன்னே சிலர் தனக் குபகாரஞ் செய்திருப்பதற்குப் பிரதி யுபகாரமாக அவர்க்குப் பிரியத்தோடு செய்கின்ற தானங்களும், இத்தானம் செய்வதால் மறுமைப்பய னுண்டாகுமென் றாராய்ச்சி செய்து செய்கின்ற தானங்களும் இராசத தானமாம்.¶

## தாமத தானம்.

தளர்வற்ற பெருந் திறலுடைய அருச்சுனா! ஒருவன் தனக்கு நியாய வழியில் கிடையாததாகிய ஒரு பொருளைத் தானஞ் செய்தற்குரியதாகாத காலத்திலே தானஞ் செய்தற் குரியதாகாத விடத்திலே கீழ் மக்களுக்கு அவிவேகத்தோடும் அப்பிரியத்தோடும் கொடுத்தல் தாமத தானமாம். $

ஆகாரம் - யாகம் - தவம் - தானமென்பன சத்துவ முதலிய குண பேதத்தால் மும்மூன்று வகையாம்; அவற்றுள், சத்துவ ஆகாரம், சத்துவ யாகம், சத்துவதவம், சத்துவ தான மென்பனவே சிறந்தனவாமென்று குறிப்பித் தருளிய பகவான் சத்துவ ஆகாரம் ஒரு வகையால் சித்த சுத்தியைத் தருவதாயினும் சுவர்க்க முதலிய பயனை யடைதற்குக் காரண மாகாமையின், அதனை யொழித்து, சத்துவ யாக முதலியன யாதேனு மொரு தோஷ முளதாயின், புண்ணியப் பயனைத் தருதற்குக் காரணமாகா தொழிதலின், அவற்றைச் செய்யும்போது பிரமாதத்தா லுண்டாகும் தோஷம் நீங்குதற் பொருட்டு ஓம் தத் சத் என்று உச்சரித்துக்கொண்டு அவற்றைச் செய்யத் தொடங்கல் வேண்டுமென்று கூறல்.

---

¶ பிரதி யுபகாரத்தின் பொருட்டாவது சுவர்க்காதிப்பயன்களின் பொருட்டாவது செய்யும் தானம் இராசத தானமாமென்க.

$ இங்கு உத்தம காலத்திலே உத்தம தேசத்திலே உத்தமர்க்கு ஒருவர் அவிவேகத்தோடும் அப்பிரியத்தோடும் பொருளைக் கொடுப்பாராயின், அதுவும் தாமத தானமா மென் றுணர்தல் வேண்டும். தானஞ் செய்தற் குரியதாகாத காலம் ஆசௌச காலமாம்; ஆசௌசம் - தீட்டு. தானஞ் செய்தற் குரியதாகாத விடம் துஷ்டர்களின் சம்பந்தத்தாலாவது இயல்பாகவாவது பாவத்தை யுண்டாக்குவதற் கேதுவாய இடமாம்; கீழ்மக்கள் - நடர் விடர் முதலாயினோர். நடர் - கூத்தாடிகள்; விடர் - தூர்த்தர்.

அருச்சுனா! சத்துவ குண முதலியவற்றின் வேறுபாட்டால் தம்முள் ஒப்பாதலில்லாத ஆகாரம் - யாகம் - தவம் - தானமென்பன மும்மூன்று வகையாக விருக்குமென்று பெரியார் கூறிய அந்த வகையனைத்தையும் உனக்கு விளங்குமாறு கிரமமாகக் கூறினேன். சுருதி சம்மதமும் பெரியோர் சம்மதமாயு முள்ள சாத்துவிக யாகம் - சாத்துவிக தவம் - சாத்துவிக தான மென்பவற்றைச் செய்ய அவற்றால் மோட்சமடைதற்குரிய உயர்ந்த தருமமான துண்டாவ தெவ்வாறு மென்று நீ வினவுவாயாயின், அதற்கு விடை கூறுகின் றேன், கேட்கக் கடவாய்.

மணிமாலையும மணம் பொருந்திய மலர்மாலையும் தரித்த மார்பினையுடைய அருச்சுனா! ஓம் என்னும் ஏகாட்சரமும், துதி செய்தற் கரிய தத் என்னும் பதமும், சத் என்னும் ஒப்பற்ற பதமுமா மென்று கூறப்படுகின்ற ஓம் தத் சத் என்னும் இம்மூன்றும பரப்பிரஹ்மத்தின் பெயர்களாம். ஓம் தத் சத என்னு மிவற்றாலேயே பிராமணர் முதலிய கருமகர்த்தாவும், யாம் முன்பு உணர்ந்துள்ள காரணரூபமான வேதமும், கரும ரூபமான யாகமும் சிருட்டியி னாதி காலத்திலே பிரஹ்மாவின் வாயிலாக வுண்டாயின வென்பதை நீ அறியக்கடவாய். §

§ பிரஹ்மா சிருட்டியினாதிகாலததில் பிராமணர்முதலிய கருமகர்த்தாவையும் காரணரூப வேதத்தையும் கருமரூப யாகத்தையும் ஓம் தத் சத் என்னும் பரப்பிரஹ்மத்தின் பெயராலேயே படைத்தன ரென்பதாம். பரப்பிரஹ்மத்திற்கு அகார-உகார - மகார மென்னு மூன்றவயங்களுடைய ஓம் என்னும் பிரணவம் பெயராயிருத்தல்போல, ஓம் தத் சத் எனனு மூன்றவயவமுடைய ஓம் தத் சத் என்பதும் பெயரா யிருக்கின்றமையின், ஓம் தத் சத் என்று ஸ்மரணஞ் செய்து கொண்டு, யாகம் - தவம் - தானமென்பவற்றைச் சத்துவகுண பூர்வகமாகச் செய்ய முயல்பவர்க்கு அவை பிரமாதத்தாலுண்டாகும் தோஷம் நீங்கப்பெற்றுத் தம் பயனைத் தவறா தளிப்பனவா மென்பதிங் குணர்தற்பாலதாம்.

பிராமணர் முதலிய என்றமையால், க்ஷத்திரியரையும் வைசியரையுங் கொள்க.

பிரஹ்மா சிருஷ்டியி னாதி காலத்தில் பிராமணர் முதலிய கருமகர்த்தாவையும் காரணவடிவ வேதத்தையும் கரும வடிவ யாகத்தையும் உண்டாக்குவதற்கு ஓம் தத்சத் என்னும் பரப்பிரஹ்மத்தின் பெயர் காரணமாயிருந்தமையின், ஓம் தத்சத் என்றே ஸ்மரித்துக்கொண்டு, யாக முதலியவற்றைச் செய்தல் அவை தோஷமின்றி முற்றுப் பெறுதற்குக் காரணமா யிருக்கின்ற தென்பது பெறப்படுவதா மென்க.

# 18 - சந்நியாச அத்தியாயம்.

## பகவான் அருச்சுனனுக்குத் திட நிச்சய முண்டாதற் பொருட்டு இவ்வத்தியாயத்தின்கண் சோக அத்தியாய முதல் குணவிகார அத்தியாய பரியந்தங் கூறிய அர்த்தங்களைச் சங்கிரகித்துக் கூறல்.

அருச்சுனன் வினா

ஏகமே கருத்துவா ரிதயமே விளைவதோர் போகமே! உலகிலோர் பொருவிலா வொருவனே! நாகமே மமளியாய் நளினமே மலர்வதோர் மேகமே! வன்னிவாயு வானமாகி மண்ணு நீரு மாகி யோனே! தேவரீர் இதுகாறும் கூறியவற்றுள், சந்நியாச மென்பதையும் தியாக மென்பதையும் யான் முறையாக அறியாதிருக்கின்றேன், உள்ளவா றவற்றை அடியேனுக்குத் திருவாய்மலர்ந்தருளல் வேண்டும் ‡

பகவான் விடை

அருச்சுனா! பழைமையாயுள்ள சந்நியாசம்-தியாக மென்பனவற்றின் பொருள்களைச் சங்கிரகமாகத் தனித்தனி கூறுகின்றேன், நீ கேட்கக்கடவாய்

அருச்சுனா! புருஷார்த்த விருப்பத்திற்குரிய விஷயங்களென்று கூறப்படுகின்ற மக்கள் மனை பசு முதலிய பயன்களைத் தரும் கருமங்களையும் அவற்றின் பயனோடு முற்றும் விட்டுவிடுவது சந்நியாச சப்தத்தின் பொருளாம், இவ்வுலகத்தில் யாதொரு மயக்கமு மில்லாது கரும பலன்களையும் இவை துன்பந் தருவனவாமென் றுணர்ந்து முற்றும் விட்டுவிடுவது தியாக சப்தத்தின் பொருளாம் ¶

---

லாகச் சாத்துவிக வடிவ யாக முதலியவற்றைச் செய்பவர் தேவராவர், அசுர சாஸ்திரங் கூறும் ஞான சாதனங்களுக்கதிகாரி யாவரென் றிவ்வாறாய நிர்ணயம் பகவானால் அருளிச்செய்யப்பட்டதெனக

‡ ஏகம் பரம்பொருள், இதயம் சித்தம், போகம் பேரின்பம், பொருவிலா ஒப்பிலாத, நாகம் ஆதிசேஷன், அமளி பாய், நளினம் செந்தாமரை மலர், வன்னி - தீ, வானம் ஆகாயம்

¶ காமிய கருமங்களையும் விட்டுவிடுதல் சந்நியாசமாம், கருமங்களை விடாமல் அவற்றின் பயனை மாத்திரம் விட்டுவிடுதல் தியாகமாமென்பதிங் குணர்தல் வேண்டும்

## பகவான் சந்நியாச சப்தத்திற்கும் தியாக சப்தத்திற்கும் தாம் கூறிய பொருள்களை வற்புறுத்துதற்பொருட்டு, சாங்கியர் முதலாயினோரது மதங்களைக் களைய அவர்தம் மதங்களைக் கூறல்.

### சாங்கிய மதம்.

அருச்சுனா! சாங்கிய சாஸ்திரத்தைப் படிக்கும் தலைமுடைய பெரியார் துன்பங்களைச் செய்கின்ற பல்வேறு திறத்தனவாயுள்ள பாவ கருமங்களை விட்டுவிடுதல் போல இவ்வுலகத்தில் கருமாதிகாரி புருஷர் செய்கின்ற பல்வேறு திறத்தனவாயுள்ள புண்ணிய கரும மனைத்தையும் அவை பந்த காரணமா யிருத்தலால் அந்தக்கரணசுத்தி யில்லாத கருமாதிகாரிகளும் அனுஷ்டியாது விட்டுவிடுதலையே சந்நியாச-தியாக சப்தங்களின் பொருளாகக் கூறுகின்றனர். §

### பூர்வமீமாம்சக மதம்.

அருச்சுனா! பூர்வமீமாம்சகர் யாக - தான - தவ ரூபமாயுள்ள கருமங்கள் அந்தக்கரணசுத்தி தருவது வாயிலாகத் தத்துவஞான முண்டாதற்குக் காரணங்களா யிருத்தலின், இவற்றைப் பரித்தியாகஞ் செய்வது எவர்க்கும் தகுதியுடைய தன்று மென்று கூறுவர். அவர்

---

சுவர்க்க போக முதலியவற்றை விரும்பிச் செய்யும் சோதிஷ்டோம முதலியன காமிய கருமமாம். சோதிஷ்டோம முதலியன தம்மைப் பயனோக்கிச் செய்யும்போது காமிய கருமமாய்ச் சுவர்க்காதி போகத்தைத் தருவது வாயிலாகப் பந்த வேதுவாயும், பயனோக்காது செய்யும்போது நிஷ்காமிய கருமமாய்ச் சித்தசுத்தி தருவது வாயிலாக மோட்சவேதுவாயுமிருக்கின்றன வென்றும், நித்திய - நைமித்திக கருமங்களும் தம்மைப் பயனோக்கிச் செய்யும்போது காமிய கருமமாயும் பயனோக்காது செய்யும்போது நிஷ்காமிய கருமமாயுமிருக்கின்றன வென்றும், காமிய கருமத்தை விடுதல் சந்நியாசமாமென்றும், நிஷ்காம கருமத்தைச் செய்தல் தியாகமாமென்று மிங்குணர்தற்பாலனவாம்.

§ சாங்கிய நூலார் நித்திய-நைமித்திக-காமிய-பிராயசித்த முதலிய கரும மனைத்தும் தம்மைச் செய்கின்றவனுக்குப் பந்தவேதுவாக விருத்தலின், தோஷமுடையனவாம்; அதனால், அந்தக்கரணசுத்தி யில்லாத கருமாதிகாரிகளும் கரும மனைத்தையும் பரித்தியாகஞ் செய்தல் வேண்டும்; இதுவே சந்நியாசமும் தியாகமுமாமென்று கூறுகின்றனரென்ப திங் குணர்தற்பாலதாம். தீவினைகளைச் செய்யா தொழிதல்போல நல்வினைகளையும் செய்யா தொழிதலே சந்நியாசமும் தியாகமுமா மென்பது சாங்கியரது கொள்கையாம்.

அஙஙனங கூறுங காரணததால, அறிய வேண்டிய ஆத்மாவை யாருக அறிநது மன மொழி மெயக ளடஙகி யிருபபவாககலலாமல மறறவா கககு யாக-தான-தவ ரூபமாயுளள கருமஙகளை விடடிருததல கூடாது ; அவறறை விடின, அஃகவாககு இழிவைத தருவதாம. $

## கருமத தியாகததில வாதிகளின் கோளகையைக கூறிய பகவான் தமது துணிபைக கூறல்

அருசசுன! கருமததியாகம தாமத-இராசக-சாததுவிகமெனனு முககுண பேதததால மூவகைததாம, அவறறைக கூறுகினறேன, ௦ நீ கேடகககடவாய

யாகம-தானம-தவமெனனு மிமமூனறும தமமைப பயனைககாது செயபவரது சிததததின மயககததை யொழிபபனவாம, அக காரணத தால ஆராயநது கூறுமிடதது யாகம தான முதலிய கருமஙகளை யெவ ருமம விடுகல கூடாது. *

அருசசுன! நீ யாக தான முகலியவறறை அதிகாரி புருஷா எவ வாறு செயகல வேணடுமெனறு வினவுவாயாயின, அதறகு விடை கூறுகினறேன, கேடகககடவாய

$ பூாவ மீமாஞசகா யாக-தான-தவ ரூப மாயுளள கருமஙகள அநதககரண சுததி தருவது வாயிலாகத தததுவஞான முணடாதறகுக காரணமா யிருததலின, அவறறை யெவரும பரிததியாகஞ செயதல கூடாது, செயயின, அவா பதிதராய விடுவ ரெனறு கூறுகினறன ரெனபதிங குணாதறபாலதாம

பகவான சாஙகிய மதம பூாவ மீமாஞசக மத மெனனு மிரணடனுள, முனனதை யஙகீகரியாது பினனதை யஙகீகரிததது, அஃது ஆதம ஞானிகளுககு வேணடியதனறும, மறறவாககு வேணடுவதாமெனக கூறினரெனக

* எவரு மெனறது சிதத மயககமுடையவரை சிதத மயககம-மனம காமம வெகுளி முதலியவறறால கலககமுற றிருபபதாம இஙகுக கூறிய கருமத தியாக மூனறனுள, தாமத கருமத தியாகமும இராசத கருமத தியாகமும கொளளப படுவன வனறும, மறறது கொளளபபடுவதாமெனப துணிரறபாறறும,

யாக தான முதலிய கருமஙகளை விபரீத புததியால செயயா தொழிதல தாமத கருமத தியாகமாம, துனபந தருவதெனனும புததியால செயயா தொழிதல இராசத கருமததியாகமாய, அநத யாகப தான முதலியவறறைப பயனை விருமபாது செயதல சாததுவிக கருமத தியாகமாம

யாகம் தானம் முதலிய இவ்வினைகளால் மறுமைக்கண்ணடையும் சுவர்க்காதி பலன்களையும் யானிக்கருமங்களைச் செய்கின்றேனென்னும் அபிமானத்தையும் விட்டு அந்த யாகம் முதலியவற்றை எவரும் செய்தல் வேண்டுமென்பது பூர்வாசாரியர்க்கும் பரமேசுவரனான எனக்கும் சம்மதமான காரியம் ‡.

## பகவான் தாமத கருமத் தியாகத்தைக் கூறல்

கீர்த்தியுடைய அருச்சுன! நித்தியம் முறையாகச் செய்தற்குரிய தாய கருமத்தை யொருவன் உன்மத்தனைப்போல விபரீத புத்தியால் செய்யா தொழிவதைத் தாமதத் தியாகமென்று சாஸ்திரங் கூறுகின்றது ¶.

‡ யாகம் தானம் தவமென்னுங் கருமங்களை இவற்றை யான் செய்கின்றேனென்னும் கர்த்திருத்துவ அபிமானத்தை விட்டும் சுவர்க்காதி பலத்தை விரும்பாது செய்தல் வேண்டுமென்பது பரமேசுவரனது சம்மதமும் பூர்வாசிரியரது சம்மதமுமாமென்க.

காமிய கருமங்களாலும் மனத்தூய்மை யுண்டாவதாம். அத்தூய்மை போக சித்திக்குக் காரணமா யிருப்பதன்றி ஞான சித்திக்குக் காரணமா யிருப்பதில்லையாம், நிஷ்காம கருமங்களா லுண்டாகும் மனத்தூய்மையோ போக சித்திக்கும் ஞான சித்திக்கும் காரணமா யிருப்பதாமென்பதிங் குணர்தற்பாலதாம்.

¶ நித்தியம் முறையாகச் செய்தற்குரியதாய கருமம் நித்திய கருமமாம். நித்திய கருமம் - அக்கினிஹோத்திரம் சந்தியாவந்தனம் முதலியனவாம். நித்திய கருமத்தைத் தியாகஞ்செய்தல் வேண்டுமென்பவர் சாங்கிய நூலாராவர். அவர் காமிய கருமந் தோஷ முடையதாவதுபோல நித்திய கருமமும் தோஷமுடையதாம், நித்தியகருமஞ் செய்யும்போது நெல் முதலியவற்றைக் குத்துவதாலும், யாகசாலையைச் சுத்தஞ் செய்வதாலும், அக்கினியில் ஹோமஞ் செய்வதாலும் பிராணிகட்குத் துன்ப முண்டாகின்றது, அதனால், காமிய கருமத்தை விடுதல் போல நித்திய கருமத்தையும் விடுதல் வேண்டும், சித்த சுத்தியின் பொருட்டுக் காயத்திரி முதலிய மந்திர ஜபஞ் செய்தல் வேண்டும், அதனால், சித்த சுத்தி யுண்டாவதாமென்று கூறுகின்றனர். காயத்திரி முதலிய மந்திர ஜபம்போல நித்திய கருமமும் சித்த சுத்தி தருவதாமென்னு முணர்வில்லாமையாலே அவர் அங்ஙனங் கூறுகின்றனர். அவர் வேதவிகிதமான நித்திய கருமத்தில் நிஷித்த வுணர்வும், அநர்த்தத்திற்குக் காரணமாகாத அதில் அநர்த்தகாரண வுணர்வும், தருமமான அதில் அதரும வுணர்வும், அனுஷ்டானஞ் செய்தற்குரிய அதில்

